ஸ்ரீ

ஸ்ரீ மஹாபாரதம்

# அருச்சுனன் தீர்த்தயாத்திரை.

பவானி, தளவாய்பேட்டை

தே. ர. அரங்கநாதகவிராயர்

இயற்றியது.







சென்னை

கணேச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.



விலை ரூபா 2.

சித்தார்த்திரு

 1920

# சருக்க அட்டவணை.

இந்நூல் அச்சேறி உலகப்பிரசித்தியாக வேண்டுமெனப் பேரவாக்கொண்டு பேருதவியுடன் பெருமுயற்சிசெய்து எம்பால் உழுவலன்பினைப் பூண்டொழுகும்,

தளவாய்பேட்டை

கோ - ர. இலக்ஷ்மி நாராயணசெட்டியார்.

கோ - ஆ. அரங்கசாமி செட்டியார்

ச - ரா. பெருமாள் செட்டியார்

சத்திமங்கலம்

சு. சிவசம்பு செட்டியார். முதலிய அன்பர்களும்,

மற்றும் இந்நூல் அச்சியற்றற் கன்புடனிதியுதவிபுரிந்த வுத்தம புருஷர்களனைவரும் எல்லாம்வல்ல இறைவனருளால் இம்மை மறுமைப்பயனை யடையக்கடவர்களாக.

தே. ர. அ.

---

அறிவிப்பு.

இப்புத்தகம் வேண்டுவோர் அடியிற்குறித்த விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

தே. ர. வெங்கட்டராம செட்டியார்,

குமாரபாளையம்,

பவானி.



தே. ர. அரங்கநாதகவிராயர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

சேலம் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் மகாவித்வான்
பிரம்மஸ்ரீ டி. எஸ். நடராஜையரவர்கள் மாணாக்கரும்
ஷெ காலேஜில் உதவித் தமிழ்ப்பண்டிதருமாகிய
பிரம்மஸ்ரீ ரா. திம்மப்ப ஐயாவர்கள்
இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.



உலகின்கண் வழங்கும் பலவகை மொழிகளுள்ளும் அரியபெரிய காப்பியமாய்த்திலங்குவது வடமொழியில் வியாதனாரியற்றியருளிய மகாபாரதமேயாம். அஃது ஆதிபருவமுதலாகச் சொர்க்காரோகண பருவமீறாக நூற்றிருபத்தையாயிரங் கிரந்தமுடைத்து. பரமபதியாகிய எம்பெருமானது திருமுகங்களினின்றுந் தோன்றிய நான்கு வேதங்களோடு பயனாலுஞ் சரித்திரத்தாலு மொற்றுமை யுடைத்தாகலின் ஐந்தாம்வேதமென ஆன்றோர் அதனை வழங்குவாராயினார். வேதம், கிரியாகாண்டம் ஞானகாண்டம் என்னுமிருபகுதித்தா யெல்லாக்கலைகட்கும் எல்லா மந்திரங்கட்கும் பிறப்பிடமாய்ப் புருடார்த்தங்களை யறிதற்கருவியாய்க் கடவுளின் சொரூப விலக்கணங்களைத் தெரிவிப்பது. அவ்வாறே பாரதம் கிரியா ஞானமென்னும் இரண்டு பிரிவுகளையும் எல்லாக் கலைகளின் சாரங்களையும், மந்திரங்க ளொவ்வொன்றற்குமுரிய தேவர்களையும், நான்கு புருடார்த்தங்களையும், பதியிலக்கணங்களையும் சரித்திரமுகமாக விரித்துக்கூறுவது. மற்று, வேதத்திற்கூறிய தேவாசுரர்களே பாரதத்திற் கூறிய பாரதவீரர்களாகலானும், வேதம் ஓதுவார்க்கோதியமாத்திரத்தே பயன் றருமாறுபோலப் பாரதம் படிப்பார்க்குங் கேட்பார்க்கும் பயன்றருகின்றதாலும், ஐந்தாம்வேத மென்பது இதற்குப் பெரிதும் பொருந்துமென்க. அன்றிக் கண்ணபிரானருளிய கீதையைத் தன்னகத்தே கொண்டு மிளிர்வதாயின் இதன் உயர்தனிப் பெருமையை யளவுற நாட்டி நிலையிடுவ தெங்ஙனம்?

இன்னோரன்ன பற்பல சிறப்புக்களனைத்து மொருங்குணர்ந்தே பல மொழிப்புலவருந் தத்தம் பாஷைகளி லிதனை மொழிபெயர்த்துக்கொள்வாராயினர். உயர்தனிச்செம்மொழியும் வடமொழியோ டொப்பப் பீடுகெழீஇ யதுமாகிய நந்தஞ்செந்தமிழ் மொழியிற் பன்னீராயிர முதற்பாவினா லிதனை யாத்துத்தந்தார், தேடரும் புகழார் கூடலம்பதிச் சங்கப்புலவராம் பெருந்தேவனாரவர். காலவயத்தானே அந்நூற் செய்யுட்கள் பலவு மிறந்துபோயின. எஞ்சிய எண்ணூற்றுச் சொச்சம் பாடல்களே இப்போது கிடைத்துள. கிடைத்துமென்? அவைதானுமடங்க ஓர்நூலாய் வெளிவராதது தமிழ்மக்களின் தீவினையேயாம். இதனைநோக்கி யிற்றைக்கு ஐந்நூறு ஆண்டுகட்கு

முன்னர்ச் சனியூரில் அந்தண வைணவகுலத்துதித்து, நாற்கவித்திறத்தா ஞனிலமுழுது மிறும்பூதுபயப்ப, வரபதியாட்கொண்டானென்னுங் கொங்க வேந்தர் பெருந்தகையின் வேண்டுகோட்கிணங்கி, நாலாயிரத்து முந்நூற் றைம்பத்தெட்டுப் பாசுரங்களாற் பத்துப்பருவங்களை மாத்திரம் பாடித்தந்தார் பல்புகழ்நிறைந்த வில்லிபுத்தூரார் நல்லிசைப்புலவர். அதுதானுமுற்றுறாதாகவே நடுநாட்டிலுள்ள செங்காடென்னுமூரில் சுமார் நூற்றறுபது வருடங்களுக்கு முன், கல்வி செல்வங்களாற் கவின்பெற்றோங்கிய வள்ளல் வீராகவரெட்டி யாரின் மனத்துக்கிசையத் தொண்டைமண்டலத்திலே முதலம்பேடென்னும் சிற்றூரில் வாழ்ந்துவந்த கருணீக குலத்தோன்றலுங் கவிஞர்பிரானுமாகிய நல் லாப்பிள்ளை யென்பவர் தம்மோடொருங்குகலைபயின்ற முருகப்ப உபாத்தி யாயரின் உதவியையுஞ் சிறிதேகொண்டு, வில்லிபுத்தூராழ்வார் பாடியவற் றில் பெரும்பாலன கைக்கொண்டு சுருக்கியும் பெருக்கியு மிடையே பதினோ ராயிரம் பாடல்களைப்புனைந்து கோத்தும், தொகையிற் பதினோயாயிரத்து முந் நூற்றுச் செய்யுட்களாமாறு விரித்துப்பாடி முடித்தருளினார்.

இவர்களேயன்றிச் சௌத்திக பருவமுதலாகக்கொண்டு, சொர்க்கா ரோகண பருவமுடியப் பாடப்பெற்ற பாரதமொன்றுந் தமிழில் வழங்குகின் றது. அதனை யியற்றினார் அட்டாவதானம் அரங்கநாதகவிராயர்.

பெருங்காப்பியமாகிய இப்பாரதத்தில் மூர்த்த தல தீர்த்தங்களின் உயர் வும், தெய்வமணச்சிறப்பும், மலை கடல் நாடாதியவற்றின் வருணனையும், பொழில்விளையாட்டு விநோதமும்; மற்றும் பெருங்காப்பியத்துக்கேற்பட்ட இலக்கணங்கள் யாவுங்குறைவின்றி நிறைதற்குரிய பாகம் அருச்சுனன்றீர்த்த யாத்திரையின் வரலாறேயாகும். இப்பகுதியை வில்லிபுத்தூரார் தொண்ணூறு பாக்களாலும், நல்லாப்பிள்ளை இரண்டு தலையிட்ட விரட்டிகொடொண்ணூற் றுறு செய்யுட்களாலும் பாடியிருக்கின்றனர்.

இஃதிங்ஙனமாகத் திருஞானசம்பந்தமூர்த்திகளாற் றிருப்பதிகம்பெற்ற தும் திருநணுவெனவுந் திருமுக்கூடலெனவும் வழங்கி வருவதுமாகிய கொங்குநாட்டைச்சேர்ந்த பவானி யென்னு மூர்க் கைந்துமைல் தூரத்தி லுள்ள தளவாபுரி யென்னு மூரிலுதித்தவரும், எமதுழுவலன்புடைய வுத்தம நண்பரும், எத்துணையரியகவிகளையு நிமிடத்திற் பாடிமுடிக்கு மாற்றல் பெற்ற வரும், பவானியிற் புலவர்திலகராய்த் திகழ்ந்திருந்த பாலபாரதி முத்துச்சாமி ஐயரவர்களிடத்தில் இலக்கண விலக்கியங்களைக் கற்றுத்தேர்ந்தவரும், இங்ஙனம் பாடுதல் மிகவுமரிதரிதென அன்னாராலேயே பெரிதும் புகழப்பெற்ற வரும், தேவாங்ககுலம் புரிந்த நற்றவப்பயனா யுதித்தவரும், அத்வைதமதத்த வரும், தற்போது ஷை பவானியைச்சேர்ந்த குமாரபாளையத்தில் வசித்து வருப வருமாகிய ஸ்ரீமத் அரங்கநாத கவிராசரவர்கள், "தீர்த்த சேவையுந்தலத்தருஞ் சேவையுஞ் சிறந்த, மூர்த்தி சேவையும் மூம்மணக்காட்சியு முகுந்தன், சீர்த்தி யாடலுஞ் சிறப்புறநிரப்பி நிற்றலினிப், பார்த்தன் யாத்திரை பகர்ந்திட யானுமேபரிந்தேன்" என்று தாமிந்நூலைப்பாடுதற்குற்ற காரணத்தைத்தெரித் துத் தம்நண்பினோர் வேண்டிக்கொண்டதற்கிணங்கப் பெருங்காப்பியப்பண்புக

ளெல்லாமொருங்கே யமைதருமாறு மிகவிரித் திற்றைக்கிருபது ஆண்டுகட்குமுன்னரே யிதனைப்பாடி முடித்தருளினார் இந்நூல் (30) சருக்கங்களுடைய ஆயிரத்தைந்நூறு பாசுரங்களடங்கிய விதனைச் சில்லாண்டுகட்குமுன்னரே யச்சிட முயற்சித்தும், சிற்சில அசௌகரியங்களால் இயன்றிலது. எத்துணையரிய காரியமாயினு முட்டின்றி நிறைவேறற்குக் காலமுமிடனும் வாலிதின்வாய்க்க வேண்டுமன்றோ?

சிறந்த விக்காப்பியத்திற் காணப்படும், மலை கடல் நாடு, நதி பொழி லாதியவற்றின் வருணனைவளப்பும், சங்கநூலமைவு மியற்கைக்கற்பனையுயர்வும் பெரிதுங் காண்டற்பாலன. தெளிநீரோடையி விழுமெனோசையோடார்த்துப்பாயுமீர்ம்புனல்கடுப்பச் சொற்சுட்டி யாண்டுந் தட்டின்றிச் செல்வதோடு, மடக்கு, மோனை, முரண்டொடையாகிய சொல்லணிக ளல்லணிகளுடன் செறிந்தெங்குந் துறுமி யொளிர்கின்றன. பழமொழிகளின் அருமை நயங்களையும், புதுவதுபுனைதலாங் கற்பனாசக்தியையு முன்னோர்நூலொடுமுரணாவாறு சமத்காரமாகக் கூறியிருக்கு நீதிகளினுயர்நலங்களையும் நுணுகியாயுமிடத்துப் பண்டைப்புலவரெலா மோருருக்கொண்டுற்ற தண்டமிழ்ப்புலவரிவரோ வெனவுமையுறற்கிடந்தருகின்றது இவரமைத்திருக்கும் மூர்த்தி தல தீர்த்த வருணனைப்பாக்கள் எத்துணைமுறையோதினு முவட்டாததெள்ளமுத நிகர்த்துக் கவிவலோரிதயத்தைக் கனிவுறவுருக்குமென்பதி லெட்டுணையேனுமையமின்றாம். பற்குனனுக்கும் பாண்டியன் மகட்கு நிகழ்ந்த சம்பாடணையருமையும் இடையிடையே கோப்புண்டிலங்கும் ஞானக்கவிகளின் திட்பநுட்பங்களும் சாலவும் புகழ்தற்குரியனவாம்.

‘பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்,’ எனத் திருமாலின் திகிரி வளைகளைச் சிலப்பதிகாரத் திளங்கோவடிகள் சிறப்பித்ததுபோல, இந்நூலாசிரியரும், ‘பிணக்கினர்ச்செகுக்குந்திகிரியுங்கரத்திற்பிடித்திடக்குழைந்தொளிபரந்த,குணக்கெதிர்மதிய மெனத்திகழ்வளையும்’ எனச் சிறிது வேறுபட நன்கு வருணித்துள்ளார். (திருவரங்கச்சருக்கம் செய். 19) ஷை சருக்கத்தின் (21) செய்யுள் திருமாலின் பரத்துவத்தை வெகுநன்றாக நிலையிட்டுளது. (33 - 34) செய்யுட்களின் உருக்க நெகிழ்ச்சிகள் மிகப்பாராட்டற்பாலன. ‘இரும்புதிரித் தெனவணங்கு மெறுழ்வலிக்கோடு’ (மதுரைகாண்சருக்கம், செய். 30) என்பதில், எருமைமருப்பைப்பற்றிய உவமையை நோக்குமிடத்து ‘இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பு’ என்ற சங்கநூலடியும், ‘தெரிதருகரியபொன்றிரித்திட்டாலெனப், புரிதருமருப்பு’ என்ற கந்தபுராணத்தொடரும் நினைவுக்கு வருகின்றன. ‘சூற்கொள்பாசரவைமானக் சொல்லருங்கருவிருந்து’ (திருவரங்கச்சருக்கம் செய். 95) என்ற தொடர், ‘சொல்லருஞ்சூற் பசும்பாம்பின் றோற்றம் போல், மெல்லவே கருவிருந்து’ என்ற சிந்தாமணித்தொடரைப் பொருளொற்றியுளது. ‘மென்பூத்தூயரவுரி நிகர்க்குநுண்டுசு’ (மகப்பெறு சருக்கம் செய். 1) என்றதன் நுண்மைநயம், ‘பூக்கனிந்து அரவுரி யன்ன அறுவை’ (பொருநராற்றுப்படை 82 - 83) அடிகளாலும், ‘பாம்புபயந்தன்னவடிவின... ......ஒண்பூங்கலிங்கம்’ (புறநானூறு-383) என்பதனாலும் நன்கறியப்படும்.

'விரியிளம் பிணைமென் காதேய் வெள்ளிலை' (மகப்பெறுசருக்கம் செய். 2) என்ற உவமையால், மானின் காதுக்கு வெற்றிலையுவமையாதலின் பொருத்த நன்று விளங்கும். 'தன்னிழல் கண்டு சீறுந் தந்தி' (சித்திராங்கதைச்சருக்கம் செய். 18) என்றதனால் யானையின தியற்கைக்குண மிற்றென்றுணாலாகும். 'கொக்கின்றலை வெண்ணெய் குவித்துருகி' (சித்திராங்கதைச் சருக்கம் செய். 75) 'கன்னறின்பதற்கொரு கூலியோ கோதாய்' (சம்வாதச்சருக்கம் செய். 38), 'கைக்க மண்டலத் தயத்தினைக் கவிழ்த்தலை பவரை யொக்கும்' (சம்வாதச்சருக்கம் செய். 60) 'முட்டாங்ஙனந்தோர்க்கீரமிலை' (விரகச்சருக்கம் செய். 61) 'பசுவொடு செவிசேரோர்சொற்பகரலாகாதே' (உலாவியற் சருக்கம் செய். 40) என்னும் பழமொழிகள் சந்தர்ப்பங்களுக்கேற்பச் செறிவுற் றிலங்குகின்றன. 'மேவுசெல்வங்களிறுண் விளங்கனியாகவும்' (பெரியபுராணம்) என்ற வாக்கைப்போலக் 'கரிநுகர்கபித்தமானக் கருகிமெய்ம்மறந்து நின்றாள்' என்றதனாற் சங்கநூல்களிற் கூறியது போலவே இந்நூலாசிரியர் கூறிய யானையுண்ட விளங்கனி மாண்பு இனத்தெனப்பெறக்கிடக்கின்றது. 'தண்டலை மயில்களாடத் தாமரை விளக்கந் தாங்கக், கொண்டல்கண் முழவி னேங்கக் குவளைகண் விழித்துநோக்கத், தெண்டிரை யெழினிகாட்டத் தேம் பிழி மகரயாழின், வண்டுகளினிதுபாட மருதம்வீற் றிருக்குமாதோ' என்ற கம்பர் கருத்தமைதி, 'வண்டு வீணையாய் விறலியாய் பிகமத கருகின், மண்டு கொக்குமத்தளிகளாய் மயினட மாதாய், இண்டை தீபமேந்தொருவனு யலை யெழினியுமாய்க், கொண்டு நாடக நடத்துவ குவளைக ணோக்கும்' (திருவரங்கச் சருக்கம் செய். 86)ல் பிரதிபிம்பித்தல் காண்க. கொக்கை மத்தளங்கொட் டுவோனாகக் குறித்தமை யூன்றியுணர்தற்பாற்று. 'மேட்டிமைப்பன மின்மினி யாமெனக், கூட்டி னுய்க்குங் குரீஇக் குழாமரோ' (கம்பர்) என்பதும், 'கோமணியைக், கண்டு மின்மினி யென்று நீணுசிவாய்க் கவ்விக், கொண்டு சென்றருங் குடம்பையுட்குரீஇயின முய்க்கும்' என்பதுந் தம்முளொத்தனவே யாம்.

திரௌபதியின் சுயம்வரத்தின்போது அலங்கரிக்கப்பட்டிருந்த நகரக் கொடிகள் காற்றலசைந்ததைக் 'குழைப்புறங் கடந்த செங்கட் குறுநகைக் கொவ்வைச் செவ்வா, யிழைப்பொலி முலையி னுளுக் கிற்றைநாள் வதுவை யென்று, மழைப்புற மாடமேறி வருநரை மலர்க்கை காட்டி, யழைப்பன போன்றவீதி யணிகொடி யாடையெல்லாம்' என வில்லிபுத்தூரார் வருணித்தனர். இவ்வாறே மிதிலை நோக்கிப்போந்த இராமலக்குமரை யழைப்பதுபோன்ற தாகக் கொடிகளசைவுற்ற தோற்றங் காணப்பட்டதைக் கம்பரு நன்குகூறி னர். துரியோதனன் கண்ணபிரானைப் படைத்துணையாக அழைக்கப்போன போது கொடிகளசைந்த தோற்றத்தை, 'ஈண்டுநீ வரினுமெங்கள் எழிலுடை யெழிலி வண்ணன், பாண்டவர் தங்கட் கல்லாற் படைத்துணை யாகமாட்டான், மீண்டுபோ கென்றென் றந்த வியன்மதிற் குடுமிதோறுங், காண்டகு பதாகை யாடை கைகளாற் றடுப்ப போன்ற' எனச்சமர்த்தித்துரைத்தனர் வில்லிபுத்தூரார். நம் கவிராஜர் இவ்விருகொள்கைகளையுங்கொண்டு பார்த்தன் பாண்டிய நாட்டைச்சமீபித்தசமயத்து, 'நிலைதவங் குலையுமெம்மூர் நெருங்கிடேற் போநீ

யென் றுங்,குலேயினுங் குலேக வாவெங் கோதைபோற் கிட்டா தென் றஞ்,சிலே வலோன் றனக்குக் கையாற் றெரிப்பபோற் கொடிக ளாடு, மலேநிகர் சிகரிவாயிற் கடந்துமா நகருள் வந்தான்' எனக்கொடிகள் முன்னும்பின்னும் ஒரேசமயத் தசைவதையுற் றுக் கவனித்துச் சமத்காரமாக வருணித்தனர். யாத்திரைச்சருக் கத்தில் நதிவருணனேகளேப்பற்றிய நான்குபாக்களேயும் விலேமதிக்கொணு நான்கு மாணிக்கங்களெனினு முயர்வு கவிற்சியாகா. திருவரங்கச்சருக்கத்தின் முதற்பாசுரத்தினினிமை வெகு அருமையானதொன் றும் ' அரங்காவென்னுங், கூட்டொலி யண்ட கோளங் குடைந்துவை குந்தங் கூடும்,மீட்டொரு பதிமே லுண்டேல் மேவியப் பாலு மேகும்' என்ற கவிவளத்தாற் பரமபதத்தின் உய ரியவழிவிலாகிலேயும், இவ்வாசிரியரது வைணவபக்தியும் செவ்விதிற்பெறப் படும். புரந்தரகுமரன் காளத்தியப்பரைக்கண்டு தரிசித்தகோலம் நன்குபுனேந் துரைக்கப்பட்டுளது. பொழிலெதிர் சருக்கத்தின் சிருங்காரவருணனே இந் நூலிற்போலத் தற்காலத்துப்புலவரியற்றிய வேறெந் நூலிலுங் காண்பரிதே யாம். ஷை சருக்கம் 16 - வது பாட்டில் 'வம்பென்றசொல்' பலபொருளு மொருங்கேதர அமைக்கப்பட்டதன் நயம் கூர்ந்து கவனித்தற்பாலதாம். கற் பனேக் களஞ்சியமாகிய சிவப்பிரகாசசுவாமிகள் பிரபுலிங்கலீலேயில் மாயைக் கணிபல புனேந்ததை யணியுறக்கிளந்ததுபோலவே நமது விற்பனக்கவிஞருஞ் சித்திராங்கதைக்குக் கலன்களணிந்தமையை நலங்கடிகழ்தரப் பாடியுள்ளார்கள். 'அஞ்சொருபெண்சடைகரக்கும்' (மதுரைகாண்சருக்கம் செய். 31), 'ஆறு வினேப்பனவரோடும்' (யாத்திரைச்சருக்கம் செய். 3) என்ற தொடர்களின் பல்வகையபொருணயங்கள் கற்போர்க்குப்பெரிது மின்பம்பயக்கின்றன. மக் கட்பேற்றினருமை, மதுபானத்தின்கொடுமை, காமத்தின்றீமை, ஊழ்வினே யின்பெருமையாதிய நீதிக்கவிகளின் மேன்மை மிகப்பாராட்டுதற்குரியன. நவரசங்கட்கேற்ப அவ்வச்சந்தர்ப்பங்களிற் சந்தங்கொண்டியலும்பாக்கள் பெரி தும் போற்றற்பாலனவாம். 'தீயினுற் சுட்டபுண் ணுள்ளாறு மாறுதே, நாவி னுற் சுட்ட வடு'என்ற குறட்பொருளே, 'உரிய தீயெழுங் கோபத்தீ யுதரத்தீ யெனத்தீத், திரிவ கைப்படு மற்றதிற் கொடியசொற் சிதறிக்,கருகு நாவினுற் சுடுஞ்சினத் தீக்கடி தென்றே, பெரிதி சைப்பர்பின் வருமதிற் கேடென் றும் பெரியோர்' (சம்வாதச்சருக்கம், செய். 89) என்ற கவியில் வெகு அற்புதமாக வமைத்திருக்கின்றனர். 'நுண்மாணுழைபுலம்' வல்ல இவரை நிகர்த்த சிற்சில கவிஞர்க்கே யன்றி யேனேயோர்க் கிங்ஙனமமைத்தற் சிறிதுமியலாத தொன்றுமென்க.

கொங்குநாட்டின் சிறந்ததலமாகிய திருநணுவில் காவிரியும் பவானியுஞ் சங்கமமாகுமேன்மையைக்குறித்த கவிகளினருமை நயங்கள்கற்றோர் நெஞ் சைக் கொள்ளே கொள்ளுமென்பது தேற்றமேயாம். 'தண்டமிழ்முகமனுரைத் தெனவொலித்து', எனத் தமிழ்மொழியினினிமையை இக்கவியரசர் ஆண்டுச் சாலவியந்து பெய்துள்ளார். கண்ணபிரானது துவாதசநாமச்சிறப்பும், சிவ பிரான்றுதியமைப்பும், மிகக்கனிவுடனெகிழ்ந்துருகும்வண்ணம் யாக்கப்பட் டுள்ளன. 'சேவிறை புள்ளிறை யொருமைத் தேவெனும், பாவனே யின்றியே பகுக்கும் பாவியும்.' சேப்பொலி யொருவனேத் திகிரியோன்றனே, நாப்புக ழா

திகழ் ஞான நாசனும்' என்பவற்றாலும், 'யானெனதெனுஞ்செருக்கை யிகந் தெதிர்காண்பவெல்லாம், கானனீர்கயிற்றிற்பாம்பு கனவுலகென்னக்கண்டே, யூனமில்பிரமமொன்றே யுள்ளதஃதுணர்வாமென்று, மோனமுற்றுவக்குஞ் சீவன் முத்தர்களினங்களோர்பால்' (கங்கைச்சருக்கம்,செய். 16) என்பதனாலும் நம்நண்பர் அத்வைதமதத்தவரென்பதை நிலைநாட்டலாம். 'உரைபயின் றுணர்ந் தாவதென்காதனேக்கொத்து, விரவிநிற்குநர்க்கென்ன' (உலூபி திருமணச் சருக்கம், செய். 10) என்பதுகொண்டு, கந்தர்வமணமெனப்படும் யாழோர் கூட்ட மேன்மையைத் தெள்ளிதினறியலாம். 'கண்ணொடு கண்ணிணை நோக் கொக்கின் வாய்ச்சொற்கள், என்ன பயனு மில' என்பது தேவர்குறள் 'நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக், கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்' என்ற தொல்காப்பியமும், 'அரிவை நாட்டம் அகத்து நிகழ்வேட்கை, தெரிய வுணர்த்துங் குரிசிற் கென்ப' என்ற நம்பியகப்பொருளும் இக்கருத்தை நன்கு வற்புறுத்துவனவாம் ஆங்கிலத்திற்பழைய நாடகாசிரியராகிய கிறிஸ்டவர் மார்லோ என்பவர் 'Who hath loved, that loved not at first sight' என்று கூறியதை ஜகப்பிரியர் தாமியற்றிய நாடகமொன்றினில் மேற்கோளாக நிறுவியிருக்கின்றனர். 'கண்டவக்கணத்திலே காதல்கொண்டிடா, எண்டகு காதலர் யாவராபவோ' என்பது அதன் தேர்ந்தபொருள்.

இவ்வுண்மை மேனுட்டார்க்கு மொக்குமாயின், இறையனர், தமதகப் பொருணூலுள் நுதலிய விச்தெய்வீக கந்தர்வமணத்தின்மாண்பை யளவிட் டுரைப்பதெங்ஙனம்? கவிஞர் பெருமானும், எமதாசிரிய பரம்பரையைச் சேர்ந்தவருமாகிய ஸ்ரீலஸ்ரீ மீனுட்சிசுந்தரம்பிள்ளை யவர்களுக்குப் பின்னர்த் தோன்றிய கவிஞர்களுள், இந்நூலாசிரியரை நிகர்த்துக் காப்பியமொன் றித் துணையினிமை யுடனியற்றின ரெவரையு மிதுகாறு மியாங்கண்டுமிலோம் கேட்டுமிலோம். இந்நூலை யிவ்வாசிரியர் பெயர்குறியாது ஒருவர் கைக்கொடுப் பின், பண்டைநூலெனவே கூறுகிற்பரென்பது முற்றுமுண்மையேயாம் இந்நூல் என்று நின்று நிலவுமாறு, குன்றுதோறாடற் குகப்பெருமானை முக்கரணங்களானு மிறைஞ்சுகின்றேம்.

கனம் யூனிவர்ஸிடியார் இந்நூலிற் சிற்சில பகுதிகளை இண்டர்மீடியேட் ஸ்கூல்பைனல் முதலிய வகுப்புக்களுக்குப் பாடமாக ஏற்படுத்துவராயின், மாணவர் பலரு நனிநல முறுவரென்பது நிச்சயம்.

பற்குனனார் சீர்த்திகெழு பைந்தீர்த்த யாத்திரைநூல்
நற்குண மிர்தமென நாட்டினன்சீர்—நிற்கு
மரங்கநா தப்புலவ னன்றநாற் பாவல்
லரங்கப்ப நா தன்மைந் தன்.

இங்ஙனமெழுதநேர்ந்த முருகன்றிருவருளைப் பெரிதும்வந்தித்துவாழ்த்து கின்றனம்.

௨

நூலாசிரியரின் மாணாக்கருளொருவராகிய தளவாய்பேட்டை
ந. சி. நஞ்சப்பசெட்டியாரவர்கள் இயற்றியது.

அறுசீர்விருத்தம்.

பூவலர்வான் குடைந்துமுகை புட்சிலம்புங் கொன்றையந்தார்
புனையும் வேணிச்
சேவலனை னனத்துதித்தோன் றிருமாலுந் தியினாலாற்
செய்து தேவர்
காவலனே முதலெவர்க்குங் கலையுதவி மூவுலகுங்
காத்தோன் மானந்
தேவலனென் றுலகேத்துந் தேவாங்க மாமுனிவன்
சிறந்த மேலோன். (1)

ஆயவன்றன் குலத்துதித்தோ னைந்தருவி னதுலருக்
களிக்குங் கையான்
றூயதில்யார்க் கும்பிரியன் சற்குணசி லன்னரங்க
சாமி யென்போன்
றாயதவ புத்திரனாய்த் தோன்றிவனப் புயாறிவு
துகடீர் கல்வி
மாயனடிக் கன்புபொறை மற்றுளசீ ருடன்வளர்ந்து
வரவ ளர்ந்தோன். (2)

அருள்சுரக்குந் திருமனத்தோ னருங்கலைவி னோதனகத்
துறவு பூண்டே
தெருளுடைச்சா தனநான்குந் தேக்கியுய ரபரோட்சத்
திடஞா னத்தா
லிருளிரிய வொளிபரப்பு மிரவிநிகர்த் தஞ்ஞான
விடர்தீர்த் தோன்மெய்ப்
பொருளொருமெய் கொடுவந்த தெனப்புகல வெமையாளப்
போந்த தூயோன். (3)

தெள்ளுதமிழ்ப் புலவரெனுஞ் சிலீமுகங்க டெவிட்டாமற்
றினமு முண்ண
விள்ளுமலர் வாயொழுகி விரிதேனி னூற்கவியும்
விளம்பு தீரன்

உள்ளமுவந் ததிகாரிக் குபகிடதப் பொருளைவிரித்
துரைப்போன் சாலப்
புள்ளியொளிர் பணத்தரவம் பொறுத்தவுல கினிற்றளவா
புரியில் வாழ்வோன். (4)

இத்தகைய வறிஞனிடத் திருங்கலைகேட் டன்புமிக
விருந்து வாழுஞ்
சத்துவசற் குணயாக சத்திரியத் தெலுங்கர்குலந்
தன்னிற் போந்த
வுத்தமரிற் சிலரிவனை யுவந்தேத்தி நின்புகழிவ்
வுவர்நீர் வைப்பி
னெத்திசையு முறப்பார்த்தன் யாத்திரையை விரித்துரைநீ
யென்று வேண்ட. (5)

தரங்கசா கரம்புடைசூழ் தாரணிவாழ் புலவோர்தந்
தமிழ்ப்பா விற்குச்
சிரங்கொலிது வெனப்புகழ்ந்து சிறந்ததமிழ்ப் புலவரெலாஞ்
செப்பச் சீர்சால்
நரன்றன்யாத் திரைக்கதையை நன்குரைத்தான் புருடார்த்த
நான்கு மெய்த
வரங்கநா தன்னெனுமெம் மாரியன்மற் றவனடியெம்
மகத்துள் வைப்பாம். (6)

---

நூலாசிரியரின் குமாரராகிய

தே. ர. இலக்ஷுமி நாராயணசெட்டியாரவர்களியற்றியது.

அறுசீர்விருத்தம்.

பாதிமதி நிகருநுதற் பாஞ்சாலி யோடறன்சே
யுறவே பார்த்த
வேதுவினுற் றனஞ்செயன்செய் யாத்திரைமாண் பினையமிர்த
மிதுவா மென்னக்
கோதில்கவி வாணரெலாங் கொண்டுவப்பச் செந்தமிழாற்
குலவச் செய்த
நீதறுசற் குணவரங்க நாதனெந்தை மலரடியைச்
சிரமேற் கொள்வாம்.

---

# சாத்துகவிகள்.

நூலாசிரியரின் ஆசிரியராகிய பவானி மகாவித்வான்
பிர்மஸ்ரீ பாலபாரதி முத்துசாமி ஐயாவர்களியற்றியது.

நேரிசைவெண்பா.

கற்பகமே யொத்த கவிஞ னரங்கனவி
லற்புதமாஞ் செய்யு ளமுதமதைப்—பற்குனன்றன்
யாத்திரை யாமென்பார் யான்புலவர் சஞ்சீவி
மாத்திரையா மென்பேன் மதித்து.

உத்தமதானபுரம்
பிர்மஸ்ரீ - மகாமகோபாத்தியாய வே. சாமிநாதையாவர்களியற்றியது.

அறுசீர் விருத்தம்.

வில்லோரிற் சிறந்த வருச்சுனன் றீர்த்த யாத்திரையை
விரித்துச் சாலப்
பல்லோர்கள் படித்துவப்பப் பாடியெழு தாவெழுத்திற்
பதிப்பித் தீந்தா
னல்லோர்வாழ் தருகொங்கி னகுதளவாய்ப் பேட்டையின
னவிறே வாங்க
னெல்லோரும் புகழ்வணிக னிலங்காங்க நாதகவி
யெனுநல் லோனே.

சேலம் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
பிர்மஸ்ரீ - டி. எஸ். நடராஜையாவர்களியற்றியது

வெண்பா.

திருத்தகுசீர்ப் பங்குனன் றீர்த்தநீ ராட
லுருக்கமுடன் யாவரு மோத - வுரைத்தான்
கவியரங்க நல்விருந்தாக் கண்டுவகை யோங்கக்
கவியரங்க நாதன் கனிந்து.

ஸ்ரீ
ஜகத்குருபீடம்.

நியாயசந்திர வேதாந்தபாஸ்கர ஸ்ரீமத் மகாமண்டலேசுர
வீர. சுப்பய்யஞானதேசிகேந்திர சுவாமிகள் அருளிச்செய்தது.

(எழுசீர் விருத்தம்)

திகழ்தரு வேத மொத்த மாபார
 தத்தினிற் றீர்த்தயாத் திரையைப்
புகழ்தா முதியர் தொகுத்ததை வகுத்துப்
 புத்தமு தெனப்புவிக் களித்தான்
நிகழ்தரு சோலைக் கொங்குநா டுடைய
 னிருமலன் குணமெலா நிறைந்தோன்
மகிழ்தரு மரங்க நாதனுங் கவிஞர்
 மன்னவ னன்னர் மாதவனே.



பவானிதலத்தைச் சார்ந்த குமாரபாளையம் வேதாந்த மடாதிபரும்
நூலாசிரியரின் ஞானசிரியருமாகிய
ஸ்ரீலஸ்ரீ சிதம்பரசுவாமிக ளருளிச்செய்தது.

எழுசீர் விருத்தம்.

ஆருயிருய்வானருண்மிகுவியாதனருளுமாபாரதத்தினினன்
கேருருவிசயன்றீர்த்தயாத்திரையினிலைமறைகாயெனவிருந்த
சீருறும்பொருளையியற்றமிழளவைத்தெளியவல்லுநருளமுவப்பப்
பாரதிற்பத்தான்மாக்களினுளத்திற்பாவசமாக்குபண்புளதாய்.
வானவரசமீதூறியூற்றெடுத்துமாக்களினுளநிலைக்களத்தே
யானவம்மட்டேநிரம்பியாவர்க்குமானந்தமுறும்படியாத்தான்
தேனமுதுறழ்தீந்தமிழிலக்கறிந்தோன்செந்நெறிநின்றுய்வாற்குரிய
ஞானசாதனங்களடைந்துளோனரங்கநாதனுநாமநாவலனே.



சீராப்பள்ளி
ப. இராமசாமி செட்டியாரவர்களியற்றியது.

வெண்பா.

பார்மேற் புலவர் பரிந்துண்ணத் தெள்ளமுதா
யோர்மேவும் பங்குனன்றன் யாத்திரையைச்—சீர்மேவுஞ்
செந்தமிழ்ப்பா வாலீந்தான் றேவாங்கர் தங்குலத்து
வந்தரங்க நாதனெனு மால்.

———

வித்வசரபம் - உடுமலைப்பேட்டை
அ. முத்துசாமிக்கவிராயரவர்கள் இயற்றியது.

இருபத்தெண்சீர்விருத்தம்.

இதிகாசபாரதத்தினில்வில்லிபுத்தூரியற்றமிழ்விநோதவாழ்வா [ளே
ரிடைதொறுஞ்சரிதஞ்சுருங்கவிண்டவைபலவிருப்பினுவிருப்பினுள்
யேற்பாகவிர்த்திநல்லாப்பிள்ளைசொன்னதுமிதற்கிணைதாரவென்னநீ
டிந்த்ரப்பிரத்தத்திருந்தருச்சுனவிசயனெழுதீர்த்தயாத்திரைச்சீர்

அதிகாரமுறைதருசருக்கத்தைவித்தாரமாக்கியிவண்யார்க்குமொப்ப
வதிசயம்விளங்கவிருசெவியமுதமிகுதெனுவாயிரத்தைஞ்ஞூற்றினே
யமைவுபெறவினியசுவைகூர்விருத்தங்களாலாங்காங்குவான்கற்பனை
யலங்காரசாரந்துலங்காரங்கரவளாகிலத்திலுலவவைத்தான்

திதிகாணுமரியதொழிலொருமீளிகடல்மேவுதிருமாலைநண்ணிமுன்னந்
திகழ்வனசநூல்கொண்டுதேவிசவுடாம்பிகைதியானத்திலசுரரையெ
செற்றதேவாங்கமுனிபெற்றசந்தானவழிசித்தபரிசுத்தனுன [லாஞ்
செங்களபபுயமேருரங்கமகிபாலனருள்சேய்புலவர்தாயென்றுளான்

கதிஞானநிதிகார்த்திகேயரிஷிகோத்ரதுரைகலைபலவுணர்ந்தநிபுணன்
காயத்ரிமந்த்ரஜெபதூயப்ரபோதசுககருணாகரன்பவானி
கரையிலகுதளவாபுரீசனெங்கண்ணனகனநேசவிசுவாசமால்
கமனஜனசேகரன்தாசானுதாசஸ்ரீகண்யாங்கேந்த்ரமுகிலே.

---

ஜலகண்டபுரம் தோரமங்கலம் வித்வான்
அ. வரதநஞ்சையபிள்ளையவர்களியற்றியது.

அறுசீர்விருத்தம்.

திருமேவும்புயசயிலப்பஞ்சவரிற்பார்த்தனுயர்தீர்த்தமாடி
வருகாலைநிகழ்செய்தியுரைக்கின்றபாரதத்தின்வகுப்புக்காதை
யொருநூலுமிதற்கிணைசாலாதென்னவலங்காரமோராங்கெய்த
விரிநூலாற்றந்தேணைப்புலவருளங்குடிகொண்டுவிளங்கினுல்.

அத்தகுநாவலன்யாவனெனிற்கொங்கேழ்தலத்துளொன்றென்றூன்றேரேத்
முத்தமமாந்திருநணுப்பதிசார்ந்துகல்விசெல்வமொருங்கேவாய்த்த [து
வித்தகர்களுறைகின்றதளவாய்மாநகருடையான்விழுச்சீர்நாளு
மெத்தவினிதீட்டுதிறலானரங்கநாதனெனுமேதக்கோனே.

---

சத்திமங்கலம் - வித்வான்
பக்கீர்சாயபு அவர்கள் இயற்றியது.
அறுசீர்விருத்தம்.

துதிக்குமருங் கவிப்புலவர் தமக்கொருசூ டாமணியாய்த்
தோன்றி வைய
மதிக்குமுய ரறிஞர்மதித் திடப்பார்த்தன் யாத்திரையின்
மாண்பை முல்லைப்
பதிக்குரிய பரமனடி பழிச்சரங்க கவிராஜன்
பாக்க டோறு
முதிக்குமொவ்வோர் பதம்பரம பதமெனநற் சுகந்தரவே
யுரைத்தான் மாதோ.

---

நூலாசிரியரின் குமாரராகிய
தே. ர. வெங்கட்டராம செட்டியாரவர்களியற்றியது.
கலிநிலைத்துறை.

காத்தவொண்முகிற்கீதுகைம்மாறெனக்கருதிப்
பூத்தவெண்குரலிணைச்செங்நெலீயவான்போகி
யேத்தியீயவஃதேற்கலா திருப்பநாணிக்கம்
சாய்த்தபோற்கதிர்முதிர்ந்துசாய்பண்ணைசூழ்தளவை.

புரிசெய்மாதவத்தாற்கடலமிழ்தெனப்போந்தான்
விரியுநூலுணர்நாவலர்யாவரும்விரும்பு
மரியநாற்கவிக்கதிபதியாகிமெய்ஞ்ஞான
முரியநற்குணமொருங்கமைவொருதமிழ்ப்புலவன்.

புனிதவப்பெரும்புலவனைநோக்கியிப்புவியி
னினதுநற்புகணிலைபெறக்கலையுணர்நிபுணர்
மனதுவப்புறுஞ்சொற்பொருள்வாய்ப்பவோர்சரிதை
யினிதுகூறுகவெனநண்பர்வேண்டலுமிசைந்து.

அறுசீர்விருத்தம்.

அலகறுசீர்க்கண்ணனிடத்தருங்கீதைப்பொருள்யாவுமமையக்கேட்ட
திலகனெழில்விசயனொருதீர்த்தயாத்திரைக்கதையைச்செறிநீர்வைப்
புலவர்களித்தினிதுண்ணப்புதியவமுதாமிதெனப்புனைதல்செய்த [பிற்
கலையரங்கநாதனெந்தைகமலமலர்க்கழலிணையைக்கருத்துள்வைப்பாம்.

இது,

சென்னைச்சூளை சுவாமி விவேகானந்த இந்துபாலிகா பாடசாலைத்

தலைமை உபாத்தியாயர்,

ம-ா-ா-ஸ்ரீ - சே. மு. வேலு முதலியாரவர்கள்

இயற்றிய சாற்றுக்கவி.

அறுசீர் விருத்தம்.

பந்தாரென் றடியெடுத்தே யெங்கள்பிரான் சம்பந்தர்
பதிகம் பாட
நந்தாத வளம்படைத்த திருநணு முக்கூட
னண்ணி வாழ்வோன்
சிந்தாத கல்வியறி வொழுக்கமா தியவிவையிற்
சிறப்பு வாய்ந்தோன்
அந்தாதி மலரகித னவனருளே பொருளதுவா
யறிந்த தூயோன்.

மன்னவனுங் கவிக்கம்ப னவதரித்தா னுலகிலென
மதிக்க யாருஞ்
சொன்னயமோ டெங்கயமு மொருங்குநிரம் பிடுமொருநூல்
சொற்று னந்நூல்
பன்னரிய வருச்சுனன்செய் தீர்த்தயாத் திரைக்காதை
பாவல் லோனும்
அன்னவன்ற னபிதான மரங்கநா தக்கவிஞ
னருகு மாதோ.

ஆயிரத்தெண் ணூற்றின்மிசை யமைவுறுநாற் பானிரண்டா
மருஞ்ச காத்த
மேயதொரு பங்குனித்திங் களிற்கவிஞன் பங்குனன்றன்
வியனற் காதை
ஆயமக வினுக்கணிகள் பலபுனைந்தே யச்சுறுவா
கனத்தி லேற்றி
மாயிருஞா லப்புலவர் வீதிதொறு லாப்போதல்
வழங்கி னனால்.

# OPINION.

I have perused portions of Arjuna's Holy Pilgrimage by Sri Ranganada Kavi. The narrative portions run on smoothly. His descriptions are graphic romantic. Personification—the peculiar feature of later Dravidian poetry—is handled now and then with some taste, occasional funs and equivocations afford some relief. The author seems to be well steeped into Kamba's Ramayan and some other standard epics in Tamil. Being a pandit of the old school he cannot avoid being a little pedantic and conventional. An appendix containing meanings of difficult words and explanations of poetical phrases may induce the general reader to take interest in the work which is in no way inferior to the minor epics and puranas composed within the last one or two centuries.

(Sd.) T. CHELVAKESAVAROYA MUDALIYAR, M. A.,
Professor of
Pachaiyappa's College,
Madras.

Perambur
28th February 1920.

ஸ்ரீமான் - டி. செல்வகேசவராய முதலியார், எம். எ., அவர்களின்
அபிப்பிராயம்.

# பிழைதிருத்தங்கள்.



| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 6 | 10 | 4 | யடப்பை | யடைப்பை |
| 16 | 19 | 3 | வலத்திற் | வகத்திற் |
| 28 | 5 | 1 | தந்துமிதுழனி | தந்துமித்துழனி |
| 33 | 34 | 4 | கோசன | கோகன |
| 43 | 1 | 2 | வாயெங் | வாவெங் |
| 44 | 8 | 1 | ஆலமுந்நமனு | ஆலமுநமனு |
| 47 | 25 | 3 | தனனன் | தனனென் |
| 48 | 31 | 3 | திதிக்கைபகடு | திதிக்கைப்பகடு |
| 50 | 37 | 1 | குலைச்சேய் | குலச்சேய் |
| 51 | 44 | 1 | னென்றனை | னென்றெனை |
| 52 | 3 | 1 | வின் | விண் |
| ... | ... | 2 | சிதைஇ | சிதைத்தே |
| 68 | 14 | 2 | மிடலுற | மிடறுற |
| 74 | 2 | 2 | விழியன் | விழியின் |
| 78 | 17 | 2 | வொழிந்தனை | வொழிந்தணை |
| 81 | 28 | 4 | நேரிடு | நேடிடு |
| 85 | 60 | 1 | போர | போர் |
| 87 | 73 | 2 | குணம் | குணப் |
| ... | 77 | 3 | கெண்ட | கொண்ட |
| ... | 78 | 3 | றியர் | றுயர் |
| ... | ... | 4 | னேனற் | னெனற் |
| 88 | 84 | 3 | நங்கநன்னிதா | நக்கநன்னுதா |
| 94 | 132 | 4 | விடர | விடர் |
| 100 | 41 | 2 | கழுவாய் | கழிவாய் |
| 101 | 52 | 1 | னுடனுனீ | னுடனீ |
| 102 | 54 | 1 | னதட்டி | னகட்டி |
| ... | ... | 4 | யிழைந்த | யிழைத்த |
| ... | 55 | 1 | உள்ளம்வருத்த | உள்ளம்வருந்த |
| 123 | 21 | 2 | தான் | தூண் |
| 124 | 23 | 1 | மந்தர | மந்திர |
| ... | 27 | 4 | திருத்தக | திருத்தகு |
| ... | 28 | 4 | பண்பணி | பன்மணி |
| 126 | 37 | 1 | யென | யன |
| 127 | 46 | 3 | தியமென | தியுமென |
| ... | 47 | 3 | செல்வான் | செய்வான் |
| 136 | 19 | 1 | யின்று | யின்றி |
| 144 | 2 | 1 | யிரைஞ்ச | யிறைஞ்ச |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 144 | 2 | 2 | பரணிகர் | பரனிகர் |
| 146 | 8 | 4 | தகும் | தரும் |
| 147 | 17 | 4 | முற்று | முற்ற |
| 148 | 18 | 4 | தன்றி | லன்றி |
| ... | 24 | 1 | வானுகு | வானுரு |
| 149 | 28 | 4 | கினதால் | கினரால் |
| 150 | 36 | 2 | மடநான் | மடநாண் |
| ... | 37 | 2 | தெந் | தேந் |
| 156 | 26 | 4 | சாகு | சாரு |
| 157 | 36 | 3 | நிருத்தலே | கிருத்தலே |
| 159 | 49 | 3 | பணி | பணிந் |
| 160 | 9 | 4 | போம் | போய் |
| 165 | 46 | 3 | முரச | முரசி |
| 171 | 30 | 4 | காண | நாண |
| ... | 35 | 2 | புவி | புலி |
| 172 | 41 | 2 | யெழுத்த | யெடுத்த |
| 175 | 62 | 3 | கட்பகி | கட்பதி |
| 180 | 17 | 1 | பொரி | பொறி |
| 186 | 11 | 1 | வுலகத் | வுலகைத் |
| 191 | 35 | 2 | மேவால் | மேவாய் |
| ... | 41 | 1 | கானு | காணு |
| 196 | 2 | 3 | வாம்பல் | யாம்பல் |
| 197 | 5 | 2 | போந்தலு | பேந்தலு |
| 199 | 24 | 3 | மன்னர் | யன்னர் |
| 201 | 12 | 2 | றென்னினு | ரென்னினு |
| 206 | 25 | 2 | பண்ணெழுப் | பண்ணெழும் |
| 207 | 30 | 3 | பொற்றை | யொற்றை |
| 214 | 86 | 3 | ருற்றடு | ருற்றடி |
| 218 | 6 | 3 | யுவனே | யுவணே |
| 219 | 10 | 2 | றெம்மை | ரெம்மை |
| ... | ... | 3 | வர்கண | வக்கண |



ஸ்ரீ

கண்ணன் கழல்துணை.

# ஸ்ரீ மகாபாரதம்

# அருச்சுனன் தீர்த்தயாத்திரை.

---

விநாயகர்துதி.

திருவருட்கண்பிறைத்திங்களிற்றிக
ழொருமருப்பகல்செவியுரங்கொணீள்புழைக்
காமதநாலுவாய்கவின்செய்பொன்புகர்
வருமுகத்தொருகரித்தேவைவாழ்த்துவாம்.

திருமால்துதி.

தண்டுவாண்முனிசங்கொடுதிகிரிகைதாங்கோர்
கொண்டல்வந்தெனவிட்புலமொருங்குகைகூப்பப்
பண்டுமூலமேகாவெனும்பகட்டெதிர்போந்த
விண்டுதாண்மலர்சிரக்கணிசெயமிலைச்சுதமால்.

நாமகள்துதி.

விஞ்சுஞானக்கனியைவிரும்பியுண்
டெஞ்சலின்றியிலங்கியயன்றனுப்
பஞ்சரத்தமர்ந்தாரணமேபகர்
விஞ்சையஞ்சுகமெல்லடிபோற்றுவாம்.

சவுடாம்பிகைதுதி.

வந்துகழல்பிடித்திழுத்தமூன்றுகூட
வரையிடைவாவியினீர்தோய்போழ்தினூகூக்
கந்தருவன்றனையிடங்கராகக்கூறிக்
கடலிடைத்தேவனைப்போற்றிக்கரியோன்றந்த
தந்துகொடுவருவானைப்பகைஞர்சூழத்
தாயேகாவெனவெதிர்வந்தசுரராவி
சிந்தியத்தேவலனிடர்தீர்த்தெம்மைநல்குந்
தேவிசவுடாம்பிகைதாள்சிரமேற்கொள்வாம்.

தளவாய்பேட்டை

கண்ணன்றுதி.

பிளவாபுரிபந்தங்களறப்பேரப்பாகவதரிலங்க
டுளவாபுரியென்றிசைபாடித்தோற்றிநடனந்துதிசெய்ய
வளவாபுரியேயிதற்குவமையாமென்றிடநன்னலமோங்குந்
தளவாபுரியிற்பஜனைமடந்தனில்வாழ்கண்ணன்றாள்பணிவாம்.

அருளிறைதுதி.

சுதந்திரரூபமென்றென்றின்றித்தோன் றுவெம்மாயைதனை
யதம்புரிந்தான்மசொரூபானந்தத்தமராரியராஞ்
சிதம்பரசாமிகடேன்கமழும்புயச்செம்பதத்தை
நிதந்துதிப்பேமுத்திவீடருண்ஞானநிலைபெறவே.

பாயிரம்.

ஈன்றுகாத்தழித்திப்புவியாவையுந்தானுய்ச்
சான்றதாயனைத்தையுமறிசர்வவல்லபனுய்
மூன்றுமூர்த்தியாய்முதல்வனுய்முடிவிலாதவனுய்த்
தோன்றுமெய்ப்பொருட்பரனெவனவனடிதொழுவாம்.

நூல்செய்தற்குக் காரணம்.

பானுவாமுலகிற்கெனப்பராசரன்பயந்த
சூனுவேமுதலறிஞர்கள்சொற்றபாரதத்தில்
யானுமோர்சருக்கத்தினையெடுத்திவணியம்பத்
தானுவந்ததெற்கேநகைதருவசாற்றிடினே.

தீர்த்தசேவையுந்தலத்தருஞ்சேவையுஞ்சிறந்த
மூர்த்திசேவையுமும்மணக்காட்சியுமுகுந்தன்
சீர்த்தியாடலுஞ்சிறப்புறநிரப்பிநிற்றலினிப்
பார்த்தன்யாத்திரைபகர்ந்திடயானுமேபரிந்தேன்.

விண்ணவர்க்கரிதாகியகீதையைவிரித்துக்
கண்ணனேசொலக்காவலனருச்சுனன்கேட்கும்
புண்ணியம்பெறமுன்புரிபுண்ணியமிதுவென்
றெண்ணியாவருங்கேட்டுய்வானிதையெடுத்திசைப்பேம்.

அவையடக்கம்.

அன்னைசொற்றசொற்றூன்சொல்வானருத்திகொண்மழலை
பின்னரங்கதைப்பலபடப்பிதற்றியமுறைபோன்
மூன்னைமேலவர்மொழிக்கொருவிதத்திதுமுரணிற்
றென்னினும்மவர்வாய்மையேவிரிப்பல்யானெடுத்து

தக்கதந்திரவுத்தியிற்கவிபுகறகவோர்
புக்கவென்கவிப்புன்மைகண்டிகழ்கிலர்புகழ்வார்
சிக்கறத்தெளிந்திசைத்திடவற்பமுந்தெரியா
மக்கடங்குதலைச்சொலின்மகிழ்வுறுரெவரே.

நூற்பயன்.

இக்கதைமுழுதுமெழுதினோர்படித்தோரிதன்பொருள்விரித்தவர்கேட்
சக்கரத்துலகிற்றீர்த்தமூர்த்திகளார்தலமெலாந்தொழுபயன்சார [டோர்
மக்கணன்மனையும்வளம்பெறவிபவம்யாவையுமிம்மையின்வாய்த்து
மிக்கவானுலகினமரரும்புகழவீற்றிருந்துயர்கதியடைவார்.

பாயிரமுற்றும்.

---

ஸ்ரீ

கண்ணன்கழல்துணை.

# ஸ்ரீ மகாபாரதம்

## அருச்சுனன் தீர்த்தயாத்திரை.

முதலாவது

## அரசுசெய்சருக்கம்.

[இச்சருக்கத்தால் பாண்டவர் இந்திரப்பிரத்தத்தில் அரசுபுரிதல் கூறப்படுகிறது. இதில் சபாவர்ணனை.]

துதி.

சங்காருஞ்சலதிவைப்பிற்றசரதன்சந்
ததியாகித்தவர்கோற்றூங்கி
புங்காரமுடனெதிர்த்தாளுயிர்வீட்டி
யொருசிலைபெண் ணுருச்செய்தோங்கிக்
கொங்காருங்குழற்சனகிகொங்கையிபக்
குறம்படக்கக்குறித்துக்குன்றாச்
சிங்காரச்சிலைவணக்குஞ்சீராமன்
சேவடியைச்சென்னிசேர்ப்பாம்.

வருபதங்கன்றனக்கன்றிப்பிறவொளிகட்
கிருண்முழுதுமாயாவாபோற்
பருவதங்கடனிற்புகுந்துபவனநுகர்ந்
திளுற்றுதவம்பரிந்தாயேனுஞ்
சருவசங்கபரித்தியாகந்தான்விரும்பி
னுஞ்சனனந்தவிராநாளும்
அரிபதங்கடுதித்தளப்பில்பவக்கடனீத்
துயர்கதியையடைவாய்நெஞ்சே.

## நூல்.

கங்கைநீர்தருபொற்செஞ்சரணுலகங்
காக்குபுகருணைகொண்டிலங்குஞ்
செங்கண்மாலிதயபங்கயத்தெழுந்த
திங்களந்தேவனன்மரபிற்
பொங்கிவான்படரும்புகழ்பொறுத்தகிலம்
புரக்குமோர்புதுமதிக்கவிகைத்
துங்கமாமன்னன்சந்தனுவழிதிகழத்
தோன்றியபாண்டுவின்சுதர்கள். 1

[இதுமுதல் 4 - கவிகள் பாண்டவரின் சிறப்பு.]

நிணமுறைந்தடர்ந்துபாற்றினஞ்சுழன்று
நிலவொளிசிதறுவேனிருபர்
மணிமுடியுரிஞ்சத்தேய்ந்தபொற்கழலார்
மடங்கலேறனையமாற்றலர்தந்
திணிபுயந்தகரச்செறுத்தகன்றிறுகித்
தினவமர்ந்தினமணிவலய
வணிகவர்ந்தலங்கறவழ்ந்துலகேந்தி
யடல்குனித்திருந்தவம்புயத்தார். 2

கலைகடற்புடவிமன்பதையெவையுங்
காக்குநர்பார்ப்பளிசுகம்போற்
சிலைவலிக்கிருபதியெனுந்திறலோர்
வேலினிற்சேந்தனிற்சிறந்தோர்
புலமையில்விபுதப்பொன்னவற்புரைவோர்
புந்தியிற்புகரவனிகர்த்தோர்
பிலநபம்புவியினுயர்புகழ்படரப்
பெருமையினிந்திரற்பெரியோர். 3

அடக்கலிற்புவிமுற்றடங்கவைம்
பூதமாமெனவறிதலாலெவையும்
மிடற்பெறும்புலனைந்தாமெனவீகை
மிகுதியினைந்தருவென்ன
விடற்கருஞ்செங்கோன்முறைமையினீசன்
விதிவழாவைந்தொழிலெனவுஞ்
சுடர்ப்பசுங்கதிர்த்தேவைந்தெனமதனிற்
சொக்குயரைந்துகாவலரே. 4

வெங்தொழிற்சிங்தைச்சுயோதனனிறைத்த
வெந்தழற்கடல்படிங்தெழுந்து
வந்திடிம்பனையும்பகனையுந்தடிந்து
வன்னிவந்தவனை வேட்டதற்பின்
அந்தமன்விளித்துத்தந்திடவுரிமை
யாட்சிபெற்றத்திமாநகர்விட்
டிந்திரப்பிரத்தத்திறைவராயிருந்தா
ரிருந்தவேத்தவையெடுத்திசைப்பாம். 5

## வேறு.

[இதுமுதல் 14 - கவிகளும் சபாவருணனை.]

உத்தமசாம்பூநதப்பித்திகைத்தலத்தி
னுடற்களங்கற்றுமிழ்விற்செங்கே
ழுத்திரம்வித்துருமநிரைத்தோரிலக்க
வச்சிரத்தூணுயர்த்திஞாங்கர்
பத்தியிற்பைம்மணிப்போதிபடுத்தி
வைடூரியப்பலகைபரப்பித்தூய
நித்திலவிதானமுறநிகழ்விணைக
ளெம்முணர்வினிகழ்த்தாதாகி. 6

ஏமதுபதிப்பெயர்கொடுமேலிருந்ததெனக்
கனன்றிகலியெழுந்துசீறிச்
சமர்பொரச்சென்றெனநிமிர்ந்துசசிபரிதி
யுடுப்பதமுந்தவிர்ந்துமேற்போந்
திமையவரிந்திரபுரிநேர்ந்தெரியுமிழு
மணியொளிவாளெடுத்துவீசி
யமர்சிகரிநெடுவாயிலலங்காரங்
குனித்திடுமண்டபத்தின்மாதோ. 7

சஞ்சரிகச்செழுமலர்த்தார்த்தரணிபர்க
டிறையளந்துதம்மூர்செல்வான்
கஞ்சமலர்க்கரங்குவித்துக்கருணைகுடி
யிருந்தமுகங்கருதாநிற்ப
விஞ்சுமிசையேழுறமெல்விரனரப்பின்
மிசைநடத்திமிடறுமொன்ற
வஞ்சியர்யாழெடுத்தமுதம்வழிந்தொழுகக்
கிஞ்சுகவாய்மலர்ந்துபாட. 8

நீவியந்தைவரச்சிவப்பரிவந்துபரந்
திடுமல்குனிறைந்துவேரி
தூவுமலர்க்குழலசையத்துணைமுலைக
டதும்பமுகந்தூநீர்சிந்தக்
கூவியிடைமுறிந்ததெனக்கூறுவபோற்
பதச்சிலம்புகுரல்விட்டார்ப்ப
மேவுசதிமுறைமிதித்துவேத்தவைநெக்
குருகுபுமெல்லியர்நடிப்ப 9

பண்டைமறையந்தணர்வந்தாசிதரப்
புவிபுகழ்நாற்பாவும்வல்லோர்
தண்டமிழினிரதமெடுத்தினிதூட்டி
யருகெதிராதனத்திற்றங்கக்
கண்டுகணந்தொறுநிகழ்கோணிலையரசுக்
குரைத்தொருபாற்கணிதர்வைகக்
கொண்டனிகர்க்குங்குழலார்மணியடப்பை
கையேந்திக்குறுகிநிற்ப. 10

தவளமடலொடுகருவிதனைத்தாங்கிப்
பலபாடைதனினும்வல்லோர்
குவளைபடரெறுழ்வலித்தோட்கோன்பணியிற்
செவ்விதிற்கைகோட்டிநிற்ப
உவளகத்துந்தண்டுதலற்றெருதுக்கிடமுற்
றுறைபிடகரொருபால்வைகத்
துவளுமிடைமாதர்பலதுளைமுகக்கெண்
டிகைப்பனிநீர்தூவாநிற்ப. 11

இந்திரன்பெட்புறுமடவாரெகினமரை
மலர்சிறைகொண்டெடுக்குமாபோற்
சிந்துமொளிமணிப்படிக்கஞ்சிலரேந்தக்
காந்தளங்கைசிலர்மின்போல
வந்திறைவர்மயங்கவிழிவாள்வீசித்
தம்வதனமதிநின்றேங்குஞ்
சந்திரிகைதவழ்ந்ததெனத்தமனியப்பூண்
டழுவியசாமரமிரட்ட. 12

அப்பாகப்புடைத்தசனியடன்மேரு
தகர்த்திபமெட்டாசைதள்ளிக்
குப்பாயம்பெறுபுயத்தர்கொண்டலொளிர்
மின்சிவணக்கொடிப்பிரம்பைக்
கைப்பாகந்தழுவினராகண்டலனே
முதலாயகணித்தபூமி
முப்பாகத்திறைவர்வரின்முறைமையிஞ
தனமமைக்குமொய்ம்பர்சூழ. 13

ஒருகணத்தெண்டிசைதுருவியுற்றதுறைத்
திடுமொற்றரொருபானிற்ப
வருமிறைவர்தமையுமனன்மொழியின்விடு
குநர்நபங்தோய்வாயில்காப்பப்
பரவரசகருமமிகப்பரிந்தியற்று
வோர்கடலிற்பரந்துசூழ
வருவநுனித்திசைக்குமதிமந்திரர்தந்
திரர்முதியோர்மருங்குசார. 14

முந்துதிறலிடும்பனையும்பகனையுமோர்
நொடிப்பொழுதின்முறுக்கிவீட்டி
விந்தைகுடியிருந்தபுயவீரநர
மடங்கனிகர்வெம்போர்வீமன்
அந்தவவையரசகுழாத்தரவினங்க
ணடுநடுங்கவசனிபோல
வந்திறைவன்வலப்புறத்தோர்மாமணியா
தனத்தின்மிசைமலைபோல்வைக. 15

எழுந்திடறிமன்னருளத்தேந்திழைநெஞ்
சிடைமின்னியிடைவிடாது
பொழிந்ததுருபதன்மனத்திற்போந்தவொரு
மேகமெனப்புகலத்தோன்றி
யுழுந்துருண்முன்னுடற்றியிலக்கொண்டொடிகைம்
மலர்ப்பிடித்தவொருவில்வீரன்
தொழுந்தகைமையண்ணலிடப்புறத்தோர்தூய்
மணியணையிற்றுலங்கிவைக. 16

சிந்துவரையரிமுருகன்செல்லமதன்
கரப்பவெழில்செய்மெய்மாமன்
மைந்துறுமாருதிவலத்தோர்மலிந்தமணிப்
பீடிகையின்வயங்காநிற்ப
மந்திரநூன்முனிவருமதிக்குமதிச்
சாதேவன்வளர்காண்டீபச்
சுந்தரப்பங்குனனிடத்தோர்சுடர்மணியா
தனம்பொலியத்தோன்றிவைக. 17

இலகுமிவண்மூன்றுமிறும்பூதெனக்
கதிரொளிசெம்மணிகளீய
நிலவொளிநித்திலமுமிழுநிறைந்தவுடுக்
கணநிழலைநிகரற்றோங்கும்
பலமணிதந்திடமுறுவற்பாவுமுகத்
தரிசுமந்தபைம்பொற்பீடத்
துலகமுழுதொதுங்குபுதண்ணிழறருசீ
ரொருகுடைக்கீழ்வந்துமன்னே. 18

வித்துருமவரைச்சிகரமேவுமிள
ஞாயிறைப்போன்மவுலிமின்ன
மத்துமலைசிறகுதித்துவந்தெனமா
மணிவலயம்வாகுதுன்ன
வுத்தமசத்துவகுணமோருருவெடுத்து
வந்தனையவுண்மைநோற்போன்
சத்தசத்தையறிந்துவணேச்சதமகனு
னுறத்தனிவீற்றிருந்தான்மாதோ. 19

அரசுசேய்சருக்க முற்றும்.



இரண்டாவது

## நாரதர் வருகைச் சருக்கம்.

இச்சருக்கம் நாரதர்வருகையும் சுந்தோபசுந்தர்சதை கூறுதலும்
துரோபதியை பாண்டவர்களனுபவித்தற்கு ஓர்
நியதியேற்படுத்தலும் கூறுகின்றது.
[இதுமுதல் 6 - கவிகள், நாரதர் வருகை.]

இத்தகையரசுவீற்றிருந்துவெண்டிரை
கத்துவாரிதிமகிகாக்குமெல்லையிற்
றத்திவிண்புவிபிலஞ்சரிக்குமோர்தவ
வித்தகமுனிவரன்மேவினனரோ. 1

சிற்றிடைக்குறமகட்படிவந்தீட்டிச்சூர்
செற்றவன்களிகொளத்தெரிக்குஞ்செங்கையான்
முற்றுறரகுபதிசரிதமுந்தொரு
புற்றுறைமுனிக்கெதிர்புகலுநாவினன். 2

காரணங்கண்டிடிற்கணத்தினிப்புவி
பூரணம்புகுந்தநுபுகலுநீர்மையான்
வாரணங்காத்தசேவடிவணங்குவோன்
ஆரணமொருவடிவமைந்தவாரியன். 3

உலகுதித்திடுமுளரோதிமத்தெருத்
திலகிறைமடியிருந்தெழுந்துவந்தவன்
புலவருமசுரரும்பொருதப்போர்மிகக்
கலகமுற்றிடச்செயக்களிக்குந்தன்மையான். 4

முக்கவர்த்தண்டொடுமுழுநாமநேர்
தொக்கியவடிவொடுமருணத்துசொடுங்
கைக்கரகத்தொடுங்கவிகையோடிசை
தக்கயாழொடுமுரந்தரித்தநூலொடும். 5

வந்தவச்சுரமுனிவரவைவாயிலோர்
முந்தறமகற்கெதிர்மொழியநீங்கறு
மைந்தரும்பூதம்போன்றணுகிப்போற்றினர்
சிந்தையின்முந்தியம்முனிவன்சேவடி. 6

பொருக்கெனமுனிவனைக்கொண்டுபுக்கவ
ரிருக்கையினெரியுமிழ்மணியிழைத்துவிண்

ணருக்கனிற்றிகழ்தவிசமர்த்தியேத்தினர்
இருக்கிசைகடன்முறையாவுமீந்தரோ. 7

வேறு.

பங்கயங்கதிர்கண்டெனப்பனிமிகுபரவை
திங்கள்கண்டெனச்சேயெதிர்கண்டெனத்திருத்தாய்
மங்குல்கண்டெனமஞ்ஞைநின்வரவுகண்டுளத்தோ
டங்கமுங்குளிர்ந்தனமுறுந்தளர்வெலாமறவே. 8

யாமியற்றியதவத்தினோவெங்குலக்குரவர்
தாமியற்றியதவத்தினோவிங்கிலத்தவத்தோ
காமமற்றவதெரிகிலஞ்சழிபிறப்பியாஞ்செய்
தோமகற்றியுய்விக்கநீவந்தவித்தோற்றம். 9

கரியமால்தருகடலமிழ்தயினுமின்பத்தின்
அரியஞானியர்சமாதியினடையுமின்பத்திற்
பெரியவின்பமின்றுற்றனமென்றனர்பெரியோர்
வரவுகண்டவருவகைக்குமுவமைமாறுளவோ. 10

கருணைவேந்தனிலன்சுதன்மற்றுளகனிட்ட
ரிருகைகூப்பொடுமொல்கிநின்றிவையிசைத்தேத்தப்
புரிநரப்புயர்யாழ்வழியருமறைபுகலு
மொருவனுண்மகிழ்ந்தாசிதந்தவர்க்கிவையுரைக்கும். 11

பாவகாரியரெனும்பழுவம்படப்பரவோர்
தாவமாமெனப்புவிவருந்தருமபூபதிகாள்
மூவராயவர்முதல்வனுகியவொருமுகுந்தன்
காவலாகியநும்மெதிர்கடற்புவியெவரே. 12

கண்ணிலாதவன்முற்பயந்தருளியகருணைக்
கண்ணிலாதவனூற்றுவஞ்சனைக்கடல்கடந்தீர்
எண்ணிலாதவனிழைப்பதீங்கின்னமும்வென்றே
விண்ணிலாதவனிகர்ப்பநன்காசுவீற்றிருப்பீர். 13

சேட்டைகொண்டுழல்பகனிடும்பனைச்சினந்தாவி
வேட்டைகொண்டதுந்துருபதனவைமுன்வேதியராய்க்
காட்டையொன்றின்மீனறுத்தொருகாந்தைகைபிடித்து
நாட்டையொன்றுவென்றியுந்தெரிந்துவக்குநானிலமே. 14

மீதலத்தவருவப்புறவறந்தனிவிளங்கப்
பூதலத்துமின்னிடரறவெழுந்தபுண்ணியரே
யோதலத்தகப்பதத்தவொண்டொடியொடுமெவடன்
காதலத்தையுமொன்றுளக்களிப்பின்வாழ்க்கையரோ. 15

என்னுநல்லுரைகேட்டயற்றுச்சிலுற்றிருந்தே
மின்னல்வந்தெனவந்தனள்வேள்வியின்வந்தாள்
சொன்னமாமிபின்முனிவரன்றுணைமலர்ப்பதமுன்
சென்னிதாழ்ந்தொதுக்குற்றனடிருத்தகுமயில்போல். 16

காசுலாமுலைக்காரிகைக்காசியைக்கழறிப்
பேசிநன்மொழியாதவிக்குவப்பொடும்பின்னர்
மாசுறுங்குணச்சோகொடம்மானுயிர்வவ்வுங்
கேசவற்கருங்கேண்மையர்க்கருந்தவன்கிளத்தும். 17

மாதிரம்புகழ்வென்றிநம்மைவர்க்குமனையாங்
காதலிம்மினொடெத்தகைமுறைபெறக்கலந்து
போதுபோக்கிநின்றனிரெனப்புவிபுகழ்பொறைய
னோதினனொருவைகலொவ்வொருவரென்றுவந்து. 18

கேட்டமாமுனிநீவிரைவரும்நசைசெழுமி
வேட்டமின்வயின்விழைவொருதினஞ்செய்துவிடுக்கின்
வாட்டமுற்றகமாழ்கிமையலின்முறைவழுவிக்
கேட்டைநல்குமற்றிதற்கொருகாதைநீர்கேண்மின். 19

[இதுமுதல் 9 - கவிகள், சுந்தோபசுந்தர் கதை.]

இந்தமேதினியெடுக்குறும்வலத்தினரெறிநீர்ச்
சிந்துமூலமுங்குடித்திடுமிடுக்கினர்சினந்து
முந்திவானவர்மாண்பெலாஞ்சிதைத்திடுமூர்க்கர்
சுந்தனோடுபசுந்தனென்றிருவலித்துணைவர். 20

தம்மிற்றாமலாலொருவராற்சாவிலாவரத்தோர்
கொம்மைவீங்குபொற்குவட்டொருபுறத்தினிற்குடிகொண்
டிம்மியுந்தமிற்பகைபெறாதெண்டிசையடக்கி
வெம்மைசெய்தனர்விட்புலமெலிந்துமெய்விதிர்ப்ப. 21

நொந்திலேகர்போய்த்தங்குறைவிதியெதிர்நுவலத்
தந்தோராயிழைதனையயன்றிதியருடனையர்ச்
சிந்தவேவினன்செறிகுழற்றிலநுதற்றெரிவை
வந்துதோன்றினளத்தகுவயவர்முன்மயில்போல். 22

பேச்சினிற்குறுமுறுவலிற்பிறங்குதன்முன்கை
வீச்சினிற்பணிதிருத்தலின்வாடையின்விழிவா
ளோச்சினிற்படரொயிலினிற்றகுவர்தம்முயிர்க்கே
யாச்சுதென்றிடமயக்கினடிலோத்தமையன்னம். 23

மேருவுச்சியின்வீழ்திரைக்கங்கைபோல்விளங்கு
மாரவெம்முலையணங்கெனுங்காலன்முனணுகிப்
பாரிநீயெனவிருவருமவள்காம்பற்ற
மூரல்செய்தனள்மோகசாகரத்தவர்முழுக. 24

முன்னவன்விழைந்தேதொடுமொய்குழறன்னைப்
பின்னவன்றொடற்பேதமையெனமுனோன்பேசப்
பின்னவன்விழைந்தேதொடும்பேதையைப்பெட்பின்
முன்னவன்றொடன்முறைமையன்றெனப்பினோன்மொழிந்தான்

கொண்டகாதலிற்கோல்வளைமுன்குனிந்திறைஞ்சித்
தொண்டைவாயிதழமுதளித்தாளெனத்துதிக்குங்
கண்டகர்க்கிவைகழறினள்ககனம்விட்டிறங்கி
மண்டலத்தினின்வல்லுநர்ப்புணரவேவந்தேன். 26

பொருவறுந்திறற்காளையரென்றுமைப்புகழ்வே
னொருவரேயெனைமுயங்குதலுசிதமுன்னுறுநு
மிருவர்வன்மையாலுணர்குபுநும்மினீரிகலிப்
பொருதுவென்றவர்பாரியாளென்றனள்பூவை. 27

அன்னவேலையங்கசன்கணையடப்பொருதவராய்
முன்னர்நல்வரமறந்துவெம்மோகமேமுடுக
மின்னைவேட்பல்யான்யானெனவெஞ்சமர்தொடங்கி
வன்னியாமெனப்பொருதிருவயவருமாய்ந்தார். 28

[இதுமுதல் 3 - கவிகள், காமத்தின்கொடுமை.]

அறந்தவிர்த்தருணீக்குநல்லுறவையுமழிக்கும்
மறந்திருத்துநீங்கறுவசையளிக்குமானத்தைப்
புறம்புகுத்தும்பொய்வஞ்சனைவிளைத்துயிர்போக்குந்
திறம்புகாமத்தின்செய்கைபின்னிரயத்துஞ்சேர்க்கும். 29

சந்திரன்கலைதசமுகன்றலைகளைத்தவிர்த்து
மிந்திரன்னுயர்சனக்கினம் பெறவிழைத்துங்
கந்தனைக்குறக்காந்தைதன்கழல்விழக்காட்டும்
விந்தைகாமத்தின்வீக்கமேயன்றிவேறுண்டோ? 30

இந்திராதியர்திருக்கவர்ந்திறைவராமூவர்
தந்திறத்தையுந்தெறுவலித்தகுவர்தம்மாவி
சிந்தினுரொருசேயிழையாலெணிற்றிறம்பி
முந்துகாமத்தின்மிக்கொருமுழுப்பகையுளவோ? 31

[இதுமுதல் 3-கவிகள், நாரதர் பாண்டவர்க்கோர் நியதிகூறல்.]

இந்தமன்புவியறிந்தனவிவ்விதிகாசந்
தந்திவென்வருந்துருபதன்றவம்புரிந்தளித்த
சந்தமென்முலேவழக்கினீரன்னர்போற்றயங்கி
நொந்துபுண்படாதுய்குவானொருமொழிநுவல்வேம். 32

வதுவையாற்றியமுறைவழிவருடமொன்றொருவர்
புதியமாமதிமுகநலாட்புணர்தலேவழக்கிவ்
விதியின்மேவுநாளேனையர்மின்னிலேவிரும்பின்
அதிககேடுடைத்தாமதினறிதிரொன்றின்னும். 33

பொருந்திநின்றிடுமிருவரையுறைவிடம்புக்குத்
திருந்தநோக்கிடிலேக்கிலேனீராறுதிங்கள்
அருந்தவத்தினர்கோலமுற்றரும்புனல்படிவான்
விரும்பியிம்மகிவலம்வரமேவுதல்விதியே. 34

[நாரதர் பாண்டவரைவிட்டு நீங்கல்]

என்னமாமுனிகூறுசொற்கிசைந்தவனிருதாட்
சென்னியேந்தியேத்தைவர்க்குச்செப்பிநல்லாசி
மின்னுநூலணிமார்பினன்விண்டலம்படர்ந்தான்
சொன்னநீர்மையினொழுகியாண்டிருந்தனர்தூயோர். 35

நாரதர் வருகைச்சருக்க முற்றும்.

ஆக - சருக்கம். 2-க்கு கவி (54)

---

## ௩ - வது நகர்நீங்கு சருக்கம்.

இச்சருக்கம் தருமனும் பாஞ்சாலியும் பொருந்தியிருந்தயிடத்திற்கு அருச்சுனன்போய் காணுதலும் அதனால் நாரதர்வாக்கின்படி தீர்த்தயாத்திரைசெய்யும்பொருட்டு யதிவேடந்தரித்து இந்திரப்பிரத்தத்தைவிட்டு நீங்குதலுங் கூறுகின்றது.

[இதுமுதல் 3 - கவிகள், ஐவராசாட்சிசெய்தல்.]

ஆவுராய்தறியாதுலர்சாலேமெய்
தாவுநோய்க்குறைதாங்குதருயில்சேய்
காவலூண்கல்விகற்குநர்க்குண்டிநீள்
வாவிநீர்ப்பந்தலாவிற்குவாயுறை. 1

தின்னும்பண்டங்கடிக்கற்றவேழைகட்
கன்னமீதலறவைப்பிணஞ்சுடல்
கன்னிதானம்பிறர்துயர்காத்தலென்
றின்னும்யாருமியம்புமெண்ணான்கெனும். 2

பன்மையுற்றவறம்பொறைபண்பிசை
வன்மைநீதிமதிப்பனமற்றுள
நன்மையாவுமலிந்திடநானிலம்
புன்மைவீயப்புரந்தனரைவரே. 3

[பிராமணன்பசுமந்தையை வேடர்கவர்தல்.]

உள்ளமும்முணர்வும்மெனவொன்றியே
யெள்ளலின்றியிருந்தரசாளுநாள்
விள்ளுமோர்மறைவித்தகனாநிரை
கொள்ளைகொண்டனர்புள்ளுவர்கூடியே. 4

வேதபாரகன்விம்மிவிரைந்தடி
மோதவன்பிடர்முற்பொருள்கண்ணுறா
னீதிமன்றம்நெறிக்கொடுநேர்குவான்
காதைபற்பலகூறிக்கலங்கியே. 5

[பிராமணன் ஆராய்ச்சி மணியடித்தல்.]

வந்தசைத்தனனாலசையாமணி
யந்தவாயினின்றாரின்றோரந்தணன்
னைந்துவந்தனனென்றுநவிலுமுன்
வந்தெதிர்ந்திடும்வானவர்கோமகன். 6

[அருச்சுனனுக்கு வேதியன் குறைகூறல்.]

உள்ளமென்குறையோதுதிர்நீரென
வள்ளலேவலனுக்கொருவாரிதி
வெள்ளமேயெனதாநிரைவேடர்கள்
கொள்ளைகொண்டனரென்றெதிர்கூவினான். 7

[அருச்சுனனபயந்தங் கொடுத்தல்.]

அஞ்சலீரெனவங்கையமர்த்திநீ
ரிஞ்சிருந்தனியேகியவ்வில்வலி
விஞ்சுவேடரைவென்றுமதாநிரை
யெஞ்சலின்றியளிக்குதுமீண்டெனா. 8

[வில்லெடுக்கச்சென்ற அருச்சுனன் துரோபதியையுந் தருமனையுங் காணுதல்.]

வில்லைமேவக்கைமேவினனத்தலை
சொல்லறன்சுதனோடுசுகந்தனைக்
கொல்லவன்பொடுடன்படுபாவைதன்
மெல்லடித்துணைகண்டுவிதிர்த்துமெய். 9

[அருச்சுனன் மனவாட்டமுறல்.]

அந்தியுற்றவலர்முகத்தாமரை
சிந்தையுற்றசெழுந்தழற்பஞ்செனை
முந்தியுற்றதுநாணமுகிழ்முலை
விந்தையுற்றொளிர்வெம்புயவீரற்கே. 10

[விசயன்தேறுதலடைதல்]

துய்க்குமின்பந்தொலைந்திடமுன்புகிற்
றக்கசாந்தியிதற்குளசார்கிலே
னிக்கணந்தனிலென்னினென்வாய்மொழி
பொய்க்குமேனரகுண்டெனும்புந்தியான். 11

[வில்லெடுத்துச்சென்று வேட்டைச்செயித்தல்.]

பின்னுற்றேகப்பிணங்குபதங்கொடே
முன்னுற்றம்பொடுகொண்டுகைமூரிவில்
இன்னற்றந்தவெயினரையெற்றினான்
மின்னற்றங்கித்தபாலெனமேவியே. 12

[பிராமணருக்குப் பசுமந்தையை யளித்தல்.]

கோக்கணத்தொடுகொண்டவராருயிர்
தீக்கணக்கரத்தானிடஞ்சேர்த்தினான்
பூக்கணங்கள்பொலிகுழன்மெய்நலத்
தாக்கணங்கன்பன்றன்வயினன்பினோன். 13

[நாரதர்மொழிப்படி யாத்திரைசெய்ய நினைத்தல்.]

தன்னிகர்ப்பறுயாழிசைத்தாபதன்
முன்னுரைத்தமொழிப்படிமூழ்குவான்
நன்னிரைப்புனலெண்ணினனாரிதோய்
வின்னிறைத்தகைவீரர்க்குவீரனே. 14

[தருமராசனிடம்வந்து விசயன்வணங்கிக் கூறுதல்.]

**வேறு.**

உலத்திற்சிறந்ததிணிதோளானுண்மைகருணைபொறையுடைமை
நலத்திற்சிறந்ததிருமனத்தானுகருலகின்வானவர்க
டலத்திற்சிறந்தபெருங்கீர்த்திதவழுங்குவளைத்தாரான்முன்
வலத்திற்சிறந்தவில்விசயன்வந்துவணங்கியிவைவழுத்தும். 15

[தீர்த்தயாத்திரைசெய்ய விடையளிக்கவேண்டுதல்.]

அறைந்தபுனிதத்தலம்நாடியரியதீர்த்தத்தாடியங்க
ணுறைந்தமூர்த்திதனைச்சேவித்துணர்வேயறிந்திவ்வுலகாதி
மறைந்தமனமெய்ஞ்ஞானியரைவணங்கும்பெரும்பேறியான்வாய்க்க
நிறைந்தகருணையடிகள்செயஞாயமெனவும்நிகழ்த்தினனால். 16

[தருமன்வருந்தி விடைகொடுத்தல்.]

பிறிவாம்பிணியுள்ளிழுப்பவெளிபோர்ப்பமுனிசொற்பெரிதுழன்றே
யறிவாமெனுவனுதரிப்பவறன்சேய்விடைசொற்றனன்வயிரத்
தறியாக்கனகப்பொறையாகச்சாற்றுந்தண்டதரனுக்குஞ்
சிறியார்தமக்குஞ்செப்பியவரினைந்தேகூறும்விடைதேர்ந்து. 17

[குந்தியிடம் விடைபெறல்.]

சென்றுபயந்தயாதவிதன்றிருத்தாட்படிந்துற்றதுசெப்பக்
கன்றுபிரியுங்காராவிற்கவன்றுகவுந்திகண்மணிவா
வென்றுதழுவியுச்சிமுகந்தினிதாய்வருகவெனவிடுப்ப
மன்றல்கமழ்சண்பகமேனிவடிவேல்விழிமின்பால்வந்தான். 18

[துரோபதியிடம் விடைபெறல்.]

செருக்கிற்றிலக்கைக்கைப்பிடிக்குஞ்செஞ்சேவகனைமின்பணியச்
சுகத்திற்பழிச்சும்பாவாய்நீர்சூழ்பூவலம்வந்தெதிர்வலென
வலத்திற்கடுத்தமுகப்பொலிவென்றுன்றேருரைத்தற்கறிகுறியாய் [ள்.
முகத்திற்குவளைமுத்துதிர்ப்பமொழிந்தாள்விடைமுன்முறையுணர்வா

[அருச்சுனன் தவவேடந்தரித்து மனைவிட்டு வீதியில் வருதல்.]

அணிந்துபரமன்றிருக்கோலமாடம்பரமன்கோலமறத்
துணிந்துநாணிந்திரையிருந்ததோமில்செல்வத்தூய்மனையைத்
தணந்துமறுகுநனந்தலைவாய்சாரவுணர்ந்தவிளைஞர்மலர்
பிணைந்தகுழலம்பேதையரும்பிரியாவிடையாற்பேதுற்றார். 20

[இது முதல் 5 - கவிகள், நகரமாந்தர் துயருறல்.]

என்னேயிதுவென்றெதிர்வருவாரேங்கிக்கவன்றுதுயர்படர்வார்
முன்னேயோடிப்பலர்க்குமிதுமொழிவார்முகத்திலறைந்தழுவார்

மின்னார்நகைகொளெழிற்படிவவிடலைக்கிதுவோவிதியென்பார்
பொன்னார்முரசமுயர்த்திரதப்பொறையற்கிதுவோபுகழென்பார். 21
சாயாக்கோல்கொடுமனிதுதானேபணித்ததன்றென்பார்
தாயாச்சகித்திம்மழவிடையைத்தணந்தவிதமெத்தகைத்தென்பார்
ஓயாக்கவலைகொண்டுழலுமொருமீனிகர்க்குமின்னென்பார்
காயாக்கடல்செல்லுறழ்மேனிக்கடவுட்கிதுவோகருத்தென்பார். 22

பூமன்சினவாச்சிந்தைசினம்பூப்பப்புகுந்ததிதுவென்பார்
வீமனறியின்வில்விசயன்வெளிவந்ததுவும்வியப்பென்பார்
காமனனையகவின்மெயிருகனிட்டரிதுகண்டிலரென்பார்
ஊமன்கனவேயன்றியிதினுண்மையுரைப்போர்யாரென்பார். 23

ஒன்னார்பொருட்டினிவ்வேடமுசந்தானென்பாருயருலக
மின்னார்பொருட்டினுமென்பார்வீணையேந்தியிவண்வந்த
முன்னார்பாட்டுமுனிசிலசொன்மொழிந்தானெனவுஞ்சிலரெமக்குச்
சொன்னாரிட்டமதற்குறவேதொகுத்தமுறையினுமென்பார். 24

நென்னற்கடகுஞ்சரவெரிந்மேனிவர்ந்திந்திரன்போனிலவியகோன்
இன்னற்படவின்றிவ்வேடமெடுத்ததிறம்பூதெனக்கவன்று
மின்னற்புரையுமிடையாரும்வேழம்புரையுநடையாரும்
பன்னற்கரியவின்னபலபன்னிப்பரிவிற்றொடர்ந்தனரால். 25

[அருச்சுனன் நகர்விட்டு நீங்குதல்.]

தொட்டுமதியினுடற்களங்கந்தோயப்படியுமெயிறணந்து
சிட்டிமகிதாங்கரவின்முடிகிடக்குங்கிடங்குங்கடந்தேகி
யொட்டிவருமங்கர்மாந்தர்க்குண்மையுரைத்தேயகற்றியுட -
னட்டமறையோர்தம்மொடுநன்னாடுமிகந்துநரன்வந்தான். 26

[சோலைகளின் சிறப்பு.]

(வேறு.)

புயலினமடர்ந்துவந்துகண்படுப்பப்பூத்தகன்றோளிர்சினைத்தருமீக்
குயிலினங்கூவச்சுரும்பெழுந்திசைப்பக்கொஞ்சியஞ்சுகமுறக்கோல
மயிலினம்நடிப்பத்தென்றல்வந்தலைப்பமற்கடங்கிளைதொறுந்தாவ
வெயிலினம்நுழைதற்கரியபல்சோலைவழியெதிர்ந்தேகினன்விசயன். 27

[முனிவராசிரமம் வனக்காட்சி]

அரணியுற்றெழுசெங்கனலிடையுதித்தவாகுதிப்புகைமுகிலனைந்தாங்
கிருணிறைதவழ்ந்துமணங்கமழ்முனிவரிருக்கைகண்டகமகிழ்ந்தேகிக்
கரிணிவல்லியங்கண்டீரவமேனங்கவயமாச்சல்லியநகுலம் [ன்.
அருணம்வல்லுளிசம்புசம்பலவிலங்குபடர்ந்தவெவ்வடவிசண்டிகந்தா

குறிஞ்சி.

திரட்டியிந்துளமாக்கோங்ககிலாரந்தேக்குயர்சுனைபடச்சிதறி [ய்த்தூரீர்த்
வெருட்டிவல்லியத்தையெறிந்தெறிந்தார்த்துவெண்மணிகொழித்துவே
திருட்டுறழ்வடிவத்திபமினைந்தரற்றவெடுத்தலைக்கரத்திற்கீழ்மேலா
யுருட்டிவெற்பிடைநின்றிழியுஞ்செவ்வருவியொழுக்குவந்துவந்துகண்டிகந்தான்.

கண்படவெழிலிக்கொருதனியிடமாய்க்கதிரவனொடுமதிபுடுவும்
புண்படநிவந்துபொன்னுலகிழியப்போந்துமேலுலகெலாம்புகுந்தே
மண்படுமுலகத்தவரும்வானுலகமன்னுதற்கொருகருவியுமாந்
தண்படுசிகரத்தடவரையினங்கடனஞ்சயன்பலகடந்தனனால். 30

முல்லை.

தடமதவொருத்தலினம்பலதழுவிச்சரித்திடுஞ்சாரல்கடணந்தே
யிடர்படவனைநீத்தேங்கியவரிணைவிளங்குழவிக்கெதிரிரங்கிக்
குடநிகர்செருத்தற்கோதறுதீம்பாற்கோமகிழ்ந்தூட்டும்பைங்குல்லைப்
படலையம்பகவற்றெழுதுறைதொறுவர்பதிபலகண்டிகந்தனனால். 31

பாலை

புலிமிகவெடித்தப்புழைவழியரவின்மணியொளிபோந்துமேலிரவி
சவிகெடத்திகழ்ந்துமுகிறவிர்ந்தழல்சஞ்சரித்துலோபியர்மனந்தனையே
யுவமைபெற்றகிலைத்தருசளிகருகியுகவலகையுமுயிர்த்துழலுங்
கவுரிநாரணிக்கற்புதக்கடும்பாலைக்கடந்துணியொடுபலகடந்தான். 32

[கங்காநதியைக் காணுதல்]

இத்தகைக்காட்சித்திணைபலகண்ணுற்றீடுடைப்புனல்படிந்திசைசேர்
வித்தகரடிதோய்ந்துடனுறையாறுவினைஞரோடேகிவில்விசயன்
கத்தரிச்சதங்கைகலிப்பவம்பலத்தோர்காலினிற்காளியோடாடும்
நித்தனுக்கொருபெண்டருமுயரிமயநேர்வருமொருநதிநேர்ந்தான். 33

நகர்நீங்குசருக்கம் முற்றும்.

ஆக சருக்கம் 3 - க்கு கவி (87)

## ச - ஆவது கங்கைச் சருக்கம்.

இச்சருக்கத்தால் கங்கைபுவிவந்தகதையும் கங்கையின் வருணனையும் கதாநாயகன் கங்காஸ்நானம் செய்தலும் கூறப்படுகின்றது.

[இதுமுதல் 3 - கவிகள் பகீரதன்கதை.]

புரவிவாசவன்காப்பப்புடவியெண்டிசையுந்தேடி
யுரவுநீர்க்கடறொட்டுட்பாலோங்கியகபிலற்சீறி
யெரிவிழிதனினீறாகவெரிந்தனரயமேதஞ்செய்
தரணிமன்சகரன்றந்தவறுபதுசகத்திரத்தோர். 1

பகிரதனெனும்பேர்மன்னப்பார்த்திபர்மரபிற்றோன்றிப்
பகிரெனவெரிந்தோரும்பர்பதமுறச்செய்வானெண்ணி
யுகிரொழமாறன்பாதத்தொருநதியிம்பரோங்க
மகிருகவனத்தைநண்ணிவான்புகழ்தவஞ்செய்தானால். 2

ஆண்டையாறுயிரங்கோனுற்றச்சங்கரன்கந்தேங்கி
மீண்டுபூச்சனுவேள்விமிசைபடவெதிர்ந்துவீய்ந்தோர்
காண்டகுமுலகமெய்தக்கலந்திடுங்கங்கையென்னு
மாண்டகுமறிஞர்போற்றுவரநதியடுத்தான்மன்னே. 3

[இதுமுதல் 12 - கவிகள், கங்கைவருணனை.]

பண்டைநாயகன்பதத்துறப்பவித்துமேதினிபடைத்தோன்
குண்டிகைநிறைந்துபொங்கிக்குலவுகற்பகமளாவி
விண்டலைமிகந்துதாணுவேணியார்ந்திறங்கிப்போந்து
மண்டலத்தொழுகுவேகவானதிவண்மைகண்டான். 4

வற்றினன்வெஃகுமாதரிருவரிலொருமின்றன்னை
யேற்றினனிடையின்மற்றோரேந்திழைதன்னையேற
வேற்றினன்முடியின்மீதினென்னின்மற்றவடனேற்ற
மேற்றிநாமுரைத்தற்கும்மாவெஞ்சிறுபுலத்தற்றோமோ. 5

பொற்றைபற்பலவுமேறிப்பொங்கழற்கானம்போந்து
முற்றமெய்யலக்கண்டீர்ப்பானெண்டிரைக்கரத்தாற்கங்கை
பெற்றதன்மகனுக்கன்பாம்பேரனென்றுரிமைகூர்ந்தாங்
கெற்றினளெனமன்மீக்காலினியபூந்திவலைவீசும். 6

அன்புகொண்டுற்றதன்சேயருங்குலமைந்தற்கண்டே
முன்பொளிர்முகமேபோன்றமுண்டகமலர்ந்துநின்ற
பின்பவனரசச்சின்னம்பெயர்ந்துகானடப்பநோக்கித்
துன்புகொண்டழுவதேய்ப்பச்சுரைதவழ்குவளைசோரும். 7

தணத்தலிற்றன்னைச்சேயைத்தரிக்கலாதாற்றுங்கொண்கன்
குணத்தினையறிந்திரங்கிக்கோதைகுங்குமபடீர
மணத்தமான்மதமுமேந்திவந்துமெய்மகிழத்தந்தே
யணைத்தனளென்னவோடியளக்கரிற்றோயுமன்னே. 8

வாசனைக்கந்தியென்னுமாற்றவண்மணந்துநின்றான்
நேசமற்றென்மேலென்னுநேரிழைகணவற்சீறி
வீசிவாள்வாளையாமைவெவ்வலிக்கிடுகுபற்றிப்
பூசலிட்டெதிர்ந்தவாபோற்புணரிமேற்பொங்கிப்பாயும். 9

சாற்றுமிச்செல்வத்தன்றோசபிலமாதென்கீழுற்று
மேற்றமுற்றனளென்றாற்றுதிழுக்குறச்செய்வானெண்ணி
மாற்றவடந்தைசெல்வம்வாரிவந்தனளாமென்னத்
தோற்றினளிமையத்துற்றேதுலங்குபல்பொருள்களேந்தி. 10

விளர்சிவப்பரிதம்பொன்மைமேவுமேனிபகமுச்சி
நளிர்சிறையுறவிகங்கநாகிளங்குழவிதுஞ்சத்
தளமலிவனசத்தொட்டிறன்னையஞ்சிறுகாலாட்ட
விளரிராகத்தைப்பாடிவிழைந்தறுபதந்தாலாட்டும். 11

புதுச்சரோருகங்கடோறும்பொங்குபைந்தேறலுண்டுண்
டுதப்புவவோடியாடிவீழ்குவவொன்றற்கொன்றாங்
கெதிர்க்குவமுரல்வகூட்டுண்டெற்றுவசுரும்பர்கோடி
மதுக்குடிப்பவருக்கம்மானமும்வரம்புமுண்டோ ! 12

வருபலமீன்கவ்வாமன்மவுனயோகியர்போலுற்றே
யொருபெருமீன்மேனோக்குமுற்றனகுராண்டங்கோடி
யருகெதிர்சங்கைக்கொக்கென்றஞ்சிவாய்துடித்தேயோடி
மருவும்நந்தெனவஞ்சாமல்வலாகமுன்மயிலைகோடி. 13

உட்பகைகொண்டுநின்றவோரிருதிறத்தார்மாட்டும்
நட்பினைக்கொண்டுநேரநடித்திடுமொருவன்போலக்
கட்செவிமுன்புதுண்டங்காட்டியேதிரிவமீனம்
பெட்புறப்புச்சங்காட்டிப்பெயர்குவமலங்குமன்னே. 14

நீர்குடைமாந்தர்தங்கணிறைமணியினங்கள்வாரிப்
பேர்குநரென்னக்கூவிப்பிதற்றல்போலரற்றும்பேகம்
தேர்மதிக்குமரிவந்துதிரும்பினள்குடிசைக்கென்ன
வூர்குவவெளியின்மின்னியுட்புகுமளையினள்ளி. 15

யானெனதெனுஞ்செருக்கையிகந்தெதிர்காண்பவெல்லாங்
கானனீர்கயிற்றிற்பாம்புகனவுலகென்னக்கண்டே

யூனமில்பிரமமொன்றேயுண்மையஃதுணர்வென்றோர்ந்து
மோனமுற்றுவக்குஞ்சீவன்முத்தர்களினங்களோர்பால். 16

சித்தர்கின்னரர்காரூடர்தேவர்விஞ்சையரியக்கர்
தத்தமங்கையரோடெய்தித்தாழ்புனல்குடைவவோர்சார்
கத்தனையுன்னிமூலக்கனலெழீஇவாசிநாட்டத்
துத்தமவமுதுட்டுய்க்கும்யோகிபரினங்களோர்சார். 17

பிறைநுதலமைத்தோட்சாயப்பிருகுடிப்பேதைமாமோ
டறைகழலரசரீட்டமரும்புனல்குடைவவோர்பால்
கறைமிடற்றிறைபோற்றந்திகாத்தமேவாரிறையேபோலும்
பொறைநிகழ்வேடமுற்றபுனிதவைதீகரோர்பால். 18

பிரமனேர்குரவனுங்கோர்பிறங்குபீடத்தின்வைகி
யருமறைக்கணங்கள்சூழவாகுதிநிறைப்பவோர்சார்
பொருவருபுனிதமாயப்புண்ணியப்புனலுட்டோய
வருணவாச்சிரமபேதமறைந்தனநிறைந்தவோர்சார். 19

இன்னமூவுலகம்யாவுமெதிர்ந்துதோய்கங்கைமாட்சி
மன்னுளமகிழ்ந்துநோக்கிமதிவலிமுதியாரோடும்
முன்னர்மாமறையினீர்மைமூழ்கிச்செய்விதியுமுற்றிப்
பின்னரங்கதிக்கூலத்திற்பெரிதுலாவுற்றுவந்தான். 20

கங்கைச்சருக்கமுற்றும்.

ஆக சருக்கம் 4 - க்கு கவி (107)

---

## ரு - ஆவது உலூபி திருமணச் சருக்கம்.



இச்சருக்கத்தால் கவுரவியனென்னுஞ் சர்ப்பவேந்தன் புதல்வியாகிய உலூபியைக் கங்கையிற் கண்டு இச்சித்து அவள்மொழிக்கிணங்கிப் பாதலஞ் சென்று மணம்புரிந்து அராவானென்னு மகவை யளித்தல் கூறப்படுகின்றது.

[இதுமுதல்-5. கவிகள், உலூபிவருணனை.]

சாலவண்டிமிர்கட்சொரிமலரணிதயங்கி
நீலமஞ்சிடையுடுப்பொலிந்தன்னநீள்குழலாள்
காலம்நோக்கியேயிருந்தனகடையனல்குறுகி
யாலமோடெனவரிபடராஞ்சனவிழியாள். 1

பாதிமாமதிக்கொருபுகழ்பகுக்குநன்னுதலாள்
ஓதவேறிணையின்றியெவ்வுலகையுமயக்குஞ்
சூதிதாமெனத்தகும்பிநேர்சுடரிழையெறிந்து
மோதுவாரிணைத்தகர்த்திறுமாந்தெழுமுலையாள் 2

முல்லைமுத்தைமெய்துளைத்துநாண்பெறச்செய்மூரலினு
ளில்லையுண்டெனக்காண்பரும்பிரமநேரிடையாள்
பல்லகீரைமென்விரையம்பொற்றட்டமீப்பரவிப்
புல்லலொத்துமென்மயிரரும்பகன்றபொன்பகத்தாள். 3

பஞ்சவைந்தொளிர்பங்கயநறுமலர்பணிக்க
வஞ்சமஞ்சுறக்கிளர்ந்துலாவுந்திருவடியாள்
கொஞ்சுமஞ்சுகங்குயில்குழல்யாழிவைகுலைய
விஞ்சுமஞ்சுதைவழிதரமிழற்றுமென்மொழியாள். 4

மீதலத்திற்காண்பறத்திகழ்மேதகுவிபவப்
பாதலத்துறைகவுரவியன்பணிக்கிறைவன்
காதனற்றவத்தெழுஞ்சுணங்கடர்முலைக்கன்னி
தாதலர்க்குழலாளுலூபிப்பெயர்தரித்தாள். 5

[உலூபி கங்காஸ்நானத்திற் கேகிர்தல்.]

சிதறுசெவ்வரிச்சேல்விழிச்சேடியருடனே
கதறுவெண்டிரைச்செழும்புனற்கங்கையிற்படிவான்
பதறுமார்வமுற்றெதிர்ந்துதங்குழுவொடும்படிந்தே
யுதறியாடினளாங்கலர்மலரொடுத்துவந்து. 6

[ஸ்நானஞ்செய்தெழுதல்.]

தங்கணல்லுறுப்புவமைகொடாரெறிந்தாடி
யிங்கிதம்பெறக்குடைந்துபின்கரையிவர்ந்தெவரும்
பொங்குவில்கலன்றிருத்திமெய்தூசிடைபுனைந்தா
ரங்கவாயமுன்றேன்றினனம்பரத்திறைசேய். 7

[அர்ச்சுன னுலூபியைக் காணல்.]

ஈட்டமுற்றவர்தம்மினவ்வின்குழன்மொழிமேல்
நாட்டமுற்றுளம்பதைத்தெழுமையலானரன்றன்
சேட்டமுற்றமுன்வடிவொடுமுன்வரத்தெரிந்தே
வாட்டமுற்றனண்மதன்கணையடப்பொருமங்கை. 8

[காமப்பார்வை.]

அரைத்தகுங்குமந்திமிர்ந்தடிபரந்துகச்சடர்ந்து
நிரைத்தபூணெறிந்திலங்கிளமுலைவரைநிவந்தே

யுரைத்தமன்விழியுறங்கினவொளிர்மணிவலய
வரைத்தடம்புயந்துளைத்தனமடவரல்விழிவேல். 9

உரைபயின்றுணர்ந்தாவதென்காதனைக்கொத்து
விரவிநிற்குநர்க்கென்னமேலவர்விரித்திருந்தும்
மரபறிந்தனர்வயிரவாட்கொடுவரைசிறகீ
ரரிசுதன்முகமலர்ந்துபின்னீதவட்கறையும். 10

இலகுமிவ்விடைமூவுலகேந்திழையவர்க்குந்
திலகமாமயிலேயெனதுயிர்க்குத்தெய்வதமே
கலகமாற்றுமங்கசன்வலிதெறக்கருதுவல்யா
னிலவுநின்மனத்தியல்பறைகெனமயினிகழ்த்தும். 11

[உலூபி அருச்சுனனுடன் பாதலஞ் செல்லல்.]

இன்பமுற்றுதுமிராதியுமதனெனவென்மீ
தன்புமுற்றியெம்பதிக்குறினீயெனவடையுந்
துன்பகற்றுளத்தநாளையெனத்துணிந்தான்
முன்புதுற்றினளவனொடும்பிலத்தின்மொய்குழலே. 12

அரவமன்னனுக்கவ்வெலாஞ்சேடியரறையத்
தரையின்வந்தவரென்னினுந்தேவசஞ்சாரென்
றிலறத்தெரிந்தனமுனமைவரிலொருவன்
வரைநிகர்த்ததோண்மாருதியிவண்வரமதித்தே. 13

[அருச்சுன னுலூபியை மணம்புரிதல்.]

என்றுவந்தணியூரிழைத்திருக்கிசைவிதியின்
மன்றல்முற்றுபுசெய்தனன்விடதரமன்னன்
ஒன்றியன்றிலும்பெடையெனவுருமலர்ப்பிரசந்
துன்றுவண்டினிலிருவருஞ்சுகக்கடலுேய்ந்தார். 14

[உலூபி கருப்பமங் கொள்ளல்.]

நலததவின்னகைநல்குமெல்லிதழமுதுடனப்
பிலத்தமர்ந்தபோமுதமும்பெரிதுவந்தருந்து
முலத்தைவென்றதோண்மன்றருஞ்சுகவமுதுண்டே
சொலத்தகுமுலூகித்திருக்கருப்பந்துன்றினளால். 15

[உலூபி அராவானென்னு மகவை யளித்தல்.]

கற்பநாட்டவஞ்செய்யினுங்காண்பரிதென்ன
விற்கொளோரம்பினுலகெலாம்வெல்வலியோனென்
றற்புதத்தநாள்கோளொடுமோரையுமறையப்
பொற்புறுமராவானையப்பொற்கொடிபயந்தாள். 16

[அருச்சுன னுலூபியைப் பிரிதல்.]

வடிவமைந்தனைநோக்கியுண்மகிழ்ந்துமற்சடத்துக்
கொடியமைந்தவன்பின்னரக்கோல்வளை வருந்த
முடிவறிந்திடற்கருமறைமுழுதுணர்முனிவர்
படிவமைந்துமண்வந்தனன்பாதலமகன்றே. 17

வந்துசானவிவழியவண்வதிந்தவேதியரோ
டிந்திரன்றிசையெதிர்ந்துகண்டியாவையுமீண்டு
புந்தியுற்றனன்றெக்கணங்காண்குபுபோதச்
சந்தகிற்கழையடர்ந்திடுங்கடம்பலதவிர்ந்தான். 18

உலூபி திருமணச்சருக்க முற்றும்.

ஆக சருக்கம் 5-க்கு கவி (125.)

---

## சு - ஆவது யாத்திரைச் சருக்கம்.

இச்சருக்கத்தால் பற்பலமகத்துவம் பொருந்திய தலம் தீர்த்தம் மூர்த்தி சேவைசெய்துகொண்டு திருவரங்கத்திற்குவரும்பரியந்தம் கூறப்படுகின்றது.

[இது முதல் 4 கவிகள், நதிகளின் சிறப்பு.]

நத்துயிர்க்குமுத்தினத்தைநனிசிதறித்திரைக்கரத்தினறவஞ்சோர்பூங்
கொத்துதறிமுடத்தெங்கின்குலையிடறியரம்பையினங்குலையச்சாடி
வித்தகச்சைவரிற்றூழுவெண்டேண்மெய்படர்ந்துகரைவீட்டிச்செல்லும்
புத்தமுதமெனும்பமுனைப்புண்ணியநீர்படிந்துவந்துபுனிதன்போந்து.

விரிசுடர்மாமணிவரன்றிவேழமருப்பெறிந்திழிந்துவெற்பைச்செங்கேழ்
வரிநெடுங்கணுச்சியர்தம்வயிறலைப்பச்சிறுகுடிலைவாரிப்போந்து
மருதமொலிகெழப்பாய்ந்துவானிமிர்வெண்டிரைக்கடல்வந்தொழுகுங்கோதா
வரியெனும்புங்கவநதிமுன்வந்துகுடைந்துவந்தந்தமன்னனீங்கி. 2

முத்தருளமெனத்தெளிந்துமொய்குழலாருளத்தினிலைமுடியாவாகி
மத்தருளமெனப்பாசிமருவியுந்திகடன்கொண்டான்மனத்திற்றேன்றி
நித்தனடிப்பெனத்திரைகணிவந்துபரந்தொலித்தாடிமிகழுந்துங்க
பத்திரைப்பேருயர்நதியிற்படிந்துடன்செலாமுனிவனைப்பனவரோடும். 3

பங்கயஞ்செம்முகங்காட்டப்பாந்தடர்ந்துநெறிந்தகுழற்பாசிகாட்டச்
சங்கொளிர்கந்தரங்காட்டத்தரளம்நகைகாட்டவிழிதனைமீன்காட்டப்
பொங்குமலைகாட்டவளைபுனைந்தகரம்பூண்முலையைப்புளினங்காட்ட
மங்கையரொத்தொளிகுலவிவருநதிபற்பலவாடிவந்துமன்னன். 4

திருக்காளத்தி.

உண்ணுமுணவின்றிவிடமுண்டடலென்பாயிப்பேருற்றானென்றே
திண்ணனிரங்கிச்சுவையூன்றினத்தாத்தின்றந்தன்றிசிதையவன்னோன்
கண்ணிடந்துகொண்டகுளக்கண்ணனிருகழல்பாவிக்களித்தானனக்
கண்ணழித்தன்றாயர்ஞானக்கண்ணளிக்குங்கடவுளெனக்கருதிமன்னோ.

[இதுமுதல் 3 - கவிகள், திருமலைச்சிறப்பு.]

இடித்திடச்செந்தினை துவளுமிடைக்கொடிச்சிமாருலக்கையிருகையோங்கி
யெடுத்திடப்பட்டுடற்கறைதோய்ந்தேங்குமதியவர்முகவிந்துவையிராகு
பிடித்திடவுற்றொளிர்சாயைப்பிலியறிந்தொதுங்குமிகப்பீடார்செவ்வி
யடுத்தசிகரத்தடநீளருவிதவழ்வேங்கடவெற்படைந்தான்மன்னோ. 6

கொண்டல்கவர்ந்தேகொருமீன்கோவுலவிமீட்சிபுற்றக்குளக்கண்வீழக்
கண்டபெண்மீனபமீனைக்கலந்துவந்ததெனமறுகிக்கனற்பாய்ந்தென்ன
மண்டியெதிர்துள்ளுமரைமலர்மிசையெம்மானசமீடலவென்றுள்ளங்
கொண்டுபிரமன்மகிழுங்கோனேரிப்பெருந்தீர்த்தங்குடைந்துமன்னன்.

நஞ்சமர்கந்தரன்முனிவர்நாகர்மகத்திறைமுகநாலாகுந்தேவுந்
தஞ்சமெனவந்துதொழத்தமனியவெற்பெதிர்சிகரத்தளியினோங்கி
விஞ்சியமர்ந்திருந்ததிருவேங்கடேசப்பெருமான்விரைசேர்பாதக்
கஞ்சமதிற்படிந்தவகைக்கடல்பெருகப்புளகெழமெய்கனிந்தங்கேத்தும்.

[இதுமுதல் 3 - கவிகள், வேங்கடேசர் துதி.]

பையரவம்பரிக்குமடற்பார்முழுதும்பரிக்குமுண்மைப்பழமைத்தேவே
நையுமிடைக்கருநெடுங்கணளினமுகத்தியரின்பநலமென்றோடி
யையினுறுமீயினிற்பட்டலைந்துழலிப்பேதைநினையறிதற்பாற்றோ
மையணிகண்டனுமயனுமறையுமுணர்வரியதிருமாலேபோற்றி. 9

வரைநகிற்சும்மையினுடங்கிவருந்துமிடுகிடைத்துவர்வாய்வாட்கண்வேய்த்தோ
டிருமகளும்புவிமகளுமடிவருடத்தீயுமிழ்மாமணிச்செஞ்சூட்டுத் [ட்
தருவிடமுள்ளெயிற்றரவத்தணியணையிற்றாமரைபூத்தொளிர்கமஞ்சூற்
பருவமுகிலொத்தலைப்பாற்கடன்முசட்டின்விழித்துறங்கும்பரனேபோற்றி.

வானாதியுலகாகிமலர்மலைநீர்வாழ்மூவராகிமண்ணின்
மீனாதிகற்கிகடைவேடமெடுத்தாடல்புரிவிமலாவெய்திற்
பானாளினிசியதுபோற்பம்மியறிவினைமயக்கிப்பகட்டுமாயை
தானாகுமிறைவவதைத்தவிர்த்தெனையாணின்கமலச்சரணம்போற்றி.

இன்னபலதுதிபுரிந்தெம்பெருமானைத்தொழுமானையிடர்தீர்த்தானைப்
பன்னருவிண்ணவர்முனிவர்பாவவுயர்ந்தெதிர்படியும்பாவநாச

நன்னல்நீர்துளைந்தரியநபகங்காநாரமதினண்ணியாடிப் [போற்றி.
பின்னரும்வான்பெருந்தீர்த்தப்பலநாடிப்பெரியோரைப்பேணிப் 12

[அலர்மேன்மங்கை.]

தலமேழுமுயர்புகழ்போந்தண்டமிழ்நாட்டெல்லையெனுஞ்சயிலநீங்கிக்
கலரானெனுந்தழியாமறக்கருதுமன்பர்தமைக்கடைக்கணருளிக்காக்கு
மலர்மேன்மங்கையைத்தெரிசித்தலர்ந்துமுகிழாக்கமலவடியிற்றாழ்ந்து
பலதோமிறுதிபுரிந்தப்பற்குனன்பின்பலதலங்கண்பரவிப்போந்து. 13

[திருத்தணி.]

மலைமானையன்னையெனவாய்த்தானைச்சூர்கவற்றும்வடிவேலானை
யலைமானைமாமியெனவடைந்தானையானைமகட்கன்பினானை
வலைமானைவிழிக்குறவர்மடமானைப்புணர்தணிகைமலைமீதானைக்
கலைமானையேந்துமரன்காலானைப்பன்னிருகையானைப்போற்றி. 14

[திருக்கச்சி.]

வேறு.

வேதனன்றுசெய்மகத்தினுற்றவெடிமேலெழுந்தமரர்விண்புகக்
காதலித்தவரிழிந்துவந்துகுடிகண்டகச்சிநகர்கண்டுமாப்
பாதவத்தமரேகாம்பரக்கடவுள்பங்கயப்பதயுகம்பணிந்
தாதரத்தொடுகாமாட்சிசெஞ்சரணடைந்தருச்சனைபுரிந்தரோ. 15

[திருக்கழுக்குன்றம்.]

கரதலாமலகமாகமாறனெதிர்கண்டதெய்வமிதுகாணெனும்
வரதராசனிருதாண்மலர்ப்பதுமம்வந்துவந்தெதிர்வணங்கியே
சரதமாகவமரேணதிப்புனல்கடழுவியப்பதிதணந்துபின்
விரதநாதரிருவோர்சகுந்தவடிவுற்றமர்ந்தகிரிமேவினான். 16

[திருவண்ணாமலை.]

அந்தவெற்பினிலமர்ந்ததற்பரனதம்புயப்பதமணிந்துகம்
வந்துபற்பலதலங்கணுற்றெறகின்வராகமாயெதிர்நாடிய
முந்தையந்தணன்முகுந்தனுக்கரியமுடியினோடடியுமுற்றரன்
செந்தழற்படிவமாகிநின்றவொருதெய்வமாமலைதெரிந்தரோ. 17

உண்டுபாலுலகியாவுமுற்றலிலுணாமுலைக்கவுரியோடுமத்
தண்டபாணியையுதைத்தசோதியருணாசலேசனுயர்தாளிணை
கண்டுடற்புளகமெய்தநின்றுபயசண்களித்தொளிர்கருத்தினுற்
பண்டைவெவ்வினைதவிர்த்தியாதியுமைபாதியென்றுதுதிபாடினான். 18

[திருத்தில்லை]

அச்சுதன்கடலிதென்னவோதுமமிழ்தாறுமற்றுளவரும்புனல்
உச்சிதம்பெறவுமாடியாடியவணுற்றவுற்றவுயரீசனை
நச்சதஞ்செயறவோர்கடம்மைபுநயந்துநற்றுதிநவின்றுவந்
தச்சிமண்புவிதனக்கெனப்பறைபொனம்பலந்தனையடைந்தரோ. 19

சூலியோடுநடமாடிநின்றவொருசோதியைப்பரசொரூபியை
நாலுமாமறைவலாரிதேவர்மலர்நாதனும்பணிநடேசனைச்
சாலவேதுதிபுரிந்துவந்துபபதாடலைக்கொடுதனஞ்சயன்
வாலிமார்புருவவாளியுந்தியகோவிந்தராசனைவழுத்தியே. 20

அப்பதிக்கணிலைபெற்றமாதவர்தமடிபணிந்தறையுமாசிபெற்
றுப்பிருந்தகுணகடல்வளாகமுழுதுற்றவுற்றதலமுற்றெதிர்ந்
திப்பிறப்பொடெழுபிறவியற்றிடவிறைஞ்சியந்தணரினத்தொடுங்
கைப்பகட்டைநிகர்காளைவிஞ்சுபலகண்டுகண்டுகளிகொண்டரோ. 21

பவமறும்புனிதமுற்றபொன்னியிருபாலும்வந்தெதிர்பராவவே
தவம்விரும்புமுனிபுங்கவத்திரள்கடங்கவிங்கொருவைகுந்தமாய்
நவமுறும்மணியனந்தன்மீதறிவுநண்ணிநம்பரனனந்தல்கொள்
ளவமறுந்தரைமினம்பகம்மெனவலங்காங்கமதடைந்தனன். 22

யாத்திரைச் சருக்கமுற்றும்

(ஆக சருக்கம் 6 - க்கு - கவி, 147)

---

உ

கண்ணன் கழல் துணை.

## (7 - ஆவது திருவரங்கச்சருக்கம்.)



இச்சருக்கத்தால் ஸ்தலவருணையும் சந்நிதிவருணையும் விசேஷஸ்தோத்திரமும் பிரமன்தவம்புரிந்து பெற்ற அரங்கவிமானத்தை இட்சுவாகு தவஞ்செய்து பிரமனாற்பெறுதலும் பின் ஸ்ரீராமபிரான் விபீடணனுக்களிக்க அவன் காவிரிநதி மத்தியில் அவ்விமானத்தை ஸ்தாபித்தலும் பிறவும் கூறப்படுகின்றது.

(இதுமுதல் 7 - கவிகள், நகரச்சிறப்பு.)

பாங்கெலாஞ்சோலைசோலைப்பரப்பெலாந்தாருதாரு
வோங்கெலாம்போதுபோதினுள்ளெலாஞ்செழுந்தேன்தேனின்
வீங்கெலாம்வண்டுவண்டின்மிழற்றெலாங்கீதங்கீதத்
தோங்கெலாம்வேதம்வேதத்தும்பரானரங்கத்தம்மா. 1

தடமெலாம்பதுமந்தங்குஞ்சனமெலாம்வயிணவம்பூங்
கடமெலாஞ்சுரும்பரோங்குங்காவெலாங்குயில்கலாபி
மடமெலாமுனிவர்நீண்டவானெலாம்வேள்வித்தூமம்
இடமெலாம்விபுதர்தத்தையினமெலாமிசைக்கும்வைப்பே. 2

மறைபுகனுவினோடும்வதிந்தபாகவதரீட்டம்
நறைமலர்முதுவனம்பணுநியநாகரீட்டம்
நிறையறிவொடுநல்யோகம்நிகழுநின்மலர்களீட்டம்
குறைவறநெருங்கியவ்வைகுந்தமேயொத்தகோட்டம். 3

மீதலத்தமரர்சித்தர்விஞ்சையரியக்கர்மற்றோர்
பூதலத்தெண்டிக்கான்றபுகழ்பெருந்தீவினுள்ளோர்
பாதலத்துரகர்யாரும்படர்தலாற்றத்தம்பாடை
யோதலற்றெங்குந்தேவபாடையேயொலிக்குமன்னோ. 4

துந்துமிதுழனிமுந்நீர்ச்சூழ்வெலாந்தாழவிநிற்ப
விந்திரனுலகையெட்டிநிற்பமற்றியத்தினோதை
யந்தணன்றலத்தைமுட்டியார்ப்பசேகண்டியார்வம்
நந்தொலிவைகுந்தத்தைநண்ணிநின்றதிர்வமன்னோ. 5

மதியெனப்பக்கமென்னவாரம்வற்சரமதென்னப்
புதியதோரயனமென்னப்பூத்திடுமிருதுவென்னத்
துதிசெய்நற்றினங்களென்னத்தொடருமுற்சவமேயல்லால்
நிதநிதங்கணமோயாமற்றிருவிழாநிகழரங்கம். 6

வாட்டடம்புயப்புமான்கள்மகளிர்முத்தலத்துமுள்ளோர்
ஈட்டமுற்றெதிர்ந்துநின்றுங்கிசையொடுமரங்காவென்னுங்
கூட்டொலியண்டகோளங்குடைந்துவைகுந்தங்கூடும்
மீட்டொருபதிமேலுண்டேன்மேவியப்பாலுமேகும். 7

[இதுமுதல் 5 - கவிகள், காவிரிநதிச்சிறப்பு.]

தன்னொருகழற்போந்துற்றதடினியைக்குடிலமேற்றான்
மின்னொருபாகனென்னுவிண்டுவோர்குடிஞைசூட
வுன்னிமந்தாகினிக்குமுயர்ந்ததிந்நதியென்றெண்ணிப்
பொன்னியைப்புனைந்ததொப்பப்பொலிந்ததக்கடவுள்யாறு. 8

அந்திவாணிகர்க்குங்கூந்தலசமுகிசுதனோடாழி
முந்துநீர்தனையுமுண்ணுமுனிவன்கைக்கரகத்துற்றே
யிந்திரன்றடவையோங்கவேரம்பன்கவிழ்ப்பப்பூவின்
வந்துயிர்காக்கும்பண்பால்வயங்குகாவிரியாமன்னோ. 9

வேறு.

ஏந்தினடுளவமான்மதஞ்சாந்தமிணர்பலவெறிதிரைக்கரத்திற்
போந்தனளாட்டிமஞ்சனம்பலவும்புயனிறப்புனிதன்மெய்புகுத்திச் [று
சூழ்ந்தனடொழுதாள்சுரநதிக்குயர்ந்ததூயையென்றொருவரங்தொன்
ளீந்தசெய்ந்நன்றிமறக்கலாதெண்ணியாமெனவிருமருங்கொழுகும். 10

தோய்கயலினக்கண்சிவப்புறத்தூயசைவலச்சுரிகுழறுவளப்
பாய்புனற்பதுமமுகவியர்வரும்பப்பனித்துளிபரவுசெவ்வாம்பல் [தாங்
வாய்வெளுப்புறச்செம்புளினமாமுலைபைமாயவன்றேண்மிசைமடுத்
காய்வளைத்திரைக்கையுறத்தழீஇப்புணருமரிவையைச்சிவணுமந்நதியே.

சுழித்திழிந்தகிலந்துழவிமுத்தினத்தைத்தோமறக்கவர்ந்திடிவெருவக்
கிழித்தறனிமிர்ந்துவெடித்தெதிர்சிதறுங்காட்சியைக்கிளத்திடிற்றன்னு
டழைத்தவானந்தப்பெருநகைபுரிந்தசிவணுவ்சானவிமாண்பை [ட்
யழித்தவப்பொன்னியருநதியெதிர்ந்தவ்வருச்சுனன்குடைந்தனனன்றே. 12

[மதில்.]

இத்தரையெழுதீவெனவிடைவதிந்தவிரணியவரையெனவியம்பத்
தத்திவிண்ணுயருமெழுமதிளுப்பண்டணிமணிச்சின்கரமோங்கும்
அத்தலப்பெருமைகண்டுடல்புளகுற்றங்குமிங்கெங்குமாயோடிப்
பித்தரிற்பாடியாடினனுவகைப்பிழிமிகநுகருபெற்றியினால். 13

[கோபுரம்.]

எண்டிசைபுலவுமிரவிபைம்புரவியிருந்துசற்றிளைப்பகன்றேக [ந்து
மண்டிவிண்ணிமிர்கோபுரத்தெதிர்மலைபோம்வாயில்வாயெழுமதில்கட
கண்டுகண்டரும்பாகவதகோட்டியினைக்களிப்பெனுமளப்பருங்கடலாழ்ந்
தண்டர்களெவரும்நிறைந்துகைகூப்புமரங்கன்சன்னிதிமுனரடைந்தான். 14

[இதுமுதல் 8 - கவிகள், திருவரங்கன் சபாவருணனை.]

அடைந்திருபுறமெய்யுணர்ந்தசனகச
றுதியாருமறைமுனிவர்
மிடைந்தெதிர் துதிப்பவிண்ணவரொதுங்க
மெல்லிறகசைத்தொலித்தாடிக்
குடைந்துவண்டுறிஞ்சத்தவழிளம்பிரசக்
கொன்றைமஞ்சரிபடர்குடிலன்
றடந்திகழ்பதுமத்தவனுமுன்போந்து
தாழ்ந்திடத்தனித்தமர்ந்தவனை. 15

தவழ்ந்துமெல்விரற்பல்கதிபெறவிசையேழ்
கனித்தனிகிளத்தியாழ்தாங்கி
யுவந்துதும்புருநாரதரிசைத்தேத்த
வுவணவிட்டெதிரரம்பையர்கள்
நிவந்திருநகில்கடதும்பவேர்வெழமெய்
நெகிழ்ந்துகையபிநயநிகழ
வவிந்தமெல்லிடையென்றிடச்சதிமுறையி
னடநோக்கமர்ந்திருந்தவனே. 16

நீண்டெதிர்வளைந்துசிவந்தொளிர்துண்ட
மிளநிலாநிலவியகண்டஞ்
சேண்டயங்கிருசெஞ்சிறைக்ககபதியுந்
திருந்தலர்புரமெரிமடுத்துக்
காண்டகுமருத்துமலையொருகணத்திற்
காட்டியவாயுகாதலனும்
ஆண்டெதிரிருகைகூப்பிநின்றிறைஞ்ச
வகமகிழ்ந்தமர்ந்தவானவனே. 17

நறுந்துணர்த்தருவிண்ணவர்புவிமாந்தர்
நச்செயிற்றுரகரும்நண்ணிச்
செறிந்திடவமையநோக்கியுள்விடுக்குஞ்
செயன்விசயன்கடைநிகழ
நிறைந்தகற்பரிவைபோனெறிபிறழா
நினைவொடுநிமிடம்விட்டகலா
துறைந்தபாகவதக்குழாந்தொழுதேத்த
வுகந்துகந்தமர்ந்திருந்தவனே. 18

கணக்கறுமிரவிகதிர்கவர்ந்திலங்கிக்
காவல்கொண்டுலகநேர்பிறழும்
பிணக்கினர்ச்செருக்குந்திகிரியுங்காத்திற்
பிடித்திடக்குழைந்தொளிபரந்த
குணக்கெதிர்மதியமெனத்திகழ்வளையுங்
குலவியதிருக்கரத்தவனே
யிணக்கியவனசம்புயலிடையென்ன
வெழிறிகழ்நீலமேனியனே. 19

சுந்தரநீலவரைமுகட்டெழுசெஞ்
சோதிபோன்றொளிர்மவுலியனை
மந்தரம்பிணித்தவாசுகிநிகர்ப்ப
மாமணிவலயமார்புயனைக்
கந்தரத்திடைவந்திமைக்குமின்னெனப்பொற்
காழகங்கஞலரையினனைச்
செந்திருவொடுபைந்துளவமுப்புரிநூற்
செம்மணிதிகழுமார்பினனை. 20

வேதமீதெனப்பொற்கலசமேவிரிக்க
விமானமேகுடிலையைவிளம்ப
வாதியச்சுதனற்புதத்திருப்பெயரை
யனந்தனானங்களேயறைய
வோதுசத்துவத்தையறிதுயிலுணர்த்த
வுருத்திரனயன்முதலாய
மாதவத்திரள்கடாழ்தலையிறைவன்
மற்றிவனெனுமுண்மைவழுத்த. 21

நிரந்தரமணிகள்குயிற்றொருதேவ
நிருமிதச்சுவணமானத்திற்
சுரந்துநஞ்சுமிழ்ந்துளைபடுமெயிற்றுத்
துத்திகொள்பணமணிச்செஞ்சூட்
டிரும்பைமெல்லணையினறிந்தகண்படைகொண்
டிலங்கைநோக்கமர்ந்தவெம்பரனைப்
புரந்தரகுமரன்கண்டுளங்களிப்பப்
போதமெய்புளகமுற்றனனால். 22

மிக்கமேலவரைமேவினம்பகைபோய்
மெய்ம்மைதேர்குநரெனும்விதிபோற்
றிக்கொடெவ்வுலகுமாமொருதேவன்
றரிசனமெய்தநின்றவனுக்
குக்கவைம்புலனுமூறொளியோசை
யொப்புறுகந்தமோடிரதம்
அக்கணமனஞ்சித்திரச்சுடராக
வமர்ந்துபின்னிவையிவையறைவான். 23

[இதுமுதல் 10 - கவிகள், தோத்திரம்.]

வேறு.

உலகுதந்தளித்தயின் றுமிழ்ந்தெஞ்ஞான்றினுங்
கிலமறுநிலைபெறுங்கேசவாநம
நிலவொளிர்செஞ்சடை நிமலனும்பணி
நலமுறுஞ்சோதிநாராயணுநம. 24

மெய்யெனமாயையைமிளிரக்காட்டியிவ்
வையகமயக்குமெம்மாதவாநம
கையினிற்குடத்தியர்கலிங்கமேந்தியோர்
கொய்யிணர்குருந்தமர்கோவிந்தாநம. 25

பூவருசனகிமுன்போந்தவஞ்சக
மேவுமுழையுயிர்தெறம்விண்டுவேநம
ஆவிநச்சாதெதிரக்கர்மீக்கணை
தூவியன்றடுமதுசூதனுநம. 26

வங்கொளிர்கரக்கரிமுறைக்குவந்தொரு
வெங்கராவடுந்திரிவிக்கிரமாநம
பொங்குமூவுலகுமீரடியிற்போந்திட
மங்குலினிமிர்ந்தெழும்வாமனுநம. 27

வந்திலன்புனற்கிறைவணங்கியாமெனச்
சிந்தறக்கணைவிடுஞ்சீதராநம
தந்திடுமொருதிரிவக்கிரித்தையுடல்
செந்தமார்மெயிருடிகேசவாநம. 28

இந்திரைநாளும்வீற்றிருக்குமார்பவெண்
ணங்தொளிர்கரப்பத்மநாபனேநம
சுந்திரத்திருத்துழாய்த்தொடையனின்றுளி
தந்தவம்புயத்ததாமோதராநம. 29

வேறு.

குறையாதசெழுஞ்சுடரேயழிவில்கோலக்
கோகனதனெடுமதியங்குலவும்வேணி
யறியாதபரம்பொருளேயருமைத்தேவே
யாதியெனுஞ்சொற்குரையேயமரும்பூவிற்
பொறியார்வமுறுமமிர்தேமணியேபொன்னே
பூமுழுதும்புரக்கவெழும்புயலேயெங்கும்
நிறைவாகும்பேரறிவேயுயர்நால்வேத
நிகழ்த்துமகாவாக்கியத்தினிதியேபோற்றி. 30

தருமதலைமொழியுணர்வான்கொண்டுமுன்னோர்
தறிநடுங்கமோதுதமனியனும்வெய்ய
கரியுடலங்கிழிக்கவுயரண்டகோளங்
கலங்கநகைத்தெழுந்தகண்டீரவமேபோற்றி
பரவிவயிணவமதம்பாகவதத்தும்பி
படிந்துவப்பநிசிசரக்கான்படவுலாவி
யொருகவளங்கொண்டுலகானீழற்றுஞ்சு
மொப்பறுமுண்மைத்தனியுவாவேபோற்றி. 31

தாதைகுறங்கிருந்ததைச்சிற்றவ்வைசீறத்
தவிர்ந்தழுதுவருமகவைத்தாய்கண்டேங்கி
நீதவஞ்செய்கெனவனத்தைநண்ணிநோற்ப
நிகரில்பதமதற்கருளுநிமலாபோற்றிப்
பாதியிரவோரிடஞ்சேர்மூவரேத்திப்
பரவவெளிவந்தபரஞ்சுடரேசென்று
காதிசுதனுடன்செயிர்த்துவந்தசுந்தன்
காதலியைவீட்டிமகங்காத்தோய்போற்றி. 32

கல்லாமற்கவிமுதனூற்புலமையோரைக்
கருதாமனல்லோர்பாற்கலந்தெஞ்ஞான்றும்
நில்லாமனின்னடியர்பதநேராம
னித்தியதத்துவநிமலாநினைப்போற்றுமற்
பொல்லாதவினைபுரிவேனேதோவின்றுன்
புகழ்படிப்பேனெனையாள்புண்டரிகம்பூத்த
செல்லாருந்திருமேனித்திருமாலேயெஞ்
சீதரனேதிருவரங்கத்தேவேபோற்றி. 33

[இதுமுதல் 6 - கவிகள், சீரங்கநாச்சியார் தோத்திரம்.]

இத்தகையதுதிபலவுங்கூறிக்கூறி
யிறைஞ்சியெழுந்தார்வமெதிரீர்ப்பவீர்ப்பத்
தத்திமனந்தடுமாறிப்பையப்பையத்
தனஞ்சயனத்தளிதணந்துசாலச்சால
வொத்தபிரமரத்தொகுதியூதியூதி
யுவட்டறுகர்ந்திடநறவமூறியூறிக்
கொத்தவிழுமலரைம்பான்மேவுமேவுங்
கோசனகத்திருமடந்தைகோயில்புக்கான். 34

எண்ணிலாவுயிர்த்தொகையையீன்றுநாளு
மிளமைபெறுயுவதியெனவெழில்பெற்றாளை
விண்ணிலாவியவமரர்யாரும்போற்ற
விரிந்துமுகிழாவரவிந்தத்தாளாளைத்
தண்ணிலாவொதுங்கநிறைந்தமுதம்பொங்கித்
தவழ்ந்தருளேசஞ்சரித்தவதனத்தாளைக்
கண்ணிலாங்கலுழமனநெகப்பேரின்பக்
காட்சிபுறப்பணிந்துதுதிகழறினனால். 35

உம்மையிற்செய்பவமெலவுமுடுகியுந்த
வுவர்க்கடல்வைப்பெதிர்ந்தொருதாயுதரத்தொன்றி
யிம்மையினுங்கொடுவினையேயிழைத்துநைவேற்
கிருவினையுந்தவிர்த்தருள்செயெம்மையீன்ற
வம்மையரவிந்தமலரமருமின்னே
யரியார்வங்கொண்டகலத்தழுத்தும்பொன்னே
செம்மைதிருந்தியநலமுற்றோங்கிவீங்குஞ்
சீரங்கநாயகிநின்றிருத்தாள்போற்றி. 36

ஒருமொழியிவ்வுலகளித்துக்காத்துத்தேய்க்கு
மோமெனுமென்றதன்பொருளையுரைத்தேநின்ற
தருமழலையகலாததனயற்சிறித்
தன்னொருகைதறியெறிந்ததகுவனாகம்
இருபிளவாக்கிழித்தண்டமுடையச்சீறி
யிருந்தநரகேசரிமுனெஞ்சாறி
வருமமுதமொழியூட்டிவெகுளிநீக்க
வந்ததிருவேவனசமானேபோற்றி. 37

கான்வருந்தப்பணித்தமின்சொற்காதிற்றைத்த
கடுமையினோபஞ்சனுங்குங்கமலப்பாதம்
வான்வருந்தவணம்படர்ந்தெய்த்ததினோவஞ்ச
மான்மொழியான்மனமறுக்குற்றதினோமற்றுந்
தான்வருந்தற்குறியான்சிஞ்சுபக்காவிற்கந்
தசன்சிறைதந்திடச்சாலத்தளர்ந்ததாலோ
யான்வருந்தித்துதித்துமிதுகாறுநோக்கா
திருந்ததெதினாலுயிர்த்தயாயேபோற்றி. 38

பொன்னடியைப்பிரிந்தகல்தாய்குழவியேலப்
புயல்வாகன்சேய்மறையோர்போதப்போகி
யன்னமுதற்பலநபசங்கமநிறைந்தே
யம்புயநீலல்லிமுதலரும்பூவான்று
புன்னைகரைபொலிமதிபுட்கரணிதோய்ந்து
புகழ்பெறவாங்கிருந்தமறைப்புனிதர்ப்போற்றி
யின்னிலமப்பரமபதப்பொலிவேபூத்த
தென்னெனவான்முனிவரெடுத்தியம்பலுற்றார். 39

வேறு.

சோதிநாயகமணிவிமானத்தெதிர்தோன்றி
வேதநாயகன்றலத்தவன்பணியவீற்றிருந்தே
யாதிநாயகன்பின்னரீங்கெழுந்தமர்தலினிக்
கோதிலுயகப்பதியவ்வைகுந்தமேயாமால். 40

என்னவச்சரோருகனகர்க்கவன்றுதித்தேத்த
மன்னுமானமேல்வந்ததுமாதவன்மண்மீப்
பின்னெதிர்ந்ததும்பேசுமின்விரித்தெனப்பெட்பின்
பொன்னகர்க்கிறைபொருள்வினவத்தவர்புகல்வார். 41

[இதுமுதல் 41 கவிகளால் ஸ்தலவுற்பத்தி கூறப்படுகின்றது.]

விண்டுதற்சுரூபத்தரிசனைசெய்புவிரிஞ்சன்
பண்டுபாற்கடற்கூலநோற்றிருப்பப்பன்னகமேற்
கண்டுயிற்றிருக்கோலமேகாணுபுகதிர்செய்
மண்டுமாமணிப்பொன்விமானத்தரிவந்தான். 42

வருபான்றனைப்பணிந்திசைவகுத்தயன்மகிழ
யரிலறுந்தனிக்கடவுள்யான்வடிவிதேயறியென்
றரிபுகன்றமோனம்பெறவொன்றெழிலையங்கம்
மருவிமானமொடுற்றனன்றன்னகர்மலரோன். 43

புரிந்தருச்சனைபூமகள்கொழுநனைப்பூமன்
றிருந்துபல்பகல்வான்புகழ்சிருட்டிசெய்திருப்பத்
தருந்தினத்தினைத்தர்ணிமுன்பயந்திடுந்தனய
னருந்தவத்துமன்னொருதினத்தயனுலகடைந்தான். 44

வந்தடைந்தவைவச்சுதமனுமறைவருக்கு
மந்தணற்பணிந்திடவவனுசிதந்தலகில்
சுந்தரத்தரங்கேசனைச்சுட்டவத்தோன்றல்
சிந்தைமுற்றுவந்தேத்தினன்றெழுதுசேவடிமேல். 45

ஆதரத்தொடும்பணிந்தமன்னரங்கன்வான்பெருமை
பூதலத்தடைந்துவப்பொடுமவையெதிர்புகல
வேதவித்தகனிடத்தமர்விமலனைக்காணக்
காதலுற்றனனிக்குவாகெனும்பெயர்க்காளை. 46

அரியமாத்தருமைந்தன்றன்மைந்தனுக்கயன்பாற்
கரியமாலினைக்காண்பதிற்கரிதெனக்கழறப்
பிரியமாமனத்தருந்துயருழந்துபின்பிரியா
வுரியமாதவவசிட்டனைப்பணிந்திவையுரைப்பான். 47

கண்ணரும்பொருளெமக்குதவிருந்தகற்பகமே
விண்ணகத்தயனிடத்தாங்கனைத்தொழுவிழைவே
னண்ணுதற்கருள்புரிகெனத்தவன்வனநண்ணிப்
பண்ணருந்தவம்பிரமனைக்குறித்தெனப்பணித்தான். 48

தங்குலக்குருவாய்மைகொண்டடவியைத்தழுவி
யங்கியைந்துதற்சூழ்தரவருந்தவம்புரிந்தான்
கங்குலும்பகலும்பிரிவறப்பலகாலம்
துங்கமாதவத்திரளெலாம்வியந்தெதிர்துதிப்ப. 49

பன்னுமூண்டயிலறச்செய்தபத்திடையெழுந்த
வன்னியான்மெலிந்துவணையாள்வாசவன்விடுப்ப
மன்னுமாநிலத்தவன்றவங்குலைத்திடவந்தார்
கன்னிமாரொடுங்காமனும்வசந்தனுங்கலந்து. 50

வந்தரம்பையரணிந்தெதிர்மயிலெனநடித்தார்
கந்தரக்குழல்கலைத்துக்கைசெய்துபின்காணு
வந்தரத்திடையணங்குறப்பயோதரமசையப்
பந்தடித்தனர்காமபுத்தகமெலாம்படித்தார். 51

அனந்திரிந்தபோனடந்துதம்மவயவந்தெரிய
நனைந்தமென்றுகிலோடெதிர்நின்றுபின்னுடி
வனைந்தமென்முலைச்சந்தவனுசிமுன்மடுப்பக்
கனிந்ததென்றலினின்றனர்காவதங்கமழ. 52

நாட்டமோடலர்வீசிமெய்மேனரப்புயர்யாழ்
கூட்டியின்னிசைகுறித்துப்பின்வாரினைக்குலைத்துக்
காட்டியன்றிருபொற்குடங்கவினுறவரைப்பாம்
பாட்டிநின்றனரிகுதிறும்பூதெனவறைய. 53

இன்னவாறவரியற்றுதந்திரவினையெல்லாம்
வன்னியுற்றபஞ்செனப்படமனன்றவவலியாற்
கன்னல்வேள்சலித்தனன்றருகாலமுங்கழிந்த
தென்னுயிர்ப்பெறிந்தோய்ந்தனகன்னியர்திகைத்தார். 54

மனன்முதிர்ந்தமாதவநிலையதனைமங்கையர்போய்
நனைமுதிர்ந்தலர்கற்பகநாதன்முன்னவிலக்
சினமெதிர்ந்தவன்வெண்ணிறச்சிந்துரமிசைமன்
முனமெதிர்ந்தொளிர்வச்சிரப்படையினைமுடுகா. 55

காவல்கொண்டிடுநேமியம்படையெதிர்கனன்று
மேவநோக்கியவிண்ணவர்க்கிறைமிகவெருவிப்
பூவினான்முனரோடியேதாழ்ந்தெலாம்புகல
வாவிநைந்தனனவனுமச்சுதன்பிரிவறிந்தே. 56

அளித்திமன்னனுக்கயோத்தியிற்சதுர்யுகமமர்ந்தே
களித்தெதிர்ந்துபின்காவிரிநாப்பணிற்கங்குற்
கிளைத்தபோழ்தினிற்கிட்டுவன்மனங்கெடேலெனவே
விளித்தருபியாயறைந்தனன்விரிஞ்சனுக்கரியே. 57

அரியினாணையைக்கடப்பதற்கஞ்சியம்புயத்தோன்
வரவரங்கமானத்தொடுமறிந்துமன்றுள்ளிப்
பரிவொடாடியானந்தநீரிருவிழிபயப்பச்
சுருதிநூனெறிமுறைமையிற்றொழுதிவைசொல்வான். 58

உலகையோர்சிறுகடுகெனப்பரித்திடுமுரம்பெற்
றிலகுமென்சிறையோதிமத்தெருத்தமரிறைவா
நலிதலின்றியெஞ்ஞான்றும்நன்கொளிர்தருமூலச்
சலசமீதமரெந்தைநின்பொன்னடிசரணம். 59

இடமிலாதுசித்திரமெவரெழுதுவரெங்கும்
படருபூதபௌதிகந்தனைநீபடைத்திலையேல்
விடமிடற்றனலழித்திடவிண்டுவாற்காக்கப்
படுதலெங்ஙனமாதியம்பகவனேசரணம். 60

தாளமாலைவெண்டானைமெய்தரித்தொருதவள
மரைமலர்த்தவிசமரிசைவாணிவாக்ககலாக்
குரவஞானமெய்க்குண்டிகைக்கையவெற்கரங்கற்
றரவெழுந்ததாதாசரண்சரணமென்றனனால். 61

வேறு.

இந்தவாறவன் றுதித்திருப்பமிக்குவந்
தந்தணுசியுமரங்கமானமுந்
தந்துதன்னிடஞ்செலமானந்தன்னெடும்
வந்தனன்றன்னகர்மனுவின்செல்வனே. 62

தருச்சினைமலர்பொழிந்தமரர்தாந்தொழப்
பரிச்சயத்தொடுமறைபாடிப்பாய்கதிர்
விருச்சிகன்சேய்சுதன்விழைவொடேத்திநன்
கருச்சனைபுரிந்தனனரங்கன்றன்னையே. 63

மடுத்தொருகாஞ்சிரத்தடியின்வாமக்கை
விடுத்துமெய்வளர்த்திப்பொன்விமானத்துட்பொலிந்
தடுத்தரியணையறிதுயில்கொளையனை
யெடுத்திசைத்திருந்தனனிக்குவாகுவே. 64

நீத்தவருவப்பநேமியைப்பணிந்துபூக்
காத்தவனொருபெரும்பதங்கலந்தபின்
பூத்தசெந்தாமரைப்புயன்மெய்நாதனை
யேத்தினரவன்வழியெண்ணில்வேந்தெலாம். 65

பின்னரம்மரபினிலெழும்பெருந்தகை
மன்னர்மன்றசரதன்மகனிலங்கைவாழ்
ஒன்னலர்ச்செகுத்துலகொருகோலோச்சிப்பின்
பொன்னுலகடைந்திடப்போகுமெல்லையின். 66

நினக்கொருபதத்தினைநீயடைந்திடின்
எனக்கதாரவினியிருந்ததாரென
வனக்கொடிகொம்பறமயங்குமாறுபோற்
கனக்கருமேனியான்கழலின்வீழ்ந்தரோ. 67

கரங்குவித்திருவிழிக்கலுழிகால்பொரச்
சிரங்கவிழ்த்தெதிருழுஞ்செம்மல்வீடணற்
கிரங்கியிராகவனினிதினீந்தனன்
அரங்கமானத்தையன்றீதறைந்தரோ. 68

இப்பெருந்தகைநினக்கையமின்றியே
யொப்பரும்பெரும்பதமுதவுமாலெனக்
கைப்படப்பெற்றனன்களித்தென்றூலவன்
றப்பறச்செய்தவஞ்சாற்றவாங்கொலோ. 69

வாங்கியசரபைதன்மருணன்மத்தகந்
தாங்கியம்மானமால்சரணந்தாழ்ந்தெழுந்
தோங்கியதுயரமுழுவதையுங்கொடே
நீங்கினன்றென்றிசைநெறிவிசும்பினே. 70

வந்திடப்பரிதிவானுப்பண்வந்தனன்
இந்துபுட்கரணிநாமத்திலஞ்சிவாய்
தந்தாங்கணைத்தரைதான்விண்விட்டிழீஇ
முந்திநண்பகற்கடன்முறையின்முற்றினன். 71

வேறு.

பூவெறிந்தமரர்போற்றிடவெழுந்துபுரண்டிருபாலினும்பொங்கிக்
காவிரிபடியத்திருவரங்கேசன்வரவினைக்கருதிநற்றவஞ்செய்
மாவிருடியரும்வருமுனுலயத்தைவகுத்தெதிர்நோக்குமன்னவனும்
ஆவலிற்றுள்ளிப்பாடினரோடியாடினாரக்கனைப்பணிந்தார். 72

எங்கண்மாதவமோவித்தலத்தவமோவிரும்புனல்யாறுசெய்தவமோ
துங்கமாமதிபுட்கரணிசெய்தவமோசோழநாடியற்றுநற்றவமோ [லாங்
செங்கண்மால்வரவென்றேத்துவோர்க்குவந்துசெப்பியேதன்வரவெல்
கொங்கலிற்கள்ளிவந்தெனநிருதர்குலம்வந்தோன்பின்னிவைகூறும். 73

வருகடைத்திங்கட்சனியுரோகணியின்மகிழ்வொடுகேதனமுயர்த்தித்
திருமகள்கொழுநன்றிருவிழாநடத்தச்செல்குவலிலங்கையினெனலும்
பொருவருதவஞ்செய்தாங்கணையடைந்தபுண்ணியசொருபபூபதியே
யரியவத்தினத்திவ்வயினவையாற்றென்றவர்துதித்தலுமதற்கிசைந்தான்.

அருமறைவிதியவ்விழாவவனாற்றியபிணுருக்கறிஞனர்வத்தோ
டிருகரமடுத்தவ்வரங்கமானத்தைபெடுத்தனனிலங்கைமேற்செல்வான்
றிரமுறவசைவற்றிருநிலத்திருப்பத்தியங்கிவீழ்ந்தேங்கிவெய்துயிர்த்துத்
தெருமரலுழந்தாங்கரற்றினன்றிருமாலசெப்புவன்பவளவாய்திறந்து.

சுருக்கமில்கேள்விமுனிவரார்க்குயர்ந்ததூயவீடணமனந்துயரே
லரக்கர்வாழ்நகரத்தமர்கிலேனிங்ஙனருந்தவர்தொழப்பொன்னிநாப்ப
ணிருக்கைபெற்றயனிராவுறினின்னேடெதிர்ந்தயன்பதியிருந்தவனுக்
குரைக்குமோர்கற்பத்துயர்பதத்தடைவோமுளமகிழ்ந்தின்னமொன்றுணர்வாய்.

விந்தமீதொருகாற்கூடியுண்டாட்டுவிளைநவநதிமினுர்க்கெதிரின்
வந்தகந்தருவன்வணங்கியேகலுமம்மகளிரொவ்வொருவருமெனக்கிவ்
வந்தனமெனவேசிலுகுறமீட்டும்வந்தவன்வணங்கநீயெவர்க்குத் [ன்.
தந்ததிவ்வணக்கமெனநும்மினுயர்ந்தோர்தமக்கெனச்சாற்றிநக்ககன்ரு

விச்சுவாவசுநக்கிசைத்தசொற்கேட்டுமேன்மையான்யானென விளம்பிச்
சச்சரவாகியடைந்தகாவிரிசானவிதனைநோக்கியே நும்மின்
உச்சமால்பதம்வந்தாளென விரிஞ்சனுரைப்பநா னுமுழந்துதானுயர்வா
னச்சியெற்கருதித்தவஞ்செயப்பொன் னிநானவன்முன்னரினனுகி. 78

நின்னிடையொருகாற்பொன்விமானத்துநிகழரங்கேசனுயெழுந்து
துன்னியானமர்வேனத்தினமுதலாச்சுரநதிக்குயர்வுநீயாகும்
பொன்னியேயெனமுன்புகன்றமையானும்போற்றியிந்நின்றபுங்கவர்க்கு
மன்னுநற்கதிதந்திடவெதிர்வருதுமென்னமுன்வகுத்தமையானும். 79

இத்தலத்துனையானேக்கியேயமர்வலேகுநீயெனவரியிசைப்பச்
சுத்தசத்துவமேதூயதற்பதமேதோற்றமுமொடுக்கமுந்தோன்று
வித்தகமுதலேயானுமிங்கமரவிதித்தியென்றாக்கர்கோன்மிழற்ற
வுத்தமவிவணீவதிந்திடினிருதருறுவர்மாசுறவுலப்பில்லார். 80

ஆதலினிலங்கைக்ககறியென்றலைறந்தவ்வமலன்மோனம்பெறவறிந்தே
காதலிற்கபிலைதனைப்பிரிகன்றிற்கவன்றுகண்ணீர்சொரிந்தகன்று
சீதாமுகுந்ததிருமகண்மகுணதிருவரங்கேசவோநமவென்
றோதியேதிரும்பியடிக்கடிவணங்கியுவரிசூழொருநகரடைந்தான். 81

புலத்தியன்புதல்வன்புதல்வன்முந்நீர்சூழ்பூரியம்புகுந்ததற்பின்னர்
சொலத்தகுமுனிவோர்தருமவன்மாவாஞ்சோழனுந்துதித்தவப்புறவிந்
நிலத்தமர்ந்தெம்மானிருந்தனன்விரும்பிநேர்ந்துதாழ்குநர்வினைநீக்கித்
தலத்தியல்பிதுவென்றருச்சுனற்குவந்தத்தவர்விரித்தறைந்தனரன்றே.

கேட்டபங்குனன்றனுடலெலாம்புளகங்கெழுமப்பேரானந்தங்கிடைத்தவ்
வீட்டமாதவரைப்பணிந்துகோதண்டத்தெந்தையையவ்விடையேத்தி
வாட்டமுற்றிலங்கைமன்னெனப்பிரிந்துவந்தயலிங்கமும்வணங்கிச்
சேட்டமார்புனிதத்தலம்பலபலவுந்தெரிசித்துச்செழியனுடடைந்தான். 83

[இதுமுதல் 19 - கவிகள், மதுரைநாடடுச்சிறப்பு.]

வேறு.

கன்னலாசினிகதலிகேதகைவழைகந்தி
தென்னையாமிரங்கோங்குசண்பகமகிழ்திலகம்
புன்னைமாதவிபாடலமிதழிபுன்காலி
யின்னபற்பலபூத்தடர்ந்தெங்கணுமிலங்கும். 84

மதத்தமேதிநீருழக்கநீள்வாளைகடாவிக்
குதித்துப்பூகந்தென்சேகிலிசூதத்தின்குலைக
ளுதிர்த்துவீழ்ப்பனவொப்பறுவீரனல்லொளிவாள்
விதிர்த்துவீசவஃதொன்னலர்ச்சாடியவிதம்போல். 85

வண்டுவீணையாய்விறலியாய்ப்பிகமதகருகின்
மண்டுகொக்குமத்தளிகனாய்மயினடமாதாய்
இண்டைதீபமேந்தொருவனாயலையெழினியுமாய்க்
கொண்டுநாடகம்நடத்துவகுவளைகணோக்கும். 86

வளந்திகழ்நறுமலர்ப்பொடியாடிமுன்வரக்கண்
டுளங்கவன்றிதுபுதுமணமுற்றவென்றாடிப்
பிளந்தவாயதன்பெடைப்பிகம்பிரிந்தழல்புகல்போ
லிளந்தளிர்மலிந்திலகுதேமாப்புகுந்திருக்கும். 87

அண்டரும்புகழுழுதொழிற்களமர்பூவகழக்
குண்டைபூட்டுமேர்க்கொழுநுதியெழுந்தகோமணியைக்
கண்டுமின்மினியென்றுநீணாசிவாய்கவ்விக்
கொண்டுசென்றருங்குடம்பையுட்குரீஇயினமுய்க்கும். 88

அரும்புமாமலர்த்தேனெயால்வனசத்தீயாற்றிச்
சுரும்புபூசுரர்போன்மெனச்சுருதிகள்புகல
வரம்பொருந்தப்பல்லாண்டுகடேரைகளோத
விரும்புமன்றல்பெற்றுவப்புறும்பொற்சிறைவிகங்கம். 89

கொங்கைமீதுறுங்கலவைகள்குலைந்திடக்குழுமி
நங்கைமார்குடைநறும்புனல்நதிவழியோடிச்
சங்குசூழ்கடனிறைந்திடத்தானதைவாரி
மங்குல்வீசுநீர்வீசுவசந்தனவாசம். 90

சகடுநாளறிந்தேவிதைவிதைத்தடல்சலியாப்
பகடிரண்டினைநுகத்தடிப்படுத்திப்பார்மடந்தை
யகடுதேயக்கைமேழிகொண்டலமடுத்துழுவார்
புகடறக்கலாமள்ளர்தம்பண்ணையிற்புகுந்து. 91

சிந்துசெய்குரப்பொடுவரப்புயர்வுறத்திருத்தி
யந்தமெய்தளரூக்கிமேழியர்பரம்படிப்பச்
சந்துமென்முலைகமழெழிற்றருணமங்கையர்க
ணந்துழன்றிடுங்குண்டிலினாற்றுகணடுவார். 92

தளருநுண்மருங்கொசிதரப்பயோதரந்ததும்பக்
களைகடிந்திடநடந்திடுங்கடைசியர்கதிர்செய்
வளைகடந்திடுமுத்தினான்மடையடைத்திடக்கை
வளைகளிப்பவரால்வெரீஇக்கமடமேல்வாவும். 93

வேறு.

கன்னல்கண்முதிர்ந்துவிண்டுகணுக்கடோறுதிர்த்தமுத்தம்
மின்னிலவெறிக்கும்பூகவேலிசூழ்பண்ணைமேவிக்
கன்னகுநகிலார்காவிகமலமற்றலர்கைவாங்கிப்
பன்னுதம்முருவமொப்புப்பார்த்தெனக்களைவர்மாதோ. 94

சூற்கொள்பாசரவைமானச்சொல்லருங்கருவிருந்து
வாற்குராலீன்றுகாத்தமழைக்குக்கைம்மாறுசெய்வா
னேற்குதியிதுவென்றெய்தியீயவேற்காதானுண்டன்
பாற்படத்தலைசாய்ந்தேபோற்பசுங்கதிர்முதிர்ந்துசாயும். 95

அறுத்துநற்பிறைநேர்வாளினரிகளைச்சுமையிற்றங்கம்
பொறுத்தகல்களந்தந்தேவிண்புகுதப்போரிட்டுமேதி
நிறுத்திமேற்றுவைத்துவைக்கோனீத்தநெற்கோணிதூர்த்துக்
குறித்ததூர்வகத்தினேற்றிக்கொண்டுதம்பாடிசெல்வார். 96

சிற்புலம்விளையுமாடஞ்சிக்கடிகாணங்கோதி
முற்கஞ்செந்தினையிறுங்குமுதிரையாடகமஞ்சூரம்
பொற்புறுதிலமேரண்டம்புகன்றவின்னனபல்பண்டம்
பற்பலபண்டிகொண்டேபடர்வழிநெளியச்செல்வார். 97

தீதறுங்கடவுளர்க்குச்சிந்தையொடொருபானல்கி
யாதியர்க்கொருபானல்கியரசருக்கொருபானல்கி
யேதிலர்க்கொருபானல்கியிருங்கிளைக்கொருபானல்கி
மீதிமற்றொருபாற்றுந்துய்த்துழவர்மேதகவிருப்பார். 98

வேறு.

ஆனெய்மாற்றுவராயர்கள்குறவர்களடுக்கற்
றேனைமாற்றுவர்மாற்றுவர்மள்ளர்கள்செந்நெல்
ஊனைமாற்றுவர்வேடர்கடிமிலர்களுப்பை
மீனைமாற்றுவரெங்கணுமிகுபிறபொருட்கே. 99

சாலையெங்கணுமெங்கணுந்தாமரைத்தடங்கள்
சோலையெங்கணுமெங்கணும்பண்ணையின்றோற்றம்
ஆலையெங்கணுமெங்கணும்பூத்தவாராமம்
பாலையெங்கணுமில்லெனப்படர்ந்தபல்வளமே. 100

வேறு.

காசறுமெழிலின்மிக்ககாளையர்தம்மினோரோ
டேசலிற்பொருந்தியாடிப்பகற்பொழுதுக்கிப்பின்னர்
வாசநாறேதிகோதிமணிக்குயம்ஞெமுங்கப்புல்லி
யாசைநோயறமுயங்கியற்பொழுதுந்துவாரால். 101

ஒருங்கலைநீர்சூழ்வைப்பினுயருமந்நாட்டின்வாழ்வோ
ரருங்கலையுணர்ந்தும்நன்னோன்பாற்றியும்விருந்தோடுண்டும்
வருங்கலைமதிக்கோடீரவானவற்றொழுதுமேற்போர்க்
கிருங்கலையசனமற்றுமீய்ந்துநாட்கழித்துவப்பார். 102

இன்னநன்னலம்பெற்றோங்குநாட்டினையெதிர்ந்துநீங்கி
முன்னொருமறையோனேலமுடுகிமேற்சென்றுவைகை
நன்னதிகுடைந்துகுந்திநந்தனனுகரேத்தோர்
பொன்னுவணப்புள்வாமம்போந்திடப்போந்தானம்மா. 103

(அகழி மதில்.)

பொன்னகர்க்கும்பரோங்கும்புதுமைகாண்பிமையாநாட்டந்
தன்னொடுமமரர்மேனோக்கிஞ்சியைத்தம்மூர்க்கீழ்பால்
மன்னியபுதுமைகாண்பான்மாமணித்தீபந்தத்தம்
சென்னிவைத்தாகர்கீனோக்ககழியைச்செம்மல்கண்டான். 104

திருவரங்கச்சருக்க முற்றும்.

ஆக சருக்கம் 7-க்கு கவி (251.)

---

8-ஆவது மதுரைகாண் சருக்கம்.

இச்சருக்கத்தால் நகர்வருணனையும் ஈசுவரசந்நிதிவருணனையும் துதியும் பாண்டியன் அருச்சுனனைக்கண்டு நேசித்து யதியென்று நினைத்துத் தமது பூங்காவனத்தி லமரச்செய்தலும் கூறப்படுகின்றது.

[கொடிச்சிறப்பு.]

நிலைதவங்குலையுமெம்மூர்நெருங்கிடேற்போநீயென்றுங்
குலையினுங்குலைகவாயெங்கோதைபோற்கிட்டாதென்றுஞ்
சிலைவலோன்றனக்குக்கையாற்றெரிப்பபோற்கொடிகளாடு
மலைநிகர்சிகரிவாயிற்கடந்துமாநகருள்வந்தான். 1

வேறு.

சீதநாயகச்சிந்துவோர்காற்புவிசிதைப்பப்
போதநாயகப்பணியினுலெல்லையைப்புதுக்கிப்
பூதநாயகனினிதமராலவாய்ப்புரியை
வேதநாயகரொடுந்தனஞ்செயன்விழியுற்ருன். 2

[இதுமுதல் 21 - கவிகள், மதுரைநகர்ச் சிறப்பு]

உறைந்தமேனமக்கிதுவெனவுற்கைமேற்சினந்து
செறிந்துசாடுதற்போலுந்தன்ணுணேதென்னவன்சேட்
புறஞ்செலுத்துதற்போலுஞ்சேறபொறித்தபொற்கொடிக
ணிறைந்தபொன்மலையும்பர்நின்றுடுவகண்டான். 3

வெள்ளவேணியைச்சிவணறுவினேஞர்தம்வீதி
புள்ளுவக்குறும்பறுத்துமண்புரப்பவர்வீதி
யுள்ளமூதியவழிசெலுமொருவர்தம்வீதி
கள்ளமின்மனக்களமர்தம்வீதியுங்கண்டான். 4

கொங்குதாழ்குழற்கூட்டகிற்புகைவெளிகுலவி
மங்குல்சூழ்கயிலையிற்றிகழ்பளிக்குமாடத்திற்
றுங்கவெண்கலையுடுத்துமுத்தணிகொடோகையர்க
டங்குவெண்மலர்த்தையலிற்றயங்குவகண்டான். 5

சிகரமாமுலைமடுத்தொளிர்மாடகந்திருகி
மகரயாழிசைத்ததன்வழிகூரற்றெனிமருவ
வொகரமேனியரோவியத்திருந்துதவமுத
நிகரில்பாண்செவிமடுத்தனன்சிந்தைநெக்குருக. 6

மாடமேனிலைவதிந்தவோர்மங்கைதன்பதியோ
டூடல்கொண்டெறிவண்டிமிரொப்பறுமலங்கல்
கூடல்வேந்தன்மின்சூடுதற்கோரறிகுறிபோல்
நீடுதன்புயத்தாழ்வநோக்கினன்விறனிருபன். 7

ஆலமுந்நமனுங்கலந்தென்னவஞ்சனந்தோய்
நீலவொண்கணூரணிகெழவரங்கின்வாய்நேர்ந்து
சாலநோக்கபிநயந்தழீஇச்சதிமுறைநடித்து
மாலுறுத்தியாடவருயிர்வாருவகண்டான். 8

தந்திமுன்செலப்பின்செலவொட்டைமுன்றூவுங்
கந்துகஞ்செலப்பின்செலக்கனகத்தேராச
மைந்தர்முன்செலப்பின்செலவயவர்கண்மாறு
விந்தைசேர்நெடுமறுகிடையேகினன்விசயன். 9

வெம்புமங்கையோர்கந்துகம்வீசவேறுருமின்
வம்பிலாதொளிர்முலையிடைவந்துமும்முலையாய்ப்
பம்பிநின்றுபின்சரிந்ததுங்கண்டனன்பார்த்தன்
நம்பனைத்திடத்தடாதகையொப்பவந்நங்கை. 10

கோலமாமிடற்றொலியெழுத்துறமிகக்குழுறுந்
தோலினுதம்வெண்கலத்தொனிதுளைபடுந்துழனி
பாலினேர்நரப்பிசையெழுமணிபுனைபந்தர்
ஏலமாமணங்களீஇப்பலரியற்றுவகண்டான். 11

சந்துசென்றவளொளிர்நகைமுகத்தொடுஞ்சார
முந்துமையலின்முன்றினோக்குற்றமொய்குழல்கண்
டிந்துகண்டவம்போருகத்திருகைகூப்புவந்து
பிந்தியாம்பலின்முகமன்வாய்பிறங்கவுங்கண்டான். 12

உடைந்துடைந்துமீண்டொன்னலன்வாவெதிர்சீறி
யடர்ந்தடர்ந்தடுமொருவனிற்பபோதரமசைய
வடைந்தடைந்துகைமண்படவறைந்துகந்துகத்தை
யிடைந்திடைந்துநைபிடையினுராடுவகண்டான். 13

மன்புவிக்கெமனகர்க்குநீங்காநெறிமருவும்
புன்பிறப்பினூனுழியின்வரவுபோக்கொருவாப்
பொன்கைசெய்வடம்பொலிமணிப்பலகையூசலிற்போந்
தன்புறச்சதிபதியுவந்தாடுவகண்டான். 14

ஒண்மலர்விலைக்குதவுமொண்டொடியையோர்விடன்மார்
புண்மறைத்தகோங்கரும்பைச்சொல்கெனவவளுக்க
விண்மலர்ந்தபூவிலையிலநின்னைவிண்ணேற்றுங்
கண்மலர்ந்துநோக்கேல்வறிதகலென்பகண்டான். 15

மானிளஞ்செவிமானுவெள்ளிலைவிலைவழங்கும்
மானைநோக்கியோர்விடலைநீநின்னிடைமறைத்த
தேனுகுக்குமோரிலைவிலைசெப்பியீகுதியேல்
யானளிப்பலென்கேட்கினுமெனச்சொல்வகண்டான். 16

கந்திறத்தடர்பாகெறிந்திழிமதக்கவுடீச்
சிந்துகண்முகிற்றெழிப்பொடுநடந்துவெஞ்சீற்றத்
தந்திநேர்கினுந்தம்பதம்பெயர்ப்பிடமின்றி
வந்துமன்பதைநெருங்குமாவணவண்மைகண்டான். 17

விற்றவல்குலேத்தமதெனச்செய்துபின்விற்கும்
பெற்றியாற்பலர்க்கீயினுங்குறைவின்றிப்பெருகும்
பொற்றைநேர்தருதனத்தினர்போதமெய்யணிசெய்
தூற்றுமுன்றின்முன்மயிலெனவுலாவுவகண்டான். 18

கரியகஞ்சிகைவீழ்த்திமேன்மாடமீக்கவின்கொ
டெரிவையுட்புறத்தணிசெய்பாண்டிலிற்றுயில்செயவீ
சரியினப்படாம்விலகுதோறவடன்மெய்யொளிர்த
லிருமுகிற்றலேயிமைத்திமைத்தொளிமின்னிற்கண்டான். 19

காதுகண்முகம்வாய்கணேக்காலிடைக்குவமை
போதுநாளிகம்பானலம்போருகங்குமுதங்
கோதில்சூல்வராற்கொடியிவைகுலேதரக்குழுமி
மாதர்நீர்குடைந்துவக்கும்வாவிகள்பலகண்டான். 20

உற்கைசூழவில்லுமிழ்கலேநிறைவொருமதிய
நிற்குமாறெனக்கலேயுமிழ்வாயொருநிபுணன்
கொற்கைவாழ்குபுநாமகட்கெடுத்தகோயிற்கண்
கற்குமாணவர்நாப்பணிற்களுலுவகண்டான். 21

வஞ்சிபோலியரூடலினுதைப்பவந்தடர்செம்
பஞ்சுதோய்ந்தமென்பதச்சுவடொளிர்புயம்பாரா
ரெஞ்சலில்வலிவென்றிமாதிருந்ததையேய்ப்ப
மஞ்சர்வந்துபல்படைபயில்வன்மையுங்கண்டான். 22

போகசாலேயும்புண்ணியசாலேயும்புனிதப்
பாகசாலேயும்பண்டிதசாலேயும்பகரும்
யோகசாலேயும்பல்தொழிற்சாலேயும்யூப
யாகசாலேயுமெங்கணுநோக்கினனேந்தல். 23

இன்னமாநகரியல்பெலாங்கண்டுவந்தேகிக்
கன்னல்வேள்சமழ்ப்புறநகுங்கட்டழகுடையோன்
முன்னர்நூனெறிதவலறுமுனிவரர்சூழக்
கன்னலொன்றினிற்சங்கரனாலயங்கண்டான். 24

[இதுமுதல் 4-கவிகள், சோக்கநாதர் வருணனை.]

வேறு.

துடிமருங்குமையாண்முலையொடுமிகலித்
தோற்கலாதுயர்ந்ததென்றுன்னி
வடவரையதனையிருகடைகுழைத்து
வார்சிலையாக்குவானவனை
யிடையரிற்றதிபாற்றிருடியுண்டடடிபட்
டெய்த்துமெய்மண்ணுகர்ந்தனனன்
றடையலர்விடக்கையருத்தமைத்தனனை
யாக்கியம்பங்கைகொண்டவனை. 25

கண்டிமைப்பறக்கண்கருகிமெய்கழலக்
கைவளைகருங்குழற்கலையத்
தண்டுதலறப்பின்றெரிவையர்தொடரத்
தாருகவனத்தினேற்பவனை
யண்டர்சக்கிரியம்புயனரிமுதலோ
ரறிவருமாதிதானெனினுந்
தொண்டருக்கெளியனென்பதையுணர்த்தப்
பரவைமுன்றாதுசென்றவனை. 26

தத்திவெண்டுளிவிண்புகக்கடல்கடைநாட்
டனிவலிச்சயிலமத்தசைக்குங்
கத்துருதனயனைந்துமிழால
காலமுண்டவனையொண்கவின்மெய்
மைத்திகழ்கருங்கட்புகர்முலைத்துவர்வாய்
வளைக்கைமாலினிதனோடன்று
மத்தளமுகின்மெய்முழக்கவம்பலத்தின்
வந்துவாதுறநடித்தவனை. 27

வன்னிவந்தொளிர்நெற்றியனைவெண்டலைமான்
மழுவொடுதுடியமர்கரனைத்
தன்னரைபுலியினதளசைத்திதழி
சசிபுனற்சடைதரித்தவனை
மின்னிடத்திலகவெண்பொடிதிகழ்வித்
திருமமெய்யனைப்புரம்வீட்டும்
புன்னகையினனைக்கண்டுடல்புளகம்
பூத்தடிவீழ்ந்திதுபுகல்வான். 28

[இதுமுதல் 4-கவிகள், சொக்கநாதர்தோத்திரம்.]

வேறு.

வண்டுபடிந்திசைபயிலவழிபசுந்தேன்பரிசளிப்பான்
மலருங்கொன்றை
மண்டுகதிர்ச்செஞ்சடையமணிச்சுடிகைப்பணியணிவா
னவனேபோற்றி
தண்டுளபந்தவழ்ந்திரவிதனைக்கவற்றுமணியணிசஞ்
சரிக்கும்வாகு
விண்டுவிரிஞ்சனுந்தேடிக்காண்பரியசொக்கலிங்க
விமலாபோற்றி.. 29

விரும்பிவெயில்கவரவிருள்மேவுவபோல்வருமாயை
மேவுங்கூத்திற்
றருஞ்சரிகமபதனிநற்றுளவிசைக்கொத்தறைமத்
தளிகபோற்றி
யிரும்புதிரித்தெனவணங்குமெறுழ்வலிக்கோட்டருணக்கண்
ணிருண்டமேனிப்
பெரும்பகடூர்ந்துரப்பிவந்தகாலனைக்காலாலுதைத்த
பெரியோய்போற்றி. 30

கனைத்துநிமிர்ந்தெழுந்தோடிக்கரைதடவுங்கல்லோலக்
கடல்சூழ்வைய
மனைத்துதவுஞ்சிவைகாணுதஞ்சொருபெண்சடைகரக்கு
மமலாபோற்றி
பனைத்துதிக்கைபகடுகைத்துப்பாற்றுழல்நெய்யுமிழொளிவேற்
படைக்கையோச்சிச்
சினத்தெதிருஞ்சலந்தரனைத்தேவரிடர்தீரவுயிர்
செகுப்போய்போற்றி. 31

வரைவயிற்பாரதங்கோட்டுமொருகோட்டுமழகளிற்றை
யுயிர்த்தவல்லிக்
கரையுடறந்தழுமறைச்சேய்க்கருந்துபுபாற்கடன்முழுது
மளிப்போய்போற்றி
நரைதிரைமூப்படமெலியும்பூதவுடம்பெடுத்தினியா
னலியாவண்ணம்
வரமருடிசெஞ்சடைமீப்பிஞ்சுமதிவளர்த்தொருவா
னவனேபோற்றி. 32

என்றுதுதிபுகறிருநாவமிழ்தூறவிரும்புளகுற்
றெழின்மெய்யுச்சி
துன்றுகரத்தொடும்பலகாற்படிந்தெழுந்துமறைகமழ்வாய்த்
தூயோரோடுஞ்
சென்றுசுரும்பரற்றவிளந்தேன்பிலிற்றுமலர்க்கூந்தற்
செவிமீதோடி
நின்றுகுமிழிடைமறியுமங்கயற்கணம்மைதளி
நிருபநேர்ந்தான். 33

[இதுமுதல் 4-கவிகள், மீனாக்ஷியம்மைதோத்திரம்.]

நித்திலம்போனகையாளைப்பவளநிறத்தொருநிமல
னிடம்நீங்காளை
முத்தருளத்துணர்வாளைமூவுலகுமுயிர்த்திளமை
முதிராதாளைச்
சுத்தமனத்தாரமுதைத்தூமணியைப்பரகதிக்குத்
துணையைத்தோன்று
வத்துவிதப்பொருளினையெங்கண்மணியைத்துதிசெய்வா
னடிமேல்வீழ்ந்தே. 34

கொடிமுதற்றசாங்கமுறுங்குலவேந்தர்மணிமுடிசாய்த்
திருகைகூப்பப்
படிமுழுதுமொருங்குமொருகுடைநிழற்கீழரிசுமந்த
பைம்பொற்பீடத்
திடைகவன்றுள்வாங்கவிம்மிபெழுநகிலமூன்றிலகு
விமையோரேத்த
வடிசுடர்வேன்மாறனொருமகளாகிவந்தமர்மா
தாவேபோற்றி. 35

பருவரல்செய்திடும்பைபுரிபவப்பிணிக்கோர்அருமருந்தே
பனிசூழ்காமர்
வரையுதவவருமயிலேமரகதமாமணிச்சுடரே
வானோர்யார்க்கும். 36

அருமறைக்குமெட்டாதவரன்விரும்புந்தெள்ளமுதே
யடியார்மீதிற்
கருணைமழைபொழிமுகிலேகற்பகமேமெய்ஞ்ஞானக்
கனியேபோற்றி

தந்திமுகனறுமுகனுஞ்சண்டைவருமறைக்குலைச்சேய்
        தானுமுண்ணத்
தந்துமுலைமடியிருத்திப்புச்சிமுகந்தருட்டருசாம்
        பவியேயானுன்
மைந்தனலவோமறுதாய்மானவென்னைநோக்குதலும்
        வழக்கோவான
முந்துலகமூன்றினமுமுழுதளிக்குமீனயன
        முதல்விபோற்றி. 37

வேறு.

பரையிருகமலப்பொற்ருட்பற்குனன்பணிந்துநிற்ப
வரைநிகர்குவவுத்தோளான்வானவர்வணங்குந்தாளான்
திரைகடற்ருேயந்தீயச்சிகியுமிழ்ந்தெதிரும்வேலான்
கரையகழ்ந்தொழுகும்வைகைக்காவலனுங்குவந்தான். 38

வந்தவனின்றயோகிமாணடிவணங்கியன்பின்
முந்துவகையினேடெங்கண்முதல்வனேரடிகாளிங்கு
வந்திடத்தணந்துமம்மர்மருவுமோர்நகர்யாதும்மைப்
பந்தமுற்றதின்வீறுற்றபெயரெதுபகர்திரென்ருன். 39

கந்தடுகளிற்றினேங்குங்கைதவன்வினவக்கேட்டோன்
சந்திரகுலத்துட்போந்தசந்தனுமரபிற்பாண்டு
தந்திடுந்தருமன்காக்குந்தயைபொறைக்காய்போல்விஞ்சும்
இந்திரப்பிரத்தம்வாழ்வேமென்றனனுசிகூறி. 40

விரிகடன்ஞாலத்தெம்மைவிசயமாமுனிவனென்பார்
திரைதவழ்தெய்வக்கங்கைசிந்துகாளிந்திகோதா
விரிநருமதைகாவேரியாடினம்விழைந்தேமின்னுங்
கரைபொருதிரைநீர்க்கன்னிகலந்துமெய்களிக்கமாதோ. 41

முற்றுரைவேதத்தீற்றின்மொழிந்தசாதனங்கணன்கு
முற்றவனிகர்ப்பநின்ருேனுரைப்பக்கேட்டுமிழ்நஞ்சூற்றம்
பெற்றவெள்ளிலைவேலான்பெட்பொடுபகர்வானெந்த
நற்றவம்புரிந்ததிந்தநகர்வரநீவிர்மன்னே. 42

எய்தியதவமேயாகாவெனக்கருமகப்பேறியுந்
தெய்வதமென்னவந்தீர்சில்பகலிவணின்றேயா
னுய்வகைபுரிதிரென்னவொப்பிறீர்த்தங்கணுடி
நெய்தவழ்வேலோய்வந்துநெடும்பகனீங்கிற்றென்ருன். 43

அண்டுமீடணையிஞழ்வோனென்றணையகலச்சிந்தை
கொண்டனிர்தடுத்தாட்கொள்ளுங்கொள்கையர்க்கறமோவென்றான்
விண்டுளைத்துயருஞ்செம்பொன்வியன்முடிமேருமீதோர்
செண்டெறிந்தார்த்துநின்றசேற்கொடிதிகழ்தேர்ச்செம்மல். 44

தீங்கறுநீதிநூலின்றிறங்கொடுபின்னுஞ்செப்பி
யீங்குசின்னுணிற்பீரென்றேத்தலுமிசைந்துநிற்ப
வோங்குமுள்ளுவகைபொங்கியொழுகலொத்துடலம்பூத்துப்
பாங்குறையமைச்சற்கிதுபஞ்சவன்பணித்திட்டானல். 45

உம்பர்கோன்முடியின்மீதினொளிர்வளைபெறிந்தனான்றி
னம்புவிதந்ததேவதாருவேயடர்ந்துநின்ற
வம்பவிழ்மலர்களான்றமயிலினநடிப்பநீண்ட
கொம்பிற்குயில்கள்கூவக்குரக்கினந்தாவாநின்ற. 46

மங்கையர்நடைசேர்கற்பான்மடவனம்பயிலாநின்ற
கொங்கையைநிகர்ப்பநோன்புகொம்பின்மாதுளஞ்செய்கின்ற
வங்கவர்முகத்தைநேர்வானருந்தவத்தொருதாணின்ற
பங்கயத்தடங்களான்றபளிக்கறையாராமத்தில். 47

உறைவிடமமைத்தேயுண்டியுபகரணங்கள்யாவும்
நிறைவுறவளித்தியின்னோர்நீங்கறுபன்பின்வைகக்
குறைவறவெனவம்மாற்றங்கொண்டமாத்தியனுமன்றே
மறைமுறையமைத்துச்சாலைமற்றுளபலவுஞ்செய்தான். 48

கைதனிற்றண்டங்காட்டிக்காந்தவிற்காளை தன்னை
மைதவழ்ந்திளங்கால்வீசும்வாசமார்வனஞ்சேரென்னுக்
கைதவன்கூறவுள்ளக்கருணைதன்முகத்தாற்காட்டி
மெய்தவவேடங்கொண்டவேதியரோடுஞ்சார்ந்தான். 49

[அருச்சுனன் பாண்டியனது நந்தவனத்திலிருந்தல்.]

அவ்வனத்தமர்ந்ததோற்றத்தரும்பொருள்பலவுங்கண்டே
யிவ்வனத்தெழிலைநோக்கினிந்திரன்வனமுமொவ்வா
தெவ்வனத்துறமோர்நோய்க்கீதீட்டருமருந்தாமென்றே
கவ்வைதீர்மனத்தினோடுங்காவலனிருந்தான்மன்னே. 50

[மதுராகாண்டசருக்க முற்றும்.]

ஆக சருக்கம் 8-க்கு கவி (301.)

---

## [ 9-வது சித்திராங்கதைச் சருக்கம். ]



இச்சருக்கத்தால் சித்திராங்கதையின் கேசாதிபாதவருணனையும், அவள் கன்னிகாமாடத்தில் வீற்றிருத்தலும், பாண்டியன் அப்பெண்மணிக்கு மணஞ்செய்விக்க முயற்சிசெய்தலும், அதனை அம்மாதுமறுத்துத் தந்தையுடன் சம்வாதஞ்செய்து இளவரசுபட்டம் பெறுதலுங் கூறப்படுகின்றது.

வாடியபைங்கூழ்தளிர்த்திடப்பொழியு
மழையெனவறுமைநோய்கெடவே
யாடகமழையைப்பொழிந்துலகளிக்கு
மரசர்கோனருந்தவம்புரிந்தே
யேடவிழ்கொன்றைமிலைந்தசெஞ்சடையோ
னின்னருளாற்பயந்தெடுத்த
வாடரவல்குற்சித்திராங்கதையென்
றழகுறும்பெயருடையணங்கு. 1

எடுத்தகோலேந்திநிற்குநரல்லா
லெழுதலாரோவியர்கிளைத்தே
யடுத்ததேன்மொழிமின்னவயவமதனை
யவர்வரைமாதரேயனந்தல்
விடுத்தவானவர்தம்முலகின்முந்நீர
வெண்டிரைக்கருங்கடறுகிலா
வுடுத்தபார்பிலத்தும்வாழ்குநரென்னின்
மற்றிவட்குவமையாரரிதே. 2

(இதுமுதல் 15 - கவிகள், கேசாதிபாத வருணனை.)

கூறுசைவலமெஞ்சுறக்கரையொதுக்கிக்
குயினுருக்குலையவின்முடிக்கி
யேறுநள்ளிருளைப்பாழ்படச்சிதைஇ
யெழாவகையறலையப்பமிழ்த்தி
வீறுகொண்டடர்ந்தவென்றியைவிளம்ப
விரைமலர்த்தொடைபலபுனைந்து
நாறுகாசறைபெற்றிளநறவுயிர்த்து
நறுமணங்கமழ்கருங்குழலாள். 3

அஞ்சுதைவடியச்சிந்துரம்படிய
வஞ்சிளம்பிறைமதியிடைய
மஞ்சர்கண்கவர்ந்துபொன்னிறந்தவழ்ந்து
வனப்புவந்திருந்தவாணுதலாள்

வஞ்சகமதன்கைவெஞ்சிலைகவற்றி
வாளுறைதனைவெறுத்திகலி
விஞ்சியநிம்பவிலைசினைவிடுத்து
விளர்த்துகச்செயும்புருவத்தாள். 4

ஆலமுமமுதும்வடவையுங்கவர்ந்தே
யளக்கரொத்துயிர்கவர்வினையிற்
காலனிற்சிறப்புற்றுவமைகொள்கயலைக்
காவியைத்தடம்புகக்கறுவிச்
சாலவுங்குழைமுன்னடர்ந்துசண்பகமுன்
றாழ்ந்துமைதோய்ந்திணையறக்கூர்
வேலினைக்கணையைப்பழித்துமான்மருட்டும்
வீரியக்கூரியவிழியாள். 5

குமிழையெட்பூவைக்கடிந்துசுந்தரமே
குடிபுகுந்திருந்தநாசிகையாள்
உமிழ்சுடர்க்கலன்பெற்றுவமநாளிகத்தை
யுடற்றொளிநிறையிருசெவியாள்
தமிழ்தருஞ்சிலைக்கைமதனன்வாடீட்டுஞ்
சாணையைத்தகுகபோலத்தாள்
அமிழ்துகுமழலையினியசொற்குடிகொண்
டாம்பலைப்பழித்தொளிர்வாயாள். 6

நெருங்குவித்துருமக்கடிகையோரிரண்டி
ணித்திலநிரல்படநிறைத்து
மருங்குவைத்தனையவிதழினுட்புறத்து
வயங்குவெண்டந்தபந்தியினாள்
சுருங்குகொல்லுலையினுட்புறந்திகழ்ந்தோர்
சுடர்க்கொழுந்தமிழ்திணைத்தழுவி
யிருந்தெனக்குவிசெவ்வாய்வயிற்கவின்கொண்
டிலகுமீர்ம்புனல்வளர்நாவாள் 7

நிரைநிரைவளருங்கலைநிறைந்தமுத
நிரம்பியுட்கறைதவிர்ந்துதய
வரையினின்றொளிருமதியெனக்களமேல்
வயங்குநற்கருணைசேர்முகத்தாள்

அரிகரத்திருந்தவளைமுகஞ்சுரிப்ப
வரியபண்டருகிரீவத்தாள்
விரிதலைக்கரும்புங்கழைபுஞ்செய்வனத்தின்
மெலிந்தகன்றிடச்செயும்புயத்தாள். 8

முறுக்கியவீணையாற்றிடப்பொருது
மொய்வளைதரித்தமுன்கையினு
ளறப்பொருடழைப்பவளித்திசைநிறுத்து
மழகியகாந்தளங்கையினள்
நிறத்திளம்பவளக்கடிகையைக்கடிந்து
நிவந்தொளிபரப்புமங்குலியாள்
செறுத்திளங்கிள்ளையலகிணைக்கவற்றிச்
சேர்ந்தழகிருந்தகூருகிராள். 9

இணைந்தபொற்குவட்டின்முடிதகர்த்தினிமற்
றிணையலவெனவிகழ்ந்தார
மணிந்துகச்சடர்ந்துகுவிந்துமார்பிடங்கொண்
டரைத்தசந்தனந்திமிர்ந்தெதிரிற்
பணிந்திடமதனன்றதும்பியண்ணுந்து
பளபளத்துயர்ந்தொளிசிதறிச்
சுணங்குபூத்திறுமாந்தடிபரந்தெழுந்து
சுந்தரமொழுகிளமுலையாள். 10

ஆடவரெனும்புட்படுப்பவந்தடைந்த
வனங்கவேட்டுவனிகரிடையாள்
ஈடறுமுலையாமிரைபடுங்கண்ணி
யீதெனுமயிரொழுங்குடையாள்
வேடனதுடலங்கரக்குமென்குழிநே
ரிலஞ்சியாண்மெல்லநோக்குறப்பொன்
மோடிகந்தவனேறுதற்கமைபடியின்
மொழிவயிற்றணிமடிப்புடையாள். 11

மண்படக்கவற்றிமான்குளம்பினைவிண்
மணியொருவையமார்திகிரி
விண்படத்துரத்தியமுதமுறின்ப
வீரையொத்திலகுபொன்பகத்தாள்

தண்படுகதலிதனைத்தறித்திணைகொ
　　டந்திகைவளைத்தமென்குறங்காள்
புண்படுநெஞ்சோடலவனையளையுட்
　　புகச்செயுமணிமுழந்தாளாள். 12

கெட்டுளமரற்றக்காளம்வெங்படப்பைங்
　　கிளியொருவாகனனுவம்
விட்டொளிசிதறியரிமணிச்சிலம்பு
　　மெல்லொலிதருகணைக்காலாள்
நட்டமுற்றெதிர்ந்தகந்துகமோட
　　நகுமிருகுதியினணிறைகோற்
றட்டமற்றெழுந்துதாழ்ந்திடப்பணித்துத்
　　தவழ்ந்தழகெழும்பரடுடையாள். 13

கன்னலஞ்சிலைவேள்காமபுத்தகம்போற்
　　கவின்கனிந்திடும்புறவடியாள்
சொன்னகாஞ்சனியங்குரமெனக்கிளர்ந்து
　　துலங்குபொன்னிரைவிரலுடையாள்
செந்நிறம்பொருத்தசிறுபிறைபெருத்துஞ்
　　சிறுத்துமோரையிரண்டிருந்த
தென்னமெல்விரன்மீதெழினலம்விளக்கி
　　யிருந்தொளிபரப்புசீருகிராள். 14

பிண்டியையிலங்கைப்பதிபுகந்துரத்திப்
　　பெரிதுவந்திணையெனப்பிறங்கு
மிண்டையைப்பயம்விட்டெழாவகையிருத்தி
　　யிணைந்துதன்கீழ்ப்படிந்திருப்பத்
தொண்டுகொண்டனிச்சந்தனையலத்தகத்திற்
　　றுளைந்தியார்நிகரெமக்கெனவே
பண்டைஞாலத்தினனமிரிந்தோடும்
　　படியொயில்நடைபயில்பதத்தாள். 15

தெள்ளமுதனைத்துமின்னலைப்படிவஞ்
　　செய்ததொத்தொளிர்திருவடிவாள்
கள்ளுகற்கண்டுகரும்பிளம்பாகுங்
　　கைப்புறச்சுவைகொளின்மொழியாள்

உள்ளநொந்தொகரமிரிதரநிகரி
லொளிதிகழ்சாயலேயுடையாள்
துள்ளுபண்குழல்யாழ்குயிலிவைமொதுங்கச்
சுரங்கனிந்தொழுகுநற்றெனியாள். 16

சிறந்தவிவ்வனப்பாராலிலேயுதரச்
சேயிழைதனே மகனெனவே
பிறந்தநாண்முதலாயகமதித்தாடேஉப்
பிறிதிலாத்தன்மையாற்பிரியத்
தறந்தவறுதகலேபலபயிற்றி
யாண்மையிற்சிறந்தவாடவர்கள்
புறந்தரச்செருவிற்பல்படைப்பயிற்சி
பொலிவுறச்செய்தனன்வழுதி. 17

[இதுமுதல் - 7 கவிகள், உண்டாடடுச்சிறப்பு]

வேறு.

தன்னிழல்கண்டுசீறுந்தந்திபல்விதநடாத்திப்
பொன்னவிர்சயந்தனத்தைச்சாரிபல்விதத்திற்போக்கி
மன்னவர்மயங்கப்பண்ணில்வயப்பரிமேனின்றேங்கிக்
கன்னலொன்றிரண்டிற்பற்பல்காவதஞ்சாரிபோமால். 18

விற்றொழில்வழுக்குநீங்காவிதிப்படிமுயன்றுகற்றுள்
மற்றொழிற்சிலம்பங்கூறும்வகைபலபயின்றுணமக்
கொற்றவேற்சூலந்தண்டுகுந்தம்வாணவியமோச்சும்
பெற்றியும்பெற்றுயேபருவமீரிரண்டும்பெற்றுள். 19

உன்னுமெக்கலேவல்லோர்க்குமொன்றரிதெனுஞ்சொலோங்க
மன்னுபன்னூல்கடோர்ந்துமதனநூற்கிடைந்தாளாகி
மின்னுபொற்கலன்பெய்மேனிவீரவிந்திரைபோல்விஞ்சிக்
கன்னிமாடத்தினுற்றுள்கன்னியர்பலர்சேவிப்ப. 20

அரியவச்சிரக்கான்மீதினரத்தவுத்திரங்கிடத்தித்
தரமுளதென்னக்கைசெய்தமனியவடம்பூண்டுற்ற
மரகதப்பலகைமீதுவந்தமர்ந்தூசலாடி
யரியொடுபூவையோடுமமுதுகுத்தெனமிழற்றும். 21

கொங்கைகடதும்பமென்பொற்கொடிநுசுப்பிடுக்கண்கொள்ளப்
பங்கயமுகம்வெயர்ப்பப்பன்முறைதாக்கித்தாக்கி
யங்கைகொப்பளிக்கச்செங்கேழுடையவெண்பந்தையாடிச்
செங்கையாழிசைத்துத்தேன்சோர்திப்பியகீதம்பாடும். 22

நினைவொடுமறிவுஞ்சிந்திநெட்டுயிர்த்திளைஞர்நோக்கப்
பனிதவழ்பொழிலினூடுபதச்சிலம்பரற்றப்போங்கே
யனமரிகுயில்கலாபியகமெலிந்தொதுங்கத்தீந்தேங்
கனிமலர்கொய்துலாவிக்கலந்துசன்னியரோடாடும். 23

கொங்கையொப்பாயிதென்றுகூறுவரெவருங்காண்டும்
மங்கைமீர்வம்மினென்றோர்வண்ணவெம்பலகைமீதிற்
செங்கைகொண்டிருத்திநோக்கிச்சிறுமையென்றெறுக்குமாபோற்
பொங்கியதாயந்தன்னுற்புடைத்துவட்டாட்டமாடும். 24

இன்னவுண்டாட்டமாடியிருப்பமின்கூடற்கோமான்
பொன்னிலமதனைத்தற்பின்புரந்திடவெவரேயாடூஉ
வென்னநெஞ்சனுங்கிநீ்ணளிடர்க்கடற்படுவானோர்நாண்
மன்னியமதியின்வன்மைமந்திரர்தம்மைநோக்கி. 25

[இதுமுதல் ௬-கவிகள், பாண்டியன் புத்திரனின்றி வருந்தல்.]

வேறு.

எரிமணிச்சூட்டரவேந்துபாரினை
வருசுடர்த்திங்கடன்மரபினெற்பினோர்
பொருவறுங்குமரர்யார்புரக்கவென்றுதன்
னருகுகக்கண்கணீரரும்பிக்கூறுமால். 26

தேவருமுனிவருந்திகழுமந்தணர்
யாவருமன்னுயிரெவையுமோங்குமென்
காவலின்பின்னிலைகலங்குமாலென
வோவருந்துயரமென்னுளம்வருத்துமால். 27

கிங்கிணிச்சீறடிகிளருமென்னடை
திங்களிற்பொலிமுகம்புதியதேனிதம்
பொங்குமென்மழலைவாய்ப்புதல்வற்பெற்றிலார்க்
கிங்குமங்கும்பெரும்பயனின்றென்பரால். 28

கல்வியில்மானவர்கமையிலாவறி
வொல்கிடைக்கற்பினெண்டொடியிலில்கரி
யில்படையம்புலியில்விணீண்முடிச்
செல்வனில்நகர்நன்னீர்ச்சிறையில்தேயமும். 29

விதியில்நல்வேள்விவிராகமில்தவம்
சுதியில்கானம்மகத்துறவில்ஞானந்தன்
பதியில்வாலியப்பெண்ணற்பறையில்மன்றல்நன்
மதியில்மந்திரியும்போன்மகனில்செல்வமே. 30

தவமுயன் றரிதினிற்றந்தபெண்ணலாற்
புவனியைப்புரக்குமோர்புதல்வனின்மையா
லவமினியென்குலமாயிற்றுலெனச்
சிவனையும்புடைத்திடுஞ்செழியனொந்தனன். 31

[இதுமுதல் 4-கவிகள், மந்திரிகள் தேறுதல் கூறுதல்.]

இறப்பெதிர்நிகழ்வினையேந்துநெல்லியின்
நிறப்பொலிவுறுங்கனியென்னநேர்குவார்
துறப்பறுந்துயரொடுஞ்சொற்றதோன்றற்குப்
பெறற்கருமகப்பெறும்பெற்றிகூறுவார். 32

நிணமுறைந்தொளிருவேனிருபநேர்நிறை
குணமுறைந்தழகொழுகுன்றன்கோற்றொடி
மணமுடித்தவள்வயின்வந்தமஞ்சனுக்
கணிமுடிதரித்தலேயாகுமாறென. 33

முன்னரேகணிதநூன்முழுதும்வல்லவர்
பன்னியதறிந்திடர்படர்வதென்கொலோ
வின்னகைசுதன்புவிக்கிறைவனாமெனக்
கன்னிதன்சாதகங்கணித்துநோக்கியே. 34

என்றனர்மந்திரரேந்தல்கேட்டுளந்
துன்றியதுயரறக்களிதுளங்கினான்
நின்றனவலயங்கணெகிழுமொய்ம்பினோ
டன்றரும்பிறங்கடையடைந்தபோன்றரோ. 35

வாகைவேற்றென்னவன்மற்றதற்கியா
னேகையோடியற்றுவதுரைமினீரென
நாகருமதித்திடுஞ்சூழ்ச்சிநாயகர்
தோகைதன்சுயவரந்தொடங்கனன்றென்றார். 36

வரைதொழில்வல்லுநர்வம்மினென்றுமன்
னுரைதருமுன்னரினோடிவந்தனர்
திரைகடற்புவிபலதேயமும்புகழ்
கருவியுமோலையுங்கையினேந்தியே. 37

வணங்கினரொல்கிமெய்வாய்மைபொத்தின
ரிணங்கியகூர்ப்பரத்திடக்கையொட்டிநே
ரணங்குறவிமைபொராதகலநின்றனர்
மணங்கமழ்தாரினான்வதனநோக்கியே. 38

நோக்கியதறிந்துமந்திரரைநோக்கிய
வாக்கியமதுகைபான்கருத்தறிந்தவர்
வீக்கியமடல்பலவெரிநமர்ந்திடத்
தூக்கெதிர்நிற்குநர்துண்டநோக்கியே. 39

கடங்கலுழ்களிற்றினன்கன்னிக்கேழ்தின
மிடந்தருஞ்சுயம்வரமென்னக்கோட்டுதிர்
படர்ந்திடும்பற்பலபாடைமன்னர்க்கும்
முடங்கல்போக்குதற்கெனமுதுவர்கூறினர். 40

அத்ததியோலையினவ்வமன்னர்தம்
உத்தமக்குணங்கனங்கீர்த்தியூட்டியே
சித்திரம்பொறித்தெனத்தீட்டினாரோ
தத்துறுநடையெழுத்தாணிதன்னினே. 41

தந்திடத்திருமுகந்தரணிமன்னருக்
கிந்திரன்றிசைமுதலெட்டுநாடியே
சிந்தையின்முந்துறுந்திறங்கொள்காலினர்
வந்தனர்மீனவன்வாவெனுமுனம். 42

இந்திரனகரிதற்கிணையிலென்குபு
நந்திருநகரலங்காரநண்ணவே
முந்துறுவினைகொடுமுடிமினீரென
மந்திரர்க்கறைந்தனன்மன்னர்மன்னனே. 43

ஆயிடைநிகழ்வெலாமறிந்துநின்றவோர்
சேயிழைபொன்னரிச்சிலம்பரற்றிட
நோயிடையுறப்பதநொந்துபுண்பட
மாயிருஞாலத்தின்வல்லையோடினள். 44

ஓடினள்கூடினளொல்லைவிண்படர்ந்
தாடுசஞ்சலையமுதம்பொதிந்தபொற்
கோடிரண்டேந்திநைந்தென்னக்கொம்மையால்
வாடுமென்மருங்குலாள்கன்னிமாடமே. 45

தன்னைவந்தடைந்தவடன்னைநோக்குறீஇ
யென்னைகொலென்னைகொலின்றுகண்டவை
மன்னொருவினைகொலோமறுவிசேடமோ
மின்னிகர்நன்னுதால்விரைவிற்கூறென்றாள். 46

மாறனற்றவத்தெழுமௌவன்முத்தினைச்
சீறெயிற்றுண்முனத்தெரிவைதாழ்ந்தெழுந்
தாறிமெய்துகிறிருத்தங்கைவாய்புதைத்
தூறியகளிப்பினோடொல்கிச்சொல்லுவாள். 47

எங்கடம்முயிரனாயிற்றையானொரு
மங்கலமொழிகொடுவந்துளேனென
வங்கதற்குவப்புறுதகுதெற்றோதெனப்
பொங்கியகளிப்பறப்புகலுவாளரோ. 48

நின்னொருமணவினைநினைந்துநீண்டவேற்
றென்னவன்பற்பலதேயமன்னருக்
கென்மகட்சுயம்வரமேழுநாளெனப்
பன்னியதிருமுகப்பரப்புநோக்கினேன். 49

என்றலுங்கைத்திடுஞ்சிந்தையேந்திழை
மன்றலங்குழலொருமாதைநோக்கியே
நின்றனிச்சிறுமியினினைவைத்தேர்கலா
தின்றிவைதொடங்கிற்பின்னிழுக்கென்றெந்தைபால். 50

உரையெனவவளையோட்டவோடியே
புரைதவிர்மன்கழல்வணங்கிப்பொத்திவாய்
நிரைவளைமொழிந்தெலாமவணிகழ்த்தமன்
கரையறுபெருந்துயர்க்கடலின்மூழ்கினான். 51

தேற்றியமந்திரர்செல்விசிந்தனை
மாற்றருவனப்பவோர்மஞ்சன்மேலதோ
வேற்றியல்போகொலோவிளித்துத்தேறுதற்
பாற்றெனப்பண்புறப்பன்னினாரரோ. 52

ஒண்டொடியிவணுறவொல்லைசெய்கென
மண்டொளிர்நிணங்கொள்வேன்மன்னன்கூறவத்
துண்டவெண்பிறைநுதற்றோகைபோயவட்
கண்டடிபணிந்ததுகழறினாளரோ. 53

திருத்தகுமயிலியற்சேடிகூறமு
னருத்தியுற்றிருந்தமினணங்கனார்தொழ
வரைத்தனச்சந்தனவாடைமுன்னர்போ
யுரைத்திடவேத்தவைக்கொல்லையேகினாள். 54

[இதுமுதல் 4-கவிகள், சித்திராங்கதை பாண்டியன்சபைக்கு வந்தமர்தல்.]

வேறு.

மஞ்சருளநைந்திடமயிற்குலமொதுங்கத்
தஞ்சமெனவேளுபயதாடொழுதுசார
விஞ்சுமணியாரமொளிவீசமுலைவிம்மக்
கஞ்சமலர்விட்டுவருமாதுவமைகாண. 55

மண்டுமுகிறண்டமதிவாடரளந்துப்பின்
கண்டமொளிர்சாணைகுமிழ்கத்திரிகைபூகம்
விண்டிசைகொள்யாழ்வனசம்வெற்பிவையெடுத்துக்
கொண்டொருமின்வந்ததெனவந்தனளக்கோதை. 56

வந்துமுன்வணங்கிமன்மலர்ப்பதமடந்தை
யந்தரமுமுட்கவெதிர்நிற்பவயனின்றோர்
தந்தனர்மணித்தவிசுதன்னைமலர்தங்கு
மிந்திரையுநாணவதினேயினிதிருந்தாள். 57

காமன்மனையென்னவரிகாதன்மனையென்னப்
பூமன்மனையென்னமகபூபன்மனையென்ன
நாமவடிவேனிருபர்நாணவணைமீதின்
ஏமுறவிருந்தமினெழில்வதனநோக்கி. 58

ஏதிறவம்நாள்பலவிழைத்தயருமெற்குப்
பாதிமதிசூடியொருபங்கிலுமைகொண்ட
வாதிதரவந்தசுதையேயிதறிகென்னுத்
தீதகல்பல்கேள்வியுணர்தென்னனிவைசொல்வான். 59

[இதுமுதல் 25-கவிகள்,பாண்டியன் சித்திராங்கதை சம்வாதம்.]

முந்துமுறைமைக்கியலமுதறிஞரோடும்
மந்திரமுயன்றுனொருமன்றன்முடிவெய்தத்
தந்திடுவினைக்கொரிடையூறுதரலென்னே
சிந்தையினுனித்தறைதியென்றுமனன்செப்ப. 60

வேறு.

வானஞ்சுறுசப்புயர்வாவியினூர்
மீனஞ்சுவிழிச்சுடர்மேருகிரி
தானஞ்சுநகிற்றளதாமரைவாழ்
மானஞ்சுநலத்துமெய்மாதனறவாள். 61

நாள்கொண்டுகைபற்றியநாதர்தமை
யாள்கொண்டிடவஞ்சிநடுங்கிநிதந்
தாள்கொண்டுகைநின்றிடுதையலர்போல்
வாள்கொண்டகையீதுவணங்குமதோ. 62

வாளப்புவில்கொண்டெதிர்மன்னர்குழா
மாளச்செருவேறிமடித்திலனோ
நீளக்கடல்சுற்றுநிலந்தனையான்
ஆளத்தனியாண்மையமைந்திலனோ. 63

தொடுமைக்கடல்சூழ்புவியாவுமெனக்
கடிமைப்படவாணையமைப்பதலாற்
குடிமக்களின்யாரொருகோமகனுக்
கடிமைப்படவைப்பதுமக்கழகோ. 64

வின்னேருமிழும்நுதிவேலவனீ
யென்னேயிகுதெண்ணினையென்னையலான்
மின்னேநிகர்மோலிமிலைந்திடவே
பின்னேபுரியாரெவர்பேசுதியால். 65

காதோடியவேனிகர்கண்ணவளிம்
மீதோடியவாணிமிழற்றவிரைப்
போதோடியமாலைபுயந்தவழுங்
கோதோடியபூபதிகூறுவனால். 66

வாழ்வுக்கொருநற்றுணையாமனைதைத்
தாழ்வுற்றுலையச்செய்வரோதகையோர்
கீழ்மக்கள்செய்தேமிகுகேடுறுவார்
வீழ்சட்பதபுட்பமிலைந்தகுழால். 67

மாண்புற்றிடுமன்னரைவென்றிடுநல்
லேண்பெற்றிடுமெய்வலியெய்திடினும்
நாண்மொய்த்தமனத்திருநாரியருக்
காண்மைப்பதநல்லுரையாகுமதோ. 68

மண்ணாள்குநர்மந்திரர்தந்திரரோ
டெண்ணீர்மையர்யாருமெதிர்ந்துதொழ
நண்ணுவரியாதனநண்ணியொரு
பெண்ணேறியிருப்பதுபீடலவே. 69

என்றேயரசோதவிசைக்குமினள்
கன்றேறியகையதடாதகையாள்
குன்றேநிகர்மும்முலைகொண்டணைமே
லன்றேறியிருந்ததறிந்திலையோ. 70

விண்ணிற்கிறையும்பணிவேந்தனருள்
பெண்ணிற்குததிப்பெருநீர்சுலவும்
மண்ணிற்பொலிமன்னர்வணங்குவரே
லெண்ணிற்பெரிதன்றிதொரேழ்மையவே. 71

எண்ணின்றிடுவானமுமிப்புவியுந்
துண்ணென்றிடவாளிதொடுத்திடுமேன்
மண்ணின்றவர்யாருமதிப்பதலாற்
பெண்ணென்றலியென்றெவர்பேசுவரே. 72

சங்கக்கடல்சூழ்தருதாரணியைத்
தங்கைக்கொளவன்னியர்மற்றவர்தாள்
பங்கப்படநின்றுபணிந்திடயான்
றிங்கட்குலம்வந்ததுதென்னவனே. 73

ஒருவன்பெறவிப்புவியோகையுறத்
தரவன்றெளிர்தண்ணகைநின்வயினே
வருமைந்தனளித்திடமன்றல்வினைப்
புரிவென்றனனன்றறிபூழியர்கோன். 74

கொக்கின்றலைவெண்ணெய்குவித்துருகி
யக்கின்றலைவீழ்தருமவ்வமையஞ்
சிக்கென்றதுகைக்கவரத்தெரிதற்
கொக்கும்மிதுவும்மொருவாறெனமின். 75

என்மாமகனெற்குயர்வாகுவனே
னின்மாமகணிற்குயர்வேயலவோ
பின்மாமகனேபெறுவேனெனவே
நின்மாமனமெண்ணலெனிச்சயமே. 76

வீரங்குணமேதகுகல்விநிறை
யீரம்பொறையுண்மையிசைப்பதலால்
வாரங்குயமாதரின்மைந்தருயா
வாரென்றெவரேனும்வழுத்துவரோ. 77

பஞ்சுண்பதமின்னிவைபன்னமிக
நெஞ்சங்கவல்வுற்றணிநிம்பமுளோன்
விஞ்சும்புவிவிண்பிலம்வின்மதனன்
அஞ்சம்பிணைவெல்லுநராருளரோ. 78

நீகூறுதடாதகைநேரிழையும்
மாகூர்மலர்வாளிமறுப்பரிதாய்
நாகூர்நதிசெஞ்சடைநண்ணுபிரான்
வாகூர்தரமன்னியவாறறிவாய். 79

இந்தப்புவிமன்னவரெள்ளல்செயச்
சிந்தைத்துயர்வந்ததுபின்றெரிவாய்
தந்தைக்குமிகழ்ச்சிதரத்தகுமால்
நந்தச்செயின்மன்றலைநற்சுதையே. 80

விதனம்முயர்மன்னன்விளம்பவெரிப்
பதமம்மியபஞ்செனவம்புயநற்
சதனம்பெறுநுண்டுளிசால்வதலால்
மதனம்பெணையென்செயுமன்னவனே. 81

அளபொன்றுயரத்திபுனைந்துவிடங்
களமொன்றிறைவந்திழைகாரணமா
வுளமொன்றுபுசெய்தனவொப்பறுமத்
தளவொன்றெயிறுற்றதடாதகைமான். 82

குவிமென்முலையின்னகுயிற்றிடவே
புவிமன்னவர்கொள்கைகெடப்புதிதே
நவில்கின்றனைநன்கலநிற்கிதுவென்
றவிர்பொன்கழலச்சனறைந்தனனே. 83

நானேமுழுதாளவிந்நானிலநீ
தானேதருவாய்தருகிற்கிலையேல்
வானேபுகுவேனினிவாழ்கிலனுற்
கோனேயெனவேதிகைகொண்டனளே. 84

(பாண்டியன் விசனமுறல்.)

(வேறு.)

ஏதியேந்தியகையுடனேந்திழையிருப்பப்
பிதியேந்தியமனத்துமன்பெரிதுழன்றணையின்
மீதினேந்தியகையொடுமுயிர்ப்பறவிழவப்
போதினேந்தியதேர்ச்சியர்தேற்றினர்புகல்வார். 85

(மந்திரிகள் தேற்றுதல்.)

முன்னரோதியகணிதநூன்முறைபிறழ்ந்ததுவோ
பின்னரன்னவைபிறழ்கிலாப்பெற்றிபெற்றிடுமோ
மின்னுசெஞ்சடைவிமலனேபுணருமொள்வேலோய்
இன்னபோழ்திவட்கீகுதலிளவரசியல்பே. 86

[சித்திராங்கதைக் கிளவர சளித்தல்.]

என்றசொற்புணைகொண்டுதாழிடர்க்கடனீந்தி
நின்றுமாறனிலைதாழ்வலியாமெனநினைந்தே
யின்றதந்தனமிளவரசெனவிசைத்தொருவா
டன்றடக்கரத்தெடுத்தவடொடிக்கையிற்றந்தான். 87

தன்னகைப்படுவாளொருதாதிகைதந்தே
மன்னளித்தகூர்வாளெறிமுறைமையின்வாங்கிப்
பின்னரன்னவன்பதம்பணிந்தரசவைபெயர்ந்து
கன்னிவந்தனளடைந்தனள்கன்னிகாமாடம். 88

சிங்கவேறியாஞ்செறிமதக்கலுழிபாய்தருமா
தங்கம்யாமெனுந்தரணிபர்செருக்கெலாந்தகர்த்தே
யெங்கண்மாதவச்சவுடநாயகியிணையெனவே
செங்கையேதிகொண்டமர்ந்தனள்சித்திராங்கதையே. 89

இன்னவாறுசின்னாளவளினிதுவீற்றிருப்பத்
தென்னன்மாதவத்தூதினாற்செறிமலர்ச்சினைக்கா
மன்னளித்தமன்வந்தவன்மலர்ப்பொழிலமர்ந்தான்
கன்னல்வேட்சணிமுடிபுனைவந்தவோர்காலம். 90

[சித்திராங்கதைச்சருக்க முற்றும்.] ஆக கவி (391.)



## (10 - வது பொழிலெதிர்சருக்கம்.)



இச்சருக்கத்தால் வேனிற்காலவருணனையும், சித்திராங்கதையை, அலங்கரித்தல் வருணனையும், அம்மாது தனது பரிவாரத்துடன் தமது நந்தவனத்திற்குச் சென்றடையும் காட்சியுங் கூறப்படுகின்றன.

[இதுமுதல் 6 கவிகள், வேனிற்காலவருணனை.]

கார்ப்பருவத்தகமகிழுங்கேகயங்கோபம்முதல
கலங்கிவாட
வார்ப்புறவண்டொடுபூவையன்றில்சுகங்குயின்முதல
வணங்கனோங்குந்

தேர்ப்பொலியச்சண்பகங்கேதகைநாகமகிழ்பிறவுஞ்
சிறந்துபூப்ப
நீர்ப்பொலிபூமிகவுகமாங்கனிமலியவிளவேனி
னிகழ்ந்தமன்னே. 1

பதிவரவைக்குறிப்பினுணர்பருவமினுள்பழமைகழித்
தொளிர்பட்டாடை
புதிதுடுத்தியெதிர்நோக்கல்போற்சூதத்தளிர்கெழச்சண்
பகங்கள்பூப்பக்
கதுமெனமற்றவன்வரவக்காரிகைதாழ்ந்திதம்புகறற்
கடுப்பத்தென்காற்
றெதிரமலர்செறிதரத்தாழிளஞ்சினைமேற்கோகிலங்க
ளினிதுகூவும். 2

பொங்காழிப்பூவலயப்பூமான்கடமைமதியாப்
புதுமைவீரச்
சிங்காரச்சேயிழைதன்செருக்கடக்கச்சிலைமதனண்
டிரித்தன்மான
வுங்காரச்சுரும்பினங்டென்றலிற்சுழல்வுற்றெழுங்கோடி
யிசைப்பக்கேட்டுச்
சிங்காமனிறைமலர்தேன்பரிசளிக்குந்தலையசைத்துச்
செழுங்காவெல்லாம். 3

பாகமொருபெண்குடிகொள்பரமனைவென்றிடுவானு
பாயநாடி
மோகனமந்திரங்கொடுதூப்பொடியிதெனமுராலளிபூத்
துகடூவிச்செல்
வேகமுறுங்டென்றலந்தேர்விடுத்துவிழித்தீயையழி
வெந்தீயிதே
யாகுமெனப்பருவமதைத்கைக்கொடிகல்செயவனங்க
னடைந்தாற்போலும். 4

ஆற்றிடைச்சாகரத்தினிடையவனியைச்சீண்டிறைத்திடுமூற்
றிடையேயல்லால்
வேற்றிடநீரற்றுலறவீசுசிவிறியிற்சுளகில்
விடுவெம்மூச்சிற்

சாற்றுபறவைச்சிறகிற்கயச்செவியிற்சாமரத்திற்
றங்கிற்றல்லாற்
காற்றியக்கமெங்குமறச்சுடுங்கிரணந்தணைச்செலுத்திக்
கதிரோன்காண. 5
வாய்ப்பறையற்றொடுங்கிமிகவறுமைபெறுமொருவனைப்போன்
மறையத்தேரை
போய்ப்பதுங்கப்பாதாளத்திரவலர்காணுலோபர்தனிற்
பொன்மெய்நள்ளி
தீய்த்தமனைப்பொருளிதெனச்செழுமலர்மீனொடுகுளனுந்
தீய்ந்துமாயப்
பேய்த்தனித்தேரெழவெம்மைபிறங்கினநீர்நிழனசையைப்
பெறப்பூவெங்கும். 6

[சித்திராங்கதை நந்தவனத்திற்சேதுவேமெனத் தாதியர்க்குக் கூறுதல்.]

வேறு.

கண்கவர்ந்திடுமெழிறிகழ்குவிமுலைக்கன்னி
பண்கவர்ந்திடுமிலவிதழ்ப்பவளவாய்திறந்து
விண்கவர்ந்திடுந்தருவடர்பொழிலைமேவுதுமென்
றெண்கவர்ந்திடுஞ்சேடியர்க்கிசைத்தனளோர்நாள். 7

[இதுமுதல் 14-கவிகள், சித்திராங்கதையை அலங்கரித்தல்.]

சொற்றவாணியிறடையுமுன்றொழுதுகைநாட்டி
கற்றையங்குழல்கலைத்தருநானநெய்காட்டி
நற்றவத்தெழுநங்கையைநறும்புனலாட்டி
யுற்றவீர்ங்குழல்புலரநன்ககிற்புகையூட்டி. 8
சுட்டியின்னகைமருங்குலிங்குண்டெனச்சொலவே
யெட்டுமாதிரமோரிழைக்கிடலவெனவில்
விட்டிலங்கெழினவமணிவிளிம்புசூழ்மென்பொற்
பட்டுடுத்தினரொளியொருகாவதம்பரவ. 9
அரியைத்திங்களைத்தம்வயினடக்கியேவென்ற
யிருளினங்களீ இவளையதிர்த்தேற்றதும்பையைப்போல்
கரியகூந்தலிற்கதிரணிகவினக்கைசெய்தே
முரலளித்தொடைசூடினர்நுதலணிமுடித்தார். 10
பிஞ்சுவெண்மதிக்குட்டிகழ்கறையிணிற்பிறங்க
வஞ்சிநன்னுதன்மிசைத்திலமன்னுபுசெறித்தார்
மஞ்சராவியைமறலிகைக்கோலினைவாட்டி
விஞ்சுவேல்விழிக்கஞ்சனமிகைபடத்தீட்டி. 11

எங்கணட்புநின்னிடத்திலகதிரவற்கென்னப்
பங்கயந்தனைச்சண்பகநாளிகம்பழிப்பத்
துங்கமாமணித்தளுக்குநாசிகைப்புறந்தூக்கிப்
பொங்கிவில்கிளர்தோடிரண்டிருசெவிபுனைந்தார். 12

வெட்டிவைத்தசெஞ்சிறுகரும்பெனவிளங்கதரத்
துட்டுலங்குபற்குவமைதானோக்குவானோடிக்
கிட்டநாணிமேவிதழின்மேற்கிடந்துகீழ்வாரா
தெட்டிநோக்கல்போலிருப்பமூக்கணிமுத்தொன்றிட்டார். 13

கேசவன்றனிச்சங்கொளிர்கிம்புரியெனவில்
வீசுமாமணியட்டிகைமிடலுறவீக்கி
வாசவன்றனுமேருமுன்வயங்குவமானப்
பூசணம்பலமுலைமுகடொளிர்தரப்புனைந்தார். 14

உரைத்தவாண்மையர்மருமம்பாய்ந்துழக்கலிற்குருதி
வரத்தனித்துநின்றொளிரிபத்தெயிற்றினைமான
விரத்திகொண்முனிவரும்விழைவுறவிம்முநகிலத்
தரைத்தகுங்குமச்சந்தனச்சேற்றினையணிந்தார். 15

துட்டவல்விலங்கினையொருதூயமெல்வலையி
னுட்டுவன்றிடப்பிணித்தல்போற்றனக்குயர்ந்தெனவிண்
முட்டுமேருவின்முடிதகர்த்துயர்ந்தவெம்முலையைக்
கட்டினாரிதுவம்பெனப்புவியெலாங்கழற 16

யாழ்திறம்பொருந்தினர்க்களிவிருதெனவியம்பச்
சூழ்மணிக்கடகந்தொடிபலகரந்தொடுத்தார்
கேழ்கிளர்ந்தபைங்கிளியிவர்மகரகேதனவேள்
வாழ்வுதங்குபுதொய்யலுநகின்மிசைவரைந்தே 17

தனைமருத்தினுன்முறியச்செய்பணிக்கிடந்தருவான்
றனைமுறிப்பல்யானெனவெழுந்தமணியவரையே
யனையமாமுலைச்சும்மையினறநுடங்கிடைக்குப்
புனையுமேகலைவீக்கினர்பூண்பிடித்தனபோல். 18

பட்டநித்திரைபட்டிகைப்போர்வையுட்பறம்பாந்
துட்டவாரணம்விழித்திடினும்முயிர்தொலைக்கு
மெட்டிநோக்கலற்றேகுமினடவரெனவே
விட்டிசைப்பபோற்புலம்புபொற்சிலம்புகால்வேய்ந்தார். 19

அடிமைநிற்கெனையாளெனவலத்தகமடியிற்
படியநின்றெனப்படுத்திமின்னெழிலெலாம்பார்த்தே
கடிதினேர்வகண்ணேறெனவயினிநீர்காட்டிப்
படியினையவிசிதறினர்தெய்வமும்பராவி. 20

மாற்றுயர்ந்தசெங்கொல்வயின்வேகடம்வகுத்த
வேற்றமாமணிகுயிற்றியவிப்பிவெண்மணிக
ணாற்றிநின்றவோர்சிவிகையைநங்கைமுன்கொணர்ந்தே
போற்றிசெய்தெழுந்தருள்கெனத்தோழியர்புகன்றார். 21

[இதுமுதல் 10-கவிகள், நந்தவனத்திற் சேறுதற்சிறப்பு.]

வேறு.

ஏறினள்சிவிகைமீதினிந்திரன்மனைவிநாணக்
கூறியசின்னம்பேரிகுடமுழாப்பம்பைதாரை
தேறுவெண்பணிலங்காளந்திண்டிதுந்துமிதடாரி
வீறுசல்லரிநிசாளம்விரிந்தபல்லியங்களார்ப்ப. 22

நின்னுதற்கெதிர்யானல்லேனீமுனிந்தலக்கண்செய்யே
லென்னவந்தடுத்தடுத்தாங்கிறைஞ்சிளம்பிறையேமானக்
கன்னிமுன்வெண்கேழோங்குங்கவரிகையிரட்டிமாதர்
மின்னொளிதவழ்பைம்பொன்செய்மேதகுமடைப்பைதாங்க. 23

குரும்பைமுப்புடைகொண்டேங்கக்கவற்றெழிற்குவவுக்கொங்கை
யரும்பிளமுறுவனல்லாரவிர்மணிப்படிக்கமேந்தச்
சுரும்பிமிர்மலர்பெய்கூந்தற்றோகையர்கிளியாழ்பூவை
விரும்புகந்துகங்கழங்குமேந்தினர்வேறுமாதோ. 24

சத்திரந்தனைநிழற்றிச்சமரவேற்கண்ணார்நிற்ப
வத்திரந்தனுவாள்சூலமயின்மழுக்குந்தமீட்டி
சத்திதோமரஞ்சலாகைதண்டொடுபிண்டிபாலம்
நித்திலநகையாரேந்திநின்றனருடன்செல்கிற்பார். 25

பனிமொழிகுமுதச்செவ்வாய்பங்கயமுகவேணுக்குக்
கனியிதழ்த்தொடிக்கைநல்லார்கழைநிகர்தோட்பரித்து
நனியொளிர்யானமோங்கநடந்தனர்விண்ணினின்றே
மனனமந்திரம்பிழைத்திம்மண்ணுலகிழிந்தமான. 26

மரைமலர்விடுத்துமானமடுத்துப்பொன்வருதன்மான
வரிவிழிக்கொடிமருங்குன்மங்கைநான்மாடக்கூடற்
புரிதுதித்திருகைகூப்பப்பூவையர்பலாண்டுகூற
வருமெழில்கண்டவானோர்மதிமயக்குற்றுநின்றார். 27

இன்னகைகாமவீக்கத்தெரியவித்திடுவான்வேண்டிப்
பன்னகப்பாயன்மேவிப்படுத்தனன்மால்பாற்பவ்வங்
கன்னிபங்காளனுந்தேகங்கனகயைச்சடையினேற்றான்
அன்னவாகனனுங்கஞ்சத்தாழ்ந்தனனாற்றானாகி. 28

கருகினனெண்ணில்கண்ணுங்காவிறைகண்ணீராறாப்
பெருகினனீபத்தொங்கற்பெறுபுயன்பெட்பின்வீக்கத்
தொருமருப்பிருதாண்முக்கணுயர்ந்தநால்வாயைங்கைமா
வுருவினனின்றானம்பினுறுமறுகெங்குமம்மா. 29

சங்கரனொருகட்டீயாற்சாமதனென்பாரெல்லாம்
இங்கிவள்காமத்தீயாலெரிந்தமையறியார்போலும்
தங்கியவமுதந்தன்னாற்றம்முயிர்பிழைத்ததல்லாற்
பொங்கியவிபுதர்யாரும்பிழைத்திடப்போக்கொன்றுண்டோ. 30

சதுரராகியவானாட்டோர்தஞ்செயலினையதாயின்
மதுரைவாழிளைஞர்மாலான்மாழ்கினரென்பவம்பே
மதியழிந்தோவியம்போன்மாதரும்வியந்துநோக்க
விதுமுகவனிதைமென்பூவியன்பொழின்மேவினாளால். 31

துன்னுதம்பண்ணையாவுந்துறந்துயிர்நிகர்க்குமன்ன
மென்னடைமகளிர்சில்லோர்விலகறுநிழலிற்போதப்
பொன்னிலகின்றுபூவிற்போந்தபாதவமோர்கோடி
மன்னுபூம்பொழிற்கட்சென்றாண்மயிலினமொயில்கண்டஞ்ச. 32

வளர்பிறைகறைதிரிந்தமானச்சேலேகந்தீட்டுங்
கிளரொளிநுதலார்பூத்தகிஞ்சுகமுருக்குந்தேறற்
றுளியிற்றம்வாய்திறந்தத்தூயதண்டலைச்சீர்காட்டி
யளிமுரன்றுழலேம்பாற்பெண்ணரசிக்கிதறைகுவாரால். 33

[பொழிலேதிர்சருக்க முற்றும்.] ஆக கவி (424.)

---

## [11 - வது பொழிற்காட்சிச்சருக்கம்.]

இச்சருக்கத்தால், நந்தனவனவிசேஷவருணனையும், அதனைத்தோழியர் சித்திராங்சதைக்குச் சுட்டிக்கூறுதலும், பின் அவ்வனத்துள்ள பளிக்கறையிற்றங்கி வீணகானஞ்செய்திருத்தலுங் கூறப்படுகின்றன.

[இதுமுதல் 13-கவிகள், நந்தனவனக்காட்சிவருணனை.]

---

அழிந்தசிந்தையோடொதுங்கியாடனீங்கியரும்பிரசம்
வழிந்தபொதும்பர்நின்றுனெழிற்சாயனேக்குமயிலினங்கள்
மொழிந்தமொழிகளவிந்துன்சுதைமொழியேநோக்கிமுகம்வாடி
யெழுந்தோடாமற்கவன்றுசினையிருந்தகிளிபாரேந்திழையே. 1

கடிந்துகரும்பைபாலையிட்டுக்கசக்கச்செயும்பொற்கவின்றோளா
யொடிந்துமடியுநிலைநின்றுளொருநந்தோழனெனவோடி
யடைந்துநினதுநகிற்கேண்மையாகுங்கூவிளத்தருகிற்
படிந்துகுறையைப்பகர்வனபோற்படருமிடைநேர்பசுங்கொடிகள். 2

வள்ளைகுமிழ்க்குநீர்பாய்ச்சிவளர்க்குஞ்சுனைநேர்வரிவிழியாய்
பிள்ளைதழுவிமடிநிற்பப்பிணங்குசினையிற்பாய்ந்துமந்தி
தள்ளுபலவின்கனிவீழத்தகர்ந்துதென்னங்குருப்பைவிழு [போல்
முள்ளம்பனித்துன்மூலைப்பகையையொழிக்கவொடுங்கிவணங்குதல்

ஆகம்வெளுத்துநடுக்குறுமாமிரமென்றளிருங்கயிலையுநின்
றேகந்தனங்கண்டேகுடபாற்றிங்கட்கொழுந்திற்றிகணுதலாய்
பூகமெலிந்துன்கந்தரத்தாற்புகல்புக்கிடவான்புயலிடையம்
மேகநினதுகுழற்கஞ்சிமெல்லநகர்ந்துபோவனபார். 4

ஆடுங்கணிகைக்காடகக்காசளிப்பார்போன்றமயினடிப்ப
நீடுஞ்சினையார்க்குவதமுகைநெகிழ்ந்துசொரிவமுத்தாரம்
பாடுந்தெரிவைக்களிப்பார்போற்பமாமுராலும்பங்கயத்தி
னூடுஞ்சூழ்கம்புயிர்க்குமுத்தம்நஞ்சுபிலிற்றுங்கண்வேலோய். 5

தெள்ளாரமுதத்தீங்குரல்கடேய்ந்துகுயிற்றேமாஞ்சினையி
னுள்ளார்ந்துருகிநின்குரனேக்குற்றேதிகைத்துவதிதால்பார்
கள்ளார்ந்தொழுகியறநீண்டுகறுகிநெறிந்துகடைகுழன்று
புள்ளார்ப்பெடுக்குநறுந்தெரியற்புனைந்துகமழும்புரிகுழலே. 6

புடைத்துத்திரண்டுன்முலைக்குவமைபொருந்தாதாகிப்பொருமியகம்
வெடித்துமுகத்தைநேர்வலெனவிரிந்துநோக்கியொவ்வாதாற்
றுடித்துக்கதறிக்கண்கலுழிசொரிவதேய்ப்பத்தூவனசம்
புடைத்துச்சிறகாற்சுரும்பரற்றப்பொங்குநறவம்பார்பூவாய். 7

புவிமுற்றவுமோராழிசெலப்புரக்குநுமதுபூத்தாளச்
சவிகொள்குடைநேராமலகத்தாற்றைநினதுகவாற்கஞ்சிக்
கவிழ்மென்முகத்தவாக்கண்ணீர்கால்வதேய்ப்பத்தேங்கசியுங்
குவியின்கதலிக்குலையினையும்பாராய்தென்னன்குலக்கொடியே. 8

வீடுபெறநின்றவருமிகவிழையுமெழின்மெய்மின்னேநீ
பாடநகைப்புற்றிடநீழற்படுப்பப்பதங்கொண்டுதைப்பவிழி
நாடமுறையேகுருகுமுல்லைநறுஞ்சண்பகங்காகோளிமராப்
பீடுபெறநீள்சினைகடளிர்பெருகிப்பூத்துப்பிறங்குவபார். 9

மங்குறவழ்ந்துமலர்ந்தபுன்னைமரத்தின்சினைக்கணுலிருல்
திங்களினப்பம்மொடுசுகனந்திகழ்தற்சிவணுஞ்சிவனிலிங்கத்
தங்கம்பொடிகொண்டியோகமார்ந்ததடுக்குங்குவிசெந்தாழைமலர்
பொங்கிப்பரந்துநிமிர்ந்துச்சைப்பொதுக்குந்தனப்பொற்கொடிபாராய்.

சூற்கொண்டெழுந்தகறுமேகந்தோற்கக்கறுத்தசுரிகுழால்
காற்கண்டொதுங்கிநின்றனடைகடைக்கணோக்கியனங்கழிவ
வேற்கணெழில்மெல்லெனக்கண்டுவெருவிமுகிழ்த்துமென்குவளை
தோற்கப்படுநாமெனநறவக்கண்ணீர்சொரிந்துசோம்புவபார். 11

வில்லைவருத்திவாளுறையைவெறுக்கும்புருவமின்னேநின்
பல்லைநிகர்க்குமொருபூவைப்பயப்பானோற்றுப்பற்பலபூ
முல்லைபயந்துமவையாவுமுரணநோக்கிமுகம்வாடி
யல்லலுழந்துபுவியுதிர்த்தீண்டறவேமெலிந்துநிற்பனபார். 12

துள்ளியெழும்பண்வீணையுடன்றுலங்குமொருநாமகட்சிவண
வெள்ளைக்கமலத்துறைவிகங்கமுன்னர்மிஞிறுமிழற்றுவது
மெள்ளற்கிலநற்பூநறவமெடுத்துக்கரும்புளருந்தாமற்
பிள்ளைக்கிரங்கியூட்டுவதும்பாராய்வாட்கைப்பெண்ணரசே. 13

[இதுமுதல் 2-கவிகள், பளிங்குமாமண்டபஞ்சேர்தல்.]

இன்னவனத்தினெழினலமற்றியாவுமிறைவிக்கெதிர்கூறி
மன்னுமலருங்கனிகளுந்தம்மனதிற்குவப்பபலகொண்டே
மின்னலினங்கண்மகளிருருமேவிப்படியினடப்பனபோ
லன்னமிடையமயிலுடையவனங்கனடையநடந்தனரால். 14

சென்றாரடைந்தாரெரிநுதற்கட்செந்தேவுகக்குமொருகோவிற்
குன்றேயனையவனப்பமைந்தகும்பமுனிசாந்தெறிந்துவருந்
தென்றீத்தேரோன்முடிசூட்டத்திசைமாமுகவன்றெரிந்தமைத்த
தென்றேவகுப்பப்பன்மணிசூழ்ந்திலங்கும்படிகமண்டபத்தை. 15

[இதுமுதல் 2-கவிகள், தோழியர் அரசிக்குபசரித்தல்.]

நந்தவனத்தினலநோக்கிநடந்தாயிழைமெய்யலசினளென்
றுந்துங்கலிங்கக்கடிதடத்தாரொருபூவணையினுயர்த்திருறுஞ்
சந்தம்புகட்டுங்கலவையவடனுவிற்றியிர்ந்துபனிநீர்கா
லிந்துநிகர்க்குஞ்சிவிறியெடுத்திரட்டிநின்றாரிருமருங்கும். 16

எடுத்தாளொருமின்னொருவீணையிருகுன்றனையபயோதரமீ
மடுத்தாண்முறுக்கிமாடகத்தைவல்லேயிசைத்துப்பேர்முதங்
கொடுத்தாள்கேட்டபொன்றிதலேக்கொம்மைக்குமரிகுளிர்ந்துருகித்
துடித்தாளிடக்கண்ணுடனிடத்தோடோன்றுவிரகமுளைதோன்ற. 17

[இதுமுதல் 4-கவிகள், சித்திராங்கதை வீணகானஞ் செய்தல்.]

இசையிற்காதல்கொடுகரத்தினேந்துமேதிநீத்தெடுத்தோர்
வசையற்றுயர்யாணரம்பெறிந்துமந்தாரம்மத்திமைதாரத்
திசைவிற்சுருதிமுறைபிறழாதிசையெழீஇயோவியத்திலகிப்
பசையற்றுலருந்தருப்பயனைப்பயக்கும்படிப்பாண்டியன்பாவை. 18

விழியையசைத்தலிமைபொத்தன்மிடறுவீங்கற்சிரநடுக்க
லழுகைமுகங்காட்டுதலுடலமாடல்புருவமேறல்குக்கி
குழியவாங்கல்கோரமுறல்குலவுதசனக்குலங்காட்டல்
கழியவாயங்காத்தலின்னகாயத்தொழிற்குற்றங்கழிந்து. 19

சத்தசுரம்பேதித்தலறத்தானந்தொறும்பல்கதியின்விரற்
றத்திவளைவெண்கலமுழவின்றனிதங்கெழுநல்யாழினிசைக்
கொத்துமிடற்றிநெலிதூங்கியுழையேதாரமிளிவிளரி
துத்தங்குரல்கைக்கிளையிலகத்தோமிலமுதஞ்சொரிகுவபோல். 20

கல்லுமுருகமரமுருகக்ககனவாணர்கருத்துருக
வல்லமுனிவர்நிலைதிரியமதனன்சிரக்கம்பனம்புரிய [வெண்
வில்லையிதற்கொப்பெனவிசையோரிசைப்பவிசையேழிசைத்தனள்
முல்லைமுருந்துநித்திலத்தைமுனிந்தநகைகயாளவ்வேலை. 21

பொழிற்காட்சிச்சருக்க முற்றும். (ஆக கவிகள் 445.)

---

## கஉ - ஆவது சம்வாதச்சருக்கம்.

[இச்சருக்கத்தால், அருச்சுனன் சித்திராங்கதையைக் கண்டு மோகித்தலும், இருவரும் நியாயவாதம் புரிதலும், பின் அருச்சுனன் சுயரூபத்தைக்கண்டு அம்மாது மோகித்தலும், காந்தர்வ விவாகஞ்செய்தலும் பிறவும் கூறப்படுகின்றன.]

[இதுமுதல் 2 - கவிகள் அருச்சுனன் தவவேடச்சிறப்பு.]

சுந்தரநிறைமெய்ச்சசிமணங்கமழுந்
துணைமுலைவருடெழிற்றோளா
னந்தனன்சிறகாற்றவழுமப்புதிய
நறுமணக்காவெழினடி
வந்தனன்றனியேவான்செல்பொற்சிமய
வரைதரும்பசுங்கிளிமகிழுஞ்
சந்திரமவுலியிவனெனக்கூறத்
தகுமொருவேடமேதாங்கி. 1

காதினிற்கனலக்குண்டலமிடையிற்
காவியம்பரங்கவின்றரமெய்
மீதின்முப்புரிநூல்விடையவன்விழியன்
மாலிகைமிளிர்தரக்கம்மிற்
சோதிசெய்துறச்சித்தகநிரந்தரமே
தூயவெண்பொடிமிகத்துலங்கத்
தீதில்செங்கவிகைதெண்டுபுத்தகம்பொற்
சிரகங்கைதிகழ்வுறவந்தான். 2

[அருச்சுனன் நந்தவனக்காட்சி நோக்குதல்.]

உள்ளனவெல்லாமுவந்துகூயுதவு
மொருவனைநிகர்ப்பவுண்ணிறைதேன்
றுள்ளிகொள்கனியைத்தென்றல்வந்தலைப்பத்
துவளுதஞ்சினைக்கையாற்கூவிப்
புள்ளினமுவப்பவிருந்தளித்திசைகூர்
பொன்புகர்பொலிசிறைச்சுரும்பர்
கள்ளினிதருந்தப்புதுமலர்விரியுங்
காவெழில்களிப்புறக்கண்டான். 3

காரெதிர்கமுகங்கவரியையிரட்டக்
கருங்குயில்கட்டியங்கூறச்
சீருயர்நடனமாதரினடிப்பச்
சிகாவளந்தென்றறோர்திகழ
நாரியரினத்தினனம்புடைபாவ
நாண்சுருப்புயர்த்துசானகக்கை
மாரணங்கணையோடமர்ந்தவோலக்க
மானுமம்மலர்ப்பொழில்கண்டான். 4

[வீணகானஞ் செவிபுகல்.]

விண்டலத்தொதுங்கக்கண்டுகற்பகக்கா
மேதகுமலர்பலவிளங்கிக்
கொண்டல்கண்படுப்பவண்டினமடுப்பக்
குரக்கினங்கிளைதொறுநடிப்பக்
கண்டுறழ்மொழிசெங்கெண்டையம்விழியங்
கணையர்காமுறுமெழிற்காளை
கண்டனன்புதுமையீதெனவந்தோர்
கானந்தன்செவிபுகக்கண்டான். 5

[மெய்பாவசமுறல்.]

நின்றனன்றிகைத்தங்கொன்றறிகிலனுய்
நினைவையங்நாதமேனிறவி
மன்றலுக்கிசையும்வாவெனவழைக்குந்
தூதெனவருமுயர்கானம்
பொன்றலிலமுதச்சுவையிருசெவிவாய்
புகட்டல்போற்புகவதைக்காண்பான்
சென்றனமனம்புந்தியுமதன்வழியே
சிலிர்த்துமெய்பரவசமாகி. 6

[பளிங்குமண்டபத்தைக் காணல்.]

இருப்பெதிர்கவருங்காந்தமொத்தந்த
வின்னிசையீர்ப்பவிந்திரன்சேய்
விருப்பமுற்றுருகுமனமிகப்பதறி
மேதகுநாதநேர்வழியாய்த்
தருச்செடிகொடிகடகர்த்தொருகணத்திற்
றணுவுமிழ்சரமெனவோடிப்
பொருப்பினுக்குயருஞ்சிகரமண்டபத்தைப்
புந்திமெய்களிப்புறக்கண்டான். 7

[சித்திராங்கதையைக் காணுதல்.]

கண்டவப்படிகமண்டபமதனுட்
கனருசிககனம்விட்டிறங்கிக்
கொண்டபெண்டுருவமெனத்திகழ்மயிலைக்
கொஞ்சுமஞ்சுகத்தினைக்குயிலை
யண்டரும்விரும்புமரியபுத்தமுதை
யழகினநடம்புரியரங்கைக்
கண்டனனினைவற்றுயிர்த்திலன்கடிகை
காமவேளருகுயிர்த்திருப்ப. 8

பெற்றனனுயிர்ப்புக்கழியுடலாவி
பெற்றிடும்பெற்றியிற்பைய
வுற்றனனினைவையத்தகையணங்கி
னுருவெலாமுவந்துநோக்கிடுமுன்
விற்றொழிற்கிவனென்றஞ்சிமெய்காந்து
வேள்விடுவிசிகமெய்வெதுப்ப
மற்றதின்மனநெக்குருகிவெய்துயிர்த்து
மயன்மிகுத்திவையிவைமதிக்கும். 9

[இதுமுதல் 2-கவிகள் ஐயம்.]

கற்பகமிதுவோவசந்தமிம்மனையோ
கண்கவருருவமாமணியோ
வற்புதவிகடமாயைதன்வடிவோ
வழகினந்தொழுமொருகுருவோ
சொற்பொலிசுகமோசுந்தரமயிலோ
சோலைவாய்க்கூவுமோர்குயிலோ
விற்பனமதனனெழுதுசித்திரமோ
மின்னலோமென்மலர்க்கொடியோ. 10

அம்புறழ்நயனவிஞ்சையரணங்கோ
வளகைவேந்தருளுமங்கனையோ
கம்புறழ்களக்கிம்புருடகன்னிகையோ
காந்தருவக்கணங்குழலோ
வம்பமர்குருக்கணுரகமானினியோ
வானவர்தந்தசுந்தரியோ
அம்பரத்தமுதோவடித்ததேன்பாகோ
வாற்றொணுமயல்கொள்வேனுயிரோ. 11

[துணிபு.]

கானிலம்படிந்தகாலனுக்கரசு
　　காட்டுகண்ணிமைப்புறுங்காட்சி
மாநிலமகளென்றுணர்த்துமிப்பொழிற்கண்
　　மகிழ்ந்துமின்னுரொடுவதிதல்
வேனிலம்பருவத்திவளொருகன்னி
　　மின்னெனச்சொல்வமேதகுவாட்
டானிலவிய நுண்ணிடையினுலரசத்
　　தன்மையுந்தருமெனமதியா. 12

கருக்கனத்துருவக்கண்ணன்வேய்ங்குழலுங்
　　கைத்திடக்கலந்தமெல்லிசையோ
வெருக்கொளப்பிறழுவீரவேல்விழியோ
　　விம்மிநின்றிலங்குமென்முலையோ
வுருக்குமாங்கதனைமயக்குமோகினியு
　　மொப்பிலாவிவடன்மெய்யொயிலோ
முருக்கிதழமுதநிறைமதிமுகமோ
　　முந்தியென்னுயிரையுண்டதுவே. 13

[அருச்சுனன் சித்திராங்கதைமுன் வருதல்.]

இன்றிவளிடத்திற்குன்றிவர்ந்தினிய
　　குகையடுத்தியோகமொன்றியற்ற
னன்றிதுயதிகள்வினைமெனநக்கு
　　நாரியர்திலகமுனனுகா
நின்றனளனைநீத்தெழுந்துகண்பரப்பி
　　நின்மலனிவனெனநினைத்துக்
கன்றெலிகறங்கவிருகைகூப்பினளக்
　　காரிகைநாணுளங்களிப்ப. 14

[சித்திராங்கதை தவசிக்கு சோபசாரஞ்செய்தல்.]

ஒருமணித்தவிசினிருத்தினள்விதிபி
　　னெப்பறுங்கடன்முறையுதவி
வருபுனற்சடையோனெனத்திகழடிகள்
　　வந்ததெம்மாதவமென்றே
புரைதபுமுகமன்புகன்றுநீள்வழிபோந்
　　துடற்பொடிகசிவுபோக்குபுசெவ்
வரிபடர்நெடுங்கட்டுடிநுசுப்பமைத்தோண்
　　மங்கைவெண்கவரிகொண்டசைத்தாள். 15

[அருச்சுனன் சித்திராங்கதையை யாரென விசாரித்தல்.]

உத்தமகுணக்கற்பகநறுந்தருவே
யும்பருக்கரியபுத்தமுதே
சித்திரத்தெழுதற்கரியரத்தினமே
சேயிழையார்க்கொருதிலமே
நித்தியசுகநாடறிஞரும்விரும்பு
நின்பெயர்யாதுநிற்பயந்த
வித்தகன்யாரேயென்றனன்வந்த
வேதியனுகியவிசயன். 16

[சித்திராங்கதை பதிலளித்தல்.]

நிற்கமென்கரத்திற்கவரிகொண்டசைத்த
னீயணைமிசையமரெனவும்
பற்குனனிகழ்த்தவொழிந்தணைபொருந்திப்
பங்கயன்முதலினோரேத்துஞ்
சிற்குணப்பெரியோய்சித்திராங்கதையான்
சித்திரவாகனனெனுமிக்
கொற்கைவேந்தருளுங்குமரியென்றிணையில்
கோதைபின்னருமிவைகூறும். 17

[சித்திராங்கதை அருச்சுனனை யாவனென விசாரித்தல்.]

அடர்ந்தவெம்மாயைதனைச்சிரவணத்தா
லழித்தருஞ்சாதனநான்கும்
தொடர்ந்திடமனனத்தாற்பொருண்மதித்துத்
தோமறுநிதித்தியாசனத்தாற்
கடைந்துதத்துவமாந்ததிக்குழாந்தன்னைக்
கண்டெடுத்திடமிழுதெனவே
யடைந்தறிவயிக்கபதத்தினிற்றிகழு
மடிகணற்பெயரொடுபதியும். 18
விள்ளுதிரெனவிஞ்சையின்றிறன்முழுது
மேதகவுணருமாதமுதத்
துள்ளியினுபநிடதப்பொருள்சொலவச்
சொற்சுவைசெவிநுகர்தோன்ற
வுள்ளநெக்குருகியூறியகாம
வூற்றொருதிறத்தினுள்ளடக்கி
மெள்ளவம்மடந்தைவிதுமுகநோக்கி
மிழற்றுவன்மேதகுமுனிபோல், 19

[அருச்சுனன் தனது வரலாற்றைக் குறிப்பிற்கூறுதல்.]

அறுபதமுரன் றுகுடைந்துழக்குந்தி
யசைத்திருசிறைமடுத்தறைய
நறுமுலைகநெகிழ்வுற்றலர்ந்தமந்தார
நன்மலர்கமழ்குழனங்காய்
மறைநெறிபுரந்திம்மகியுயர்குணமே
மலிந்துலகுவக்குமெய்விரதப்
பொறையனென்றொருபேர்பூத்தபூபதிவாழ்
புரந்தரப்பிரத்தமெம்புரியே. 20

பன்னகச்சிறகிர்வயிரவாட்கிறைவன்
பதிமினாருநடம்பழகற்
குன்னியெம்புரிமின்னார்வயிற்றெழும்புற்
றுணர்வர்போந்தயனுலகன்னம்
மென்னடைபயிலுமப்பதிதணந்திம்
மேதினிவலம்வருமெனைக்கண்
டிந்நகர்க்கிறைவன்வேண்டவிக்காவி
னிருக்தனென்விசயமாமுனியான். 21

[இதுமுதல் 73-கவிகள், சித்திராங்கதை அருச்சுனன் சம்வாதம்.]

முன்னகைபுரிந்துழுவெயில்பொடித்த
முதல்வனீடலவெனமொழியப்
புன்னகைபுரிந்துமூவுலகழிக்கப்
போந்தபொன்புகர்முலைப்பூவாய்
மன்னுகுற்றுடைவாண்மருங்கசைத்தொருவாள்
வளைக்காத்தேந்தியவாறென்
கன்னியோவொருவர்பன்னியோவுலகங்
காவல்கொண்டிருத்தியோவென்றான். 22

கேட்டவொண்டொடிமற்றெனையலாலாடூஉக்
கிளைபிறிதின்மையாலிதயம்
வாட்டமுற்றெந்தையென்வயின்மகற்கிம்
மண்டரக்குறித்தெற்குமணஞ்செய்
நாட்டமுற்றதனுக்கிணக்கமிலென்பா
னல்கினனிளவரசதனால்
வாட்டிகழ்காத்தெனென்றனண்முழுதிவ்
வையகம்புரக்குமார்வத்தாள். 23

வாடுமென் மருங்குலிவைசொலக்கேட்ட
மறையவன் குறுநகைமருவிக்
கூடியவிளமையெழினலந்தழைப்பக்
கோதறுகொண் கனைமணந்து
நாடிமெல்லணையின் மதனநாடகத்தை
நயம்பெறநடத்தலற்றந்தோ
பேடியரியல்புகொண்டனைபேதைப்
பெயரினுக்கறிகுறிபெற்றாய் 24

அன்னவங்கடப்பலெனச்செலுமுறவிக்
கடுக்குமங்கனையர்மண்புரத்தல்
என்னிணந்திவைநச்சினையெனக்கேட்டேந்
திழைதிகைத்திருப்பவோர்சிலதி
யின்னசொலினிச்சொல்லற்கவெய்மிறைவிக்
கித்தகைமொழிசெவிக்கேலா
முன்னமெங்குலத்தோர்மகள்புவியாண்ட
முறையறிந்திலைமுழுதுணர்வோய். 25

சிறந்துமண்புரந்ததன்றியோகியைப்பின்
சேர்ந்ததுந்தெரிதுநும்மரபிற்
செறிந்தமும்மூலமின் பயனில்பல்வாய்மை
செப்பியென்றெரியிழாய்கேட்டி
நிறைந்துபல்விபவங்குலவுமெம்பதியி
னிறைகுணங்கல்விமெய்யறிவு
முறைந்துலகெல்லாமதித்திடவுளனே
ரொப்பறுமாடவர்திலகன். 26

யாவருமிறைஞ்சுந்தேவபூபதிசே
யிசைமிகுமுரசகேதிளவல்
வீவருமதனவேளிவன்பணிசெய்
வேலையாட்டரத்தனுமல்லன்
காவலர்நடுங்கத்துருபதனவைமுன்
கலந்துநாணுயர்ந்திடக்காட்டி
மேவருமிலக்கைவீழ்த்தொருகணத்தோர்
மின்னிணக்கொண்டகல்விசயன். 27

இத்தகைக்குரிசிலெழிறிகழ்திணிதோட்
கியாவரேயார்வமுற்றெதிரார்
முத்தவெண்ணகைவிற்புருவமீனேக்கு
முழுமதிமுகப்பிறைநெற்றித்
தத்தைமென்மொழிமுப்புவிமடந்தையரிற்
றனெவரையும்வெஃகானெனினுஞ்
சித்திரத்தெழுதற்கரியமெய்ப்படிவோர்
சிறந்தபெண்மணியைநேரிடுமால். 28

இழையிருகூறுவகிருநுண்மருங்கு
லேந்திழாய்காண்டலுநினையிக்
குழைபொருநெடுங்கட்கோதைமெய்நலங்கொள்
குமரன்யாரென்றியான்குறித்தே
கழைவிலியொதுங்கக்கவின்செயத்தடந்தோட்
காளையேதரமெனக்கணித்து
விழைவொடுமெனைநட்பெதிருமன்னளித்த
மெல்லியாதலினின்பால்விரித்தேன். 29

உருவநோக்குறவேற்றுமைபெறலன்றி
யுயிரிருவருக்குமொன்றெனச்சொ
லரியகேண்மையினனென்மொழிமறாதுன்
னன்பனுகுதற்குடன்படுமா
லுரியநின்றாதைசெய்தநற்றவமோ
வொண்டொடிநின்னருந்தவமோ
தெரிகிலனருமைக்கொழுநனையடைந்தாய்
செப்புநின்சிந்தனையென்றான். 30

[சித்திராங்கதை கூறல்.]

வேறு.

வேந்தவேதியன்சொற்றவைமகாரீர்வேலை
மாந்துவேலினன்மகள்செவிவிடமெனமடுப்பச்
சேந்துலோசனஞ்சினந்தனளென்னினுஞ்செங்கை
யேந்துமானிறைக்கடியனென்றிகழ்வதற்கிசையாள். 31

நிகழுமிப்புவிநேர்மையினெருவகைநெறியைப்
புகலுமன்றிமற்றிவன்சொலாற்பிறபொருட்புகாவென்
றிகலுவேற்கணளென்மனத்தியல்பிசைக்குவலென்
றகலுசீற்றமோடத்தவற்கெதிரிவையறைவாள். 32

மும்மைநாடிதேர்மருத்துவமுதியருமொருவன்
வெம்மைநோய்தணிக்குவதன் றிச்செய்வரோவிருத்தி
யெம்மனோர்பவச்சலதிநின்றெழச்செய்வதல்லா
லம்மவீதிசைத்தாழ்த்தலுநும்மனோர்க்கழகோ. 33

மாயைதன்னிலையிதுவெனவகுத்ததான்மறைந்த
தூயதாமொருபிரமநீயுணர்கெனச்சுட்டி
நேயமோடுதன்னிலைபெறநேர்தலற்றிப்பொய்க்
காயவின்பமேபெரிதெனக்கழறலென்கணித்தோ. 34

இல்லறத்தினிற்றுன்பமேசரதமின்பின்றும்
அல்லறீர்மனத்தாலவாவறுத்தெலாமறியும்
நல்லபேரறிவாமுனையறிகெனநவிலா
தெல்லயற்றபேரிடருறவிசைப்பதுமியல்போ. 35

நன்னலக்கடுந்துறவுகொணவையின்மாதவநீ
புன்னுனிப்பணியின்பிணைப்பெரிதெனப்புகறற்
கென்னையேதுவென்றறிகிலனென்மனத்தியல்பைப்
பன்னுதாதிசொற்கேட்டிவைபகர்தலும்பண்போ. 36

தக்கசெய்துழன்றலைவர்பாறனைத்ததிநெய்யாய்த்
துய்க்கவேண்டுவோர்துயருறூர்கிரமேதுய்ப்போர்
மக்களன்பனைமதித்திடாதென்னையேமதிக்கும்
எற்குநின்சொலாற்பயனென்கொல்விடுகவென்றிசைத்தாள். 37

[அருச்சுனன் கூறல்.]

நாரிவாணியீறடையுமுன்றவனகைநாறி
வீரவிற்கொருகாளைதன்வெற்புறழ்மணித்தோட்
சேரநிற்குபசாரமுஞ்செப்பவோமதுரங்
கூருகன்னறின்பதற்கொருகூலியோகோதாய். 38

ஞாலவின்பமுற்றுணர்ந்ததினசையறுஞானிக்
கேலப்பேசுவைஞானமெங்கேமின்னீயெங்கே
வாலைநீமனையறம்பெறநிற்றலேமரபாங்
காலமுந்தகுதியுமுணர்ந்திசைப்பதெங்கடமை. 39

பெருத்தபேதைமைநிகழுநாட்பிதாமொழிக்கடங்கிக்
கருத்துணர்ந்தபின்காந்தனுட்படிந்துகான்முளைசொல்
விருத்தைதையென்றபின்வினவுதல்விதியென்பரென்று
மொருத்தருட்படாவொண்ணுதல்கெடுமென்பருயர்ந்தோர். 40

அன்னையத்தனுமற்றுளவரும்பெருங்கிளையுந்
தன்னைவேட்டிடுங்கொழுநனேதெய்வமுந்தவமு
மன்னுமோக்கமுமங்கையர்தமக்கெனமறைகள்
பன்னுமாமெனிற்றனித்திருந்தவதென்பாவாய். 41

தறித்தவொண்மதிநிகர்நுதால்தக்கதென்றன்றே
துறத்துநின்றுமில்லறத்தினைப்புகழ்வர்மெய்த்துறவோர்
புறத்தினுற்றிடாச்சுவர்க்கநன்மகப்பொருட்டெனிலித்
திறத்தையன்றிவேறுளதெனச்செப்பல்சீர்மைத்தோ. 42

முரண்டிருத்துமைங்கணைநின்மேன்மோகரித்தெதிரா
தரண்டிருத்துவான்கடுந்துறவடைந்திலையந்தோ
தெருண்டுமில்லறத்தமர்ந்திலைசிறியையென்செய்தா
யிரண்டுங்கெட்டவளென நினையுலகிகழாதோ. 43

பெற்றபேரெழிற்கொத்தநற்காரணப்பெயரோய்
விற்றடங்கையம்மனற்கென நினைவிதித்திலனேற்
குற்றமெய்துவன்கோகனகத்தமர்குரவன்
முற்றுஞ்சீர்பெறவமைத்திடுமுதல்வனுகையினுல். 44

வானமன்மகற்கென நினையயன்வகுத்தமையாற்
கானவாமலகமுந்திரைக்கடலுப்புங்கலத்தன்
மானமற்றிருவோர்கடம்முழ்வலிவலிப்ப
யானுநீயுமிங்கெதிர்ந்தனமிதிலென்கொலையம். 45

சிந்துரத்திலத்திருநுதற்செழுமலர்த்திருவே
முந்துநின்னெழினலனெடுத்தியான்மொழிந்திடினு
மந்தரத்திறைசேய்வரலருமையினருமை
வந்தநற்பொருள்விலக்குதன்மடமையின்மடமை. 46

பொற்பின்மிக்குநற்றருணியாயித்துணைப்போழ்து
நற்சுகம்பெறுதிருந்தனையென்றுநானிரங்கி
நிற்கிதம்பெறநிகழ்த்தினெனிகரில்மாணிக்கக்
கற்பொனிற்படிந்தேமிகக்களுலுவகாணுய். 47

உனக்குநல்லனநல்லனவுந்தைக்கிவ்வுலகந்
தனக்குநல்லனநல்லனவத்தனஞ்சயற்கு
மெனக்குநல்லனவிசைவரற்பாலதென்றிசைத்தே
னினிக்கிளத்துவதென்கொனின்சிந்தையென்றனனுல். 48

[சித்திராங்கதை கூறல்.]

எனக்குநல்லையுமல்லைநீயெற்பயந்தெடுத்தோன்
றனக்குநல்லையுமல்லைபத்தனஞ்சயனென்னு
மனற்குநல்லையுமல்லையிம்மண்புவிக்கல்லை
யுனக்குநல்லையுமல்லையென்றொண்டொடியுரைப்பாள். 49

வீரநீங்கவேறுளநலன்யாவையும்விளங்கு
நாரிமார்க்கலாற்றங்கைக்குநண்பற்குமகற்குஞ்
சாரவொல்கினின்றொழுகெனச்செப்புநூற்றனிமைச்
சூரமல்கியமாதருக்கன்றெனத்துணிதி. 50

இல்லறத்தினைப்புகழ்வபோற்பூருவமிசைத்த
தொல்லைவேதம்பின்பிரமசாரியத்திற்றொக்கிருந்தே
யல்லலற்றநற்றுறவுறலருமையென்றெடுத்துச்
சொல்லுமென்றலோதுணிந்ததச்சுகன்முதற்றொல்லோர். 51

உரியமன்னருமுலகமுமொருபுடையொதுங்க
வரிசுமந்தமெல்லணைமிசையமர்ந்தாசியற்றும்
பெரியவின்பகன்றேழையிற்பெட்படைந்தொருவற்
கருகியேபெறுமின்பமோரின்பமுமாமோ. 52

அருப்பமொண்சுதையாமதினசையுளார்க்குமிழ்தம்
விருப்பிலார்க்கிகழ்விசுளியாம்வேட்கையிலென்பாற்
கருப்புவில்லிகைக்கணையெதிர்ந்தென்செயுங்கலையோய்
பருப்பதத்தினைமோதியென்செய்குவபவனம். 53

அறைகடற்புவிக்காசியென்றமர்குவதல்லாற்
குறைமிகத்தெரிகொழுநனின்பதினசைகொள்ளே
னறிதிமற்றிவையினியெடுத்தறைதலுமடாதான்
மறையவனெக்கென்றனண்மங்கையம்மறையோன். 54

[அருச்சுனன் கூறல்]

காமம்வெல்குவைகாந்தனைவேட்கிலாய்கழறு
நேமிவைப்பெலாம்புரக்குவைநிருபரைவெல்வாய்
நாமவாட்படையேந்தியநங்கைநிற்குவமை
யாமிசைத்திடற்கியாருளரெனநகைத்திசைப்பான். 55

நாமகள்விதிநாவமர்ந்ததுநிதிநங்கை
நேமிமார்புறைந்ததும்பரைநீறணிவிமலன்
வாமமுற்றதுங்காமத்தின்வலியினுலென்னின்
பூமிசைச்சிறுபூவைநிற்கென்கொலோபுகல்வேன். 56

உலகமாதியெவ்வுயிரும்வேறுஞற்றமுன்னெழுந்தோன்
அலகறும்பகல்செய்தவமழியமேனகைமின்
முலைநலந்திளைத்தனனினிமுனிவரின்மோகம்
விலகிநின்றவரிவரெனவிரல்விடுகாண்பேம். 57

நாமவேற்றிதிமைந்தரையழிப்பநல்கியவெண்
டேமமென்கலைத்திலோத்தமைச்சுதையெழினோக்கிப்
பூமனுமயங்கினனெனிற்புகல்வதென்போதக்
காமம்வென்றவரிவரெனுங்கடவுளருண்டோ. 58

உலகம்யாவையும்பொதுவறத்திகிரியொன்றுருட்டி
யிலகுமோலிபெற்றிருப்பவரென்னினுமின்பக்
கலவியற்றிடிற்காணடங்தொழிபிணமென்னப்
புலவர்சொற்றசொனீறணித்துணர்ந்திலைபோலும். 59

மிக்கவின்பமொன்றுண்டெனக்கலவியைவெறுப்போர்
புக்ககானலைப்புனலெனப்புந்தியினெண்ணிக்
கைக்கமண்டலத்தயத்தினைக்கவிழ்த்தலைபவரை
யொக்குமென்றொருசாத்திரமிகவெடுத்துரைக்கும். 60

வில்லினுக்கிவனெனப்புவியுவக்குமோர்வீர
மல்லல்வெம்புயமகிபனின்வானெனவருமேற்
றொல்லைமாதவப்பயனெனத்துணிதலற்றெதிர்நீ
சொல்லலென்சுதைமறுத்திடுஞ்சுமடரிற்றோகாய். 61

விள்ளலென்பலவின்னிகர்நன்னுதால்வெகுண்டு
துள்ளுசேப்பொதிசுமக்குமென்றியம்புசொற்கியைய
வள்ளன்மேனியைக்காண்கினின்வாய்மைநீத்தொல்கி
யுள்ளமையல்பூத்துவந்தடிபணிவகாண்குவெனல். 62

வேம்புநுங்கெனவிடநுகர்கெனவிளம்புகிலேன்
றேம்புகட்டல்போலுறுதிநிற்பயப்பயான்செப்ப
வேம்பலுற்றிடாதென்மிசைக்கொதித்தலுமியல்போ
காம்புவென்றமென்றோளியேயென்றனன்கலையோன். 63

[சித்திராங்கதை கூறல்.]

வன்னியூட்டுநாராசம்வந்துற்றெனமறையோன்
சொன்னசொல்லிருசெவித்தொளைசுரீரெனச்சுடவே
கன்னியுட்புறங்கனன்றுசெங்கனியிதழ்துடிப்ப
வின்னுதற்குளத்தெதிர்ந்திடத்தழலெழவிழித்தாள். 64

வள்ளறந்தையன்புற்றவனெனப்பினுமதியா
விள்ளுவாய்மையின் விலக்கலேனன்றெனவெகுளு
முள்ளமோர்வகையொடுக்கிவேதியவென்சொலுணரா
தெள்ளல்செய்தெனைத்துணிந்திவையிசைக்கநீயார்கொல். 65

காதலுற்பவக்கருவிருணெறியெனக்கருதிப்
போதபுங்கவரிகழ்வரங்கதைமிகப்புகழ்வாய்
நீதவத்தனுபித்தகுவேடமுநிசமாய்
வேதவீற்றுணர்ந்திடின்விதிவிலக்கறியாவென். 66

நட்பெதிர்ந்திடான்ஞாலத்தினெவரையுஞானி
பெட்பின்வேந்துறவுற்றனைபிறப்புவரியினுழ்த்
துட்பகைக்கரணங்களைத்தடிந்திலைபுணர்வுங்
கொட்பமைந்தனையென்கொனீகொண்டதிக்கோலம். 67

பெற்றனன்பெறற்கருங்கொழுநனைப்பெருந்திருவை
யிற்றைஞான்றுன்சொலாலின்வேறிலவினிப்பெறுவ
நற்றவர்க்கொருநவைதாநண்ணறிவிலிநீ
கற்றகூறலையெழுதியென்கண்ணெதிர்கழிதி. 68

மாதர்மென்முலையின்னவைசெயிர்கொடுவழுத்தக்
காதலங்கடற்கவிழ்ந்தொருகரைபெறுக்காலை
தீதிலங்கணைபடப்படச்சிந்தைதேய்ந்துருகி
யாதரம்பிகுத்தறையுந்தன்செயல்வெளியாக. 69

[அருச்சுனன் கூறல்.]

விடத்தினுக்கமிக்கமுதமுமெல்லெனவிஞ்சித்
தடத்தினின்றுளிர்சேவினிற்பிறழ்ந்தரிதழுவி
யடர்த்தவள்ளலையக்குமிழினைநீங்கலாவடங்கொண்
டெடுத்தெனுவியைக்குடிப்பபோன்றிலங்குவேல்விழியாய். 70

வேந்தருட்கணாண்மடுத்தரைக்கணத்தின்மீனெறிந்தோர்
காந்தைமென்முலைபுளகெழப்பிடித்தவள்கரத்தைப்
போந்ததெண்டிரைப்புவிபுகழருச்சுனனென்போன்
சேந்தகாழகத்தித்தகுயோகியேதெரிதி. 71

நுங்குலத்துறுவழக்கலாற்புதிதலநுவலிற்
சங்குபெற்றகைமான்புவிதழுவியபின்னர்
பொங்குநீறணியோகியைவிழைவொடும்புணர்த
லிங்குயாமுமவ்விலக்கணத்திலக்கியமாவேம். 72

பித்தயோகியைவிழைந்தனடடா தகைப்பிராட்டி
யுத்தமக்குணம்புரவலயோகியாமெனையுன்
சித்தநச்சுதற்கையமென்செழுமலர்க்கோதாய்
கத்துவாரிதியுலகமுமகிழுமாகாண்டி. 73

செல்வநோக்குவளீன்றவள்சிறப்புறுந்தந்தை
கல்விநோக்குவனுறவினர்குலநலங்காண்பார்
நல்வனப்பையேநோக்குவணங்கைபிங்நான்கு
மல்குமோர்மணமகன்வரினெவர்கொலோமறுப்பார். 74

பொய்யெனப்புகல்புறஞ்சொலாலழிவறப்பொலிந்து
நையமெல்லிடையுரங்கவர்ந்தெழுநகிற்றிருவே
வெய்யவேள்விடுகணைக்கிலக்காகிமெய்மெலியா
துய்யுமாறெனக்கொல்லையின்னருடரவோர்தி. 75

[சித்திராங்கதை கூறல்.]

என்னமன்சொலக்கேட்டவின்குழன்மொழியிரண்டு
கன்னம்வெந்தனதீய்ந்தனபற்கறகறத்த
வன்னிவந்தகண்புகைமிகநாசிமுன்வரவே
மின்னறந்தவானோக்கினள்வெகுண்டெதிர்நோக்கி. 76

விண்டகோவுரிபோர்த்தெதிர்வேங்கையிற்றோன்றித்
துண்டகத்தொழில்பரப்பியதுட்டநீமாறிக்
கெண்டவெண்பொடிக்கோலமல்லானினக்கிக்கொன்
கண்டிலேனுயிர்தந்துநின்றிடுந்துணைக்கருவி. 77

வேந்தனட்பினனென்றுபின்வேந்தன்யானேயுன்
காந்தனுவெனைக்கொள்கெனப்பிதற்றியகள்வா
சேந்தனென்றியர்செங்கண்மாலென்றிக்குச்சிலைகை
யேந்துவோனெனற்கஞ்சலைதூர்த்தநீயினியே. 78

தற்புகழ்ந்துநீந்தருவிரகக்கடறாழ்ந்தே
முற்புகன்றநூனெறிபிறழ்மூடநீமுயங்கச்
சொற்பகட்டுமென்முலைவிலைமாதர்பாற்றெருகுவாய்
கற்பகத்திறையென்னினுமென்மனங்கருதேன். 79

எந்தைகேண்மைபெற்றிருந்தனையென்பகண்டுன்மேல்
வந்திடாதுதிகாறுமென்வாளுறைபிருப்ப
நிந்தைசெய்தெனைநீயுயிரொடுமெதிர்நின்றாய்
சிந்துவேணினியகறியென்கண்முனைதீயோய். 80

நிற்றியேலினித்துறந்தநின்னுயிரெனநினைதி
கொற்றவேற்கரத்தெந்தையுங்கூன்பிறைக்குடில
நெற்றியம்பகனுந்தடுப்பினுநினைக்கொல்வேன்
சற்றுசஞ்சலனிலைகடைப்பிடியெனச்சாற்ற. 81

[அருச்சுனன் கூறல்.]

கேட்டவாண்டகையிளநிலாக்கிளர்தாக்கெழுமி
வாட்டடம்புயங்குலுங்குபுநக்கனன்வறிதே
வீட்டிடேலினிநின்விடத்தாரைவாள்வீசிக்
காட்டினெங்ஙனமுய்குவன்யானெனக்கழறும். 82

புடைத்துமென்முகைவிரிந்தொளிர்பூப்பிஞ்சுகாயா
யடுத்தவொப்பறங்கனியினையரம்பைதன்னுயிரை
விடுப்பவாகியுமீயுமேல்விதிபிறழ்வின்றிக்
கொடுத்துமீட்குறுமிதழ்க்கனிலோபமென்கோதாய். 83

கக்குவெவ்விடப்பாந்தளுமத்தவெங்கரியும்
புக்கடங்குமோர்மறைசிறுபுயவலிக்கென்னின்
நங்கநன்னிதானின்னிடைநாகமார்களிறுந்
தக்கமாமறைத்தனஞ்செயன்றனக்கடங்காவோ. 84

எட்டுவேழமுந்திசைதிசையிரிந்திடவெதிர்த்து
முட்டிமேருவைத்தகர்த்தெழுமுளரிமொட்டுடைத்துத்
தொட்டுவல்லடுநின்முலைத்துட்டவெங்கரியைக்
கட்டுகட்டினியென்புயத்தறியினிற்கடிதே. 85

சுட்டுமெற்பெயர்த்தருவுமோர்சுகந்தருமென்னைக்
கட்டுதாம்பிடையுரலுடன்றவழ்ந்துமெய்கவன்று
மொட்டவந்தனனுலகளந்தவனெனினுன்முன்
கிட்டுமெற்புயந்தழுவநிற்கையமென்கிளியே. 86

வன்சொலற்றபோர்வயவனுமதிப்புறவாழ்ந்து
மின்சொலற்றவோர்செல்வனுமேற்றுண்டுமேத்து
நன்சொலற்றவோர்மிடியனுநற்குலம்போந்து
மென்சொலற்றவோரரிவையுமிகைபடற்றிண்ணம். 87

மேருகல்லியகோலொப்பர்மேலவர்ச்சினப்போர்
தேரினுகுலந்தாமுமெய்துவரொத்தோர்ச்சினப்போர்
சேருங்கீழவர்ச்சினப்பவர்நரகெனிற்சீற்றம்
யாரிடத்துஞ்செயாமைநன்கென்பதையுணர்தி. 88

உரியதீயெழுங்கோபத்தியுதரத்தீயெனத்தீத்
திரிவகைப்படுமெற்றதிற்கொடியசொற்சிதறிக்
கருகுநாவினுற்சுடுஞ்சினத்தீக்கடிதென்றே
பெரிதிசைப்பர்பின்வருமதிற்கேடென்றும்பெரியோர். 89

கூர்த்தவேலினுங்கூர்த்துவெங்கூற்றுமெய்விதிர்ப்ப
வார்த்துநின்றநின்வெவ்விடப்பார்வையாற்றுகிலேன்
கோத்தமுத்தினிற்றிகணகைப்பிறைநுதற்கோதாய்
பார்த்தன்யானினியமுதுகப்பார்த்தனீபண்பு. 90

மையிழைத்தகூர்வாள்கிடந்தனையகண்மயிலே
பையினின்றெளிரல்குலந்தடத்தினிற்படிந்தே
கையினின்னகிலிலிங்கபூசனைசெயக்கருணை
செய்தியாலெனக்கிற்றைநாட்டீர்த்தமூர்த்தியுநீ. 91

தாபதன்னலேன்றனஞ்செயனீதுசத்தியமே
நீபமுற்றவேண்மைத்துனனிகரிலேங்கனையாற்
சோபமுற்றிடுமெனைத்தழீஇச்சுகந்தரநினைதி
கோபமுற்றினிவிரட்டலேகோதைநீயென்று. 92

கலைவணங்குநாப்பெற்றியர்வடிவுகொள்காளை
யலைவணங்குதாட்டென்னவனரிவைதன்முன்னர்
மலைவணங்கினும்வணங்கலாமணிமுடிமலருந்
தலைவணங்கினன்காமத்தாற்றாழ்வுறாரெவரே. 93

[இதுமுதல் 2 கவிகள், சித்திராங்கதை கோபித்து
விசயனை வேட்டசெல்லுதல்.]

வேறு.

கைகுவித்தமன்சொற்றசொற்காரிகை
மெய்வருத்தியதென்னமிழற்றலென்
வெய்துயிர்ப்பொடுமெல்லணைவிட்டனள்
நெய்புகுத்தமழற்றனிநேர்கணுள். 94

இல்லையாயினையின்றடனீயினிப்
புல்லுவாயிதுபோன்மெனப்பொங்கியே
வல்லைமின்னெளிவாங்கியவாளுறீஇச்
செல்லுமங்கையைச்சேடிவிலக்கினள். 95

[தாதி தடுத்து நீதிகூறல்.]

ஆதிநூலுணரந்தணரத்தனுய்
மாதர்கோக்குருபாலரைமாய்ப்பன
நீதியன்றெனக்கூறிநிருபனைப்
போதிபோதியென்றுள்புறங்கையினே. 96

முற்படும்மனத்தின்வழிமுந்துறும்
பிற்படும்மதிப்பேதையர்தம்மினிவ்
வற்புதக்கரணத்தடலாயிழை
யுற்பவஞ்சிறந்தென்றுவந்தானரோ. 97

தாதிசைகையுந்தள்ளருநீதியு
மாதினூக்கமுநோக்கிமகிழ்ந்தலா
லேதுமற்றதற்கஞ்சலனெய்யுவெம்
போதினலொருபுங்கவற்கஞ்சுவான். 98

அன்னநீரையகற்றியருந்துபா
லென்னவுற்றசினந்தவிர்த்திங்கிவ
ணன்னலம்முழுதும்பெறநாமினி
யென்னியற்றுவதென்றுளத்தெண்ணுவான். 99

[இதுமுதல் 4-கவிகள், அருச்சுனன் தனது சுயரூபந்தரித்தல்.]

பன்னுவாய்மையினிப்பயனின்றெனு
வின்னிலைக்கொருவித்தகன்வென்றிகொள்
கன்னல்வில்லிகலங்கியொதுங்குபு
முன்னைமெய்ப்படிவங்கொளமுன்னினன். 100

மந்தரந்தனிவென்றமணிப்புயஞ்
சிந்துகாமர்திசைதிசைசென்றிடச்
சுந்தரஞ்செறியானனச்சோதிபோ
யந்தரத்திலுமப்புறமுப்புக. 101

வள்ளிபங்கன்மயங்கிமலைபுக
வுள்ளநாணியொளிப்பமனோபவன்
பள்ளிகொள்ளவப்பைம்புயன்மேனியுந்
தள்ளியாணர்தனித்தொளிர்மேனியான். 102

துந்துமிக்குலமீதெழத்தூய்மல
ரந்தரத்தவர்சிந்தவணங்களுள்
சிந்தைவல்லிரும்பீர்க்குந்திறங்கொடே
வந்தகாந்தநிகர்ப்பவயங்கினன். 103

[இதுமுதல் 7-கவிகள், அருச்சுனனது ரூபத்தைக்கண்டு சித்திராங்கதை காம மயக்கமுறல்.]

பண்டைமாமறையின்பயனேநலோர்
விண்டமாயையின்வெற்றியிதோவெனக்
கொண்டகோலக்கிரீடியைக்கோல்வளை
கண்டனட்டனதாருயிர்கண்டிலாள். 104

பட்டநவ்விபரப்புவலையினென்
றெட்டிநோக்குறுவேடனெதிர்ந்தனைப்
பொட்டெனக்கழிகொண்டுபுடைத்தல்போல்
மட்டலர்க்கணையான் மதன்வாட்டினான். 105

வாதுசோர்ந்தனவாயுறைசோர்ந்தன
வேதிசோர்ந்தனவெண்ணிலைசோர்ந்தன
கோதைசோர்ந்தனகோல்வளைசோர்ந்தன
மாதுசோர்ந்தனண்மண்மயில்சோர்ந்தென. 106

தாங்கினார்காத்தொல்லையிற்றண்மணந்
தூங்குசீகரந்தூவினராற்றினார்
ஓங்குபீலிகொண்டட்புறனைந்துனைந்
தேங்குவெம்முலையேந்துமிடையினார். 107

வாடுமொண்கண்மலர்ந்துமனந்தனி
நேடினாணிலைநேரநின்றாளரோ
நாடுமந்தகனாடுயிர்மெல்லெனக்
கூடுவந்திலநிற்றெனக்கூறவே. 108

ஊறிநாணமுயர்ந்திடவொல்லையின்
மாறிவெஞ்சினம்வன்பிடர்கீழுறச்
சீறுபங்கயச்சேவடிமெல்விரற்
கீறினாணிலங்கேழ்கிளர்மேனியாள். 109

அறிந்தகன்றனரம்மின்கருத்தைவண்
டுறைந்தபூங்குழலொண்டொடியாரெலாம்
நிறைந்தநாணெகிழாமயலாணிலாச்
செறிந்தநித்திலஞ்சிந்தினவாம்பலே. 110

[புராணிகர் கூற்று.]

வேறு.

ஆர்த்தெதிருரப்பிவாளங்கைவீசுமின்
வேர்த்துமெய்யொல்கினள்காமவீக்கத்தாற்
பூத்தனண்முறுவலுமெனப்புகன்றிடிற்
பார்த்தனைவெஃகலாப்பாவையாவரே. 111

[சித்திராங்கதை அருச்சுனனை வணங்குதல்.]

சின்மதிப்பேதைமைச்சிறியைசெய்பிழை
நின்மதிபொறுத்தருணேர்தியாலென
நன்மதிநாகருநயக்குநாரிநேர்
வின்மதிவிசயன்றாள்வீழ்ந்துவேண்டினாள். 112

[இதுமுதல் 6-கவிகள், காந்தர்வமணக்காட்சி கூறுதல்.]

கண்டுநன்முறுவலுங்கனிந்தகாதலும்
விண்டவட்கலுமிகுவேட்கைநோக்கமுங்
கொண்டகைக்கும்பிடுங்கொங்கைதன்னுர
மண்டுபுதழுவினன்மகிழ்ந்துவாசவி. 113

ஏந்தியமெல்லணைமஞ்சமேறினர்
சாந்தினன்மெழுகுமத்தவளக்கோயிலின்
வேந்தருவிலிசரவெம்மையாற்றலார்
காந்தர்வமுறைமையிற்கடிதுகூடினர். 114

தழுவியவேந்தொளிர்மணித்தடம்புயத்
துழுதிடவுகிர்க்குறியுற்றகோடிரண்
டுழுவலன்பொடுதழீஇயுவகைவிஞ்சினள்
வழுதிநற்றவத்தெழுமாசிலாமணி. 115

தொண்டைவாய்வெளுப்புறத்தோயநெற்றிவேர்
வண்டுபாய்குழனெகவளைகலிப்பப்புட்
பண்டுதைந்தெழக்களத்திடைபதைத்திடச்
கொண்டலுட்டுவன்றமின்னெனக்குலாவினள். 116

வேயுறழ்தோளினளுதவுமெல்லிதழ்த்
தூயமிழ்தருந்தினேன்றேகைதேர்வுற
மாயிரும்புவிபுகழ்மதனபுத்தகப்
பாயிரப்பண்பிணைப்பயிற்றினனரோ. 117

எழுந்தனர்கலைதழீஇயிலைழதிருத்தின
ரழுந்தியசுகக்கடலகன்றுநன்மணம்
பொழிந்தவின்சுவைபலதின்றுபூசினர்
மொழிந்தனன்யாழ்முனிமொழியின்வந்தெலாம். 118

[அருச்சுனன் சித்திராங்கதையை விட்டுப்பிரிதல்.]

இடம்படுவேத்தவையெய்திநாளையே
விடம்படர்வேற்கணுய்நின்னைவேட்பலென்
றுடம்படுமொழிபலவோதியேகினன்.
றொடர்ந்திடமனத்தொடுதோகைகண்ணரோ. 119

[இதுமுதல் 4-கவிகள், சித்திராங்கதை துயரடைதல்.]

கண்ணுதிபங்குனன்மறையக்கையினூற்
புண்ணுறநகின்மிசைப்புடைத்துவாய்திறந்
தொண்ணுதலரற்றிடவொழிந்தநங்கைமார்
விண்ணிழிமின்னின்முன்வந்துமேவினர். 120

என்னைகொலென்னைகொலிரங்கனீமுகி
லன்னமெய்மன்னிணையகலவுற்றதென்
மின்னனுமமுதமுமிசிரமெய்தச்செய்
பொன்னொளிர்பாவையேபோலுமேனியாய். 121

வாளைவென்றிலங்குகண்மாதர்கேட்டலும்
நாளைவந்துன்மணநாடுவேனெனக்
காளைபோயகன்றனன்கன்னிமீரெனாச்
சூளையிற்சுடுமனத்தோகைகூறினள். 122

இன்பநீத்திடருறவென்னைவிட்டேகுமெ
னன்பனைக்காண்பதென்றையகோவெனாத்
தன்குரனீட்டியேதரணிசாம்பினள்
புன்கொடியழற்படல்போலுந்தன்மையாள். 123

[தாதியர் அரசியைக் கன்னிகாமாடஞ் சேர்த்தல்.]

நீடியசோகமுந்தாபநேர்ச்சியும்
நாடினருய்த்தனர்தண்டினங்கையை
ஓடினர்கூடினரொல்லைவிண்டொடர்
வாடியமருங்குலார்கன்னிமாடமே. 124

[இதுமுதல் 12-கவிகள், சித்திராங்கதையின் காமக்காட்சி கூறுதல்.]

இட்டனர்சிதநீரிறைத்தமெல்லணை
பொட்டெனப்புதுமலர்பரப்பிப்பூவையை
விட்டனளுறெடுபூணுமென்றுகில்
தொட்டபூங்கோதையும்வளையுஞ்சோரவே. 125

சூழியவாசுவாச்சுவசின்மீவரு
பூழியன்றவைத்தெழும்பொன்னங்கொம்புநல்
யாழிசைக்கிடருறமிடிக்கும்வெம்பறை
போழவள்ளுயிருமிழசுணப்புள்ளினே. 126

அன்றிலுக்குடைந்தனளாவிமெய்மிகக்
கன்றினள்பிகமரிகனர்தல்கேட்டெனிற்
றன்றுமையலிற்றன துணர்வுசோருமின்
றென்றலுக்கழிந்தவைசெப்பற்பாலவோ. 127

சேடியர்திருமுகநோக்குஞ்சிந்தைமெய்
வாடுமாலுவெனுமனற்றுமாமழை
கோடுயர்மென்முலைக்குவட்டின்மேல்விழ
வோடரித்தடங்கணெட்டுயிர்ப்புவீங்குமால். 128

கைதுறந்தனவியாழ்கடிதல்காமரு
மெய்துறந்தனவணிமிலைதன்மேதகு
மைதுறந்தனவிழிமயறுறக்கலாத்
தைதுறந்தெழுந்தமாந்தளிர்மெய்த்தையலாள். 129

சித்தநொந்தயருமின்றுயரந்தீர்ப்பதற்
கொத்தபல்வினைகடாநியருளுற்றிளு
ரத்ததிவில்லியசோகுதொட்டிடப்
பித்தரிற்பேதையும்பிதற்றுவாளரோ. 130

வேறு.

சேராதகாமமிகச்சிந்தையனல்மெழுகா
நீராகச்செய்தவொருநீலநிறமேனியனே
தீராதவின்பரசந்தெவிட்டவெனக்களிக்க
நேராகவாராதென்னிகழ்த்தாய்நிகழ்த்தாயே. 131

கண்ணெளியையீர்த்துமதிக்கதிரிணெளிகவற்றும்
பண்ணுளநின்வெண்முறுவற்பார்ப்பதினியெப்பதமோ
விண்ணுலகுவெஃகுமெழின்மேனிதனைப்பார்த்துடல்பூத்
தெண்ணரியதுன்பவிடாக்கடனின்றேறுவனே. 132

துண்டமதிநுதலித்தோகைபுபிரீர்த்துக்
கொண்டனையோமாமறையாற்கொள்ளுவவேனின்னிணவே
கண்டசுகக்கடலிற்கவிழ்ந்துநினைவழியக்
கொண்டவுருக்கமதாற்கோதையறிந்திலனே. 133

வருவாயெதிர்நிற்பாய்மறைவாய்தறியிடத்தே
புரிவாய்முறுவறனைப்போவாய்மருவாயே
தரியாய்நின்னெஞ்சங்கல்லோவயிரமோ
வுரியாளன்றேவுனக்கியானென்பாளுருவெளியை. 134

குறியாதென்வெம்மைமிகக்கொண்டகுடமுலைமேல்
வெறியார்களபமெனவீசுவீர்வெங்கனலை
யறவேநீர்செய்கொடுமையாற்றுகிலென்றேழிமீர்
உறவேபோல்வந்தணுகியுட்பகைதீரொன்னலர்போல். 135

வந்தானெனச்சிரிக்குமகிழுமிருகைகூப்பு
மந்தோவெனக்கதறுமகன்றானெனக்கூவிப்
பந்தாமெனத்துள்ளிப்பாயறனிற்புரளுஞ்
சிந்தாகுலமங்கைசெப்பவெளிதன்றே. 136

சம்வாதச்சருக்கமுற்றும்.

(ஆக சருக்கம் 12-க்கு கவி 581.)



## [13 - ஆவது விரகச்சருக்கம்.]



[இச்சருக்கத்தால், மாலைக்காலம் சந்திரோதயம் மன்மதபவனி சந்திரோபாலம்பனம் மன்மதோபாலம்பனம் தென்றலுபாலம்பனம் விடியற்காலம் முதலிய வருணனைகள் கூறப்படுகின்றன.]

[இதுமுதல் 17-கவிகள், மாலைக்காலவருணனை.]

நீலமேனியநின்மலன்கனன்றுநின்றெரியக்
காலநேமிமுன்சுழன்றடர்திகிரியைக்கடுப்ப
மூலமாதிரவெற்பிடைமுளைத்தெதிர்முடுகி
மேலைநாகமோர்முழுமெனவடுத்தவிண்மணியே. 1

வருணன்மாநகர்க்கோபுரத்துச்சியின்வயங்குங்
கிரணமாமணிக்கலசமோமுலைமிசைக்கிடந்த
தரணிமாதுமதாணியோவீதெனச்சாற்ற
அருணன்வந்துநின்றிலங்கினனத்தவெற்புச்சி. 2

சுக்கிரீவனுன்மணிமுடிதவிர்ந்துசோர்ந்திடுந்த
சக்கிரீவன்போற்றபனன்றன்பின்புறஞ்சாய
வக்கிரீமெலிந்திமைத்தவாயிரமணிச்சுடிகைச்
சக்கிரீயொருபான்மறைதமணியவரைபோல். 3

முறைபிறழ்ந்தொருகன்னியுங்காளையுமுயங்கப்
பொறியினோர்ந்தொருதிகிரியைச்செலுத்தியிப்புவியோம்
பிறைவணுகியுந்தண்டியாதெஞ்சிமுன்றூன்செய்
குறைநினைந்தொளித்தெனக்கதிர்மறைந்தனன்குடபால். 4

ஓடிமாருதிவான்மிசைத்தென்கடலொருசார்
கூடிமுன்னர்மூட்டெரிநிகர்ப்பனகதிர்குடபால்
நாடிநிற்றலுமெழுந்திடுஞ்செக்கர்நானிலத்திற்
சீடன்செய்தொழிற்றேசிகன்செய்திடற்கரிதோ. 5

உதயமாதிரத்துச்சியினுதித்தெதிரோடிக்
கதிரவன்கடலிடைப்புகுங்காட்சிகங்காள
னுதலெழுங்கனல்பகைஞரூர்நுழைவனபோல்வ
சிதைவுறும்புரத்தெழுஞ்சிகிநிகர்ப்பனசெக்கர். 6

திரிபுரத்தெரிசிவனுவசெக்கரின்பரப்பவ்
வெரியிடைப்படுங்கரும்புகையேய்ப்பனவிருளக்
கரியதூமமீதெழுந்தெதிர்கஞலுவெண்டுகளைப்
பொருவுமாலொளிர்புட்கரத்துற்கையின்பொலிவே. 7

வல்லநாவலனிருந்தவையற்பநூல்வல்லோன்
புல்லுபான்மையிற்கதிரறப்புகுந்தபுன்மாலை
யொல்லைநீங்கியபொற்கிரியுதக்கிருள்வேழ
மெல்லவந்தனதென்றிசைவெயின்முடங்குளையால். 8

உரியகேண்மையர்க்குற்றவொன்றுடனனுபவிக்கும்
பெருமையோரிற்றம்மொற்றுமைவடிவப்பேதையைத்தேர்ந்
துருகிவாடினமூடினவுள்முகமொண்கண்
கருகியோய்ந்தனவுடலமுங்கனிந்தசெங்கமலம். 9

புகலுவாய்மையின்றிறங்கொடுதெருட்டுநர்பொருவ
நகுநுதாலஞரேலவனண்ணுறுநாளைப்
பகலினென்றவட்கன்புறப்பகர்வபோன்மலர்ந்த
நிகரிலாதவாயொற்றுமைநேர்ந்தசெவ்வாம்பல். 10

இங்கிவ்வேசைதன்மெய்திரைந்தெழில்சிதைந்தனநற்
கொங்கைசாய்ந்தினிக்குணமிலவெனவகன்றருகோர்
நங்கைபாற்செலும்விடனெனநளினமுற்றகன்று
பொங்குபண்மிழற்றளியொருகுமுதமேற்போகும். 11

கலக்கியெண்டிசைகாண்குவல்கடிதினிற்கொணர்வ
லலக்கணுற்றிடேலணங்கனையவனையென்றிரவி
துலக்குமெல்விரனீட்டியத்தோகைபாற்சுட்டிச்
சொலற்கடுக்குந்தீபிகைசுழன்றசைந்தொளிர்தோற்றம். 12

உண்டுகூடுதலன்றியொன்றின்றெனவுன்னிக்
கண்டகாட்சியாய்க்கொண்டதுகோலமாய்க்களித்துப்
பண்டைநூனெறியொழுகலாப்பதடியாமூட
மிண்டர்நெஞ்சினிலிருட்டொகைமலிந்தமேதினியே. 13

நண்புகொண்டுவானவரொடுந்தானவர்நகத்தாற்
புண்படர்ந்திடக்கடைந்தநாட்புணரியைப்பொங்கி
விண்புகுந்தபாற்றுளியினிலுடுவினம்விளங்கக்
கண்புதைந்திடச்செறியிருள்விடத்தினைக்கடுக்கும். 14

வெந்துமையலினெண்டொடிவீசுவெண்டரளஞ்
சிந்துகோவையிற்செறியிருட்பகைதெறத்தனது
புந்திகொண்டுமுன்வெண்கதிர்ப்புரவலன்விடுப்ப
வந்தடர்ந்திடும்படையினுற்றுராகைமலிந்த. 15

துன்னுகாரிருட்பிழம்பினைநோக்கியதோகை
யென்னதாருயிர்கவர்வருநமனுருவிதுவோ
தின்னவந்திடுமலகையோதீயபாரிடமோ
கன்னிமீரிதென்னறிகிலனெனக்கலங்குவளால். 16

ஆலமேயுலகடர்ந்தவோவடைந்தவோகற்பம்
மேலெழுந்தனவடவையோகரியமெய்விரிந்த
காலன்செந்நிறக்குஞ்சியோவிதுவென்பாள்கரைவீழ்
சேலின்மெய்பதைத்துயங்குமின்செக்கரையிருளை. 17

[இதுமுதல் 12-கவிகள், சந்திரோதய வருணனை.]

நங்குலத்தொருகன்னியைமுயங்கினனரன்சீர்
சிங்கவென்றகங்கறுத்துமெய்சிவந்தெதிர்சினந்து
செங்கைவாள்விதிர்த்தெழுந்தபோன்றிளநிலாச்சிதறத்
திங்களம்பெருந்தேவெதிர்ந்தனன்புவிதிகழ. 18

வந்தமூலவெம்படையிருளிராவிராவணனாற்
சிந்தவெல்லையிருராகைச்சிலீமுகஞ்செலுத்தி
யந்தரத்தசரதசுதனன்றெடுத்ததிர்க்கும்
நந்தெனக்குரைகடற்றலைகிளர்ந்தநன்மதியம். 19

உடையவோருருட்டேரினனென்னுமோராழிப்
படையன்மேருமத்தாலுலகென்னும்பாற்பரவை
கடையவுற்றவெங்கடுவின்வந்திருள்கழிந்ததற்பி
னடையுமொண்சுதைநிகர்த்தெழுந்தனன்குணக்காலோன். 20

கடலெழுங்கடுநிகர்ப்பகாரிருண்மெலிந்தொதுங்கி
மிடையும்விண்ணவர்கடுப்பவான்மீனமவ்விண்ணோ
ரடையவுந்தொழவக்கடவுணப்பொடியணிந்து
விடையின்மீதெழும்பரனிகர்த்தெழுந்தவெண்மதியம். 21

கொடுத்தவெண்மதியமிழ்தினைக்கிட்டிசைக்குரவை
கிடைத்தபுட்கரமோகினிகெழுமுவானவர்கட்
கிடத்தகுமளவறிந்தியாவர்க்குமோரிமைப்பிற்
படைத்தபோன்மெனநிரைநிரையுடுக்கணம்படர்வ. 22

திரைப்பயோநிதிவாவியுட்டிங்களாம்பரதன்
நிரப்புமொண்கதிராமெனுநீள்வலைவீசிக்
கரைப்படுத்துமீன்புலர்த்துபுகசனப்பாறையின்மீப்
பரப்பிநின்றபோற்பொலிந்தனவுலப்பில்பம்மினமே. 23

கீற்றுவெண்மதிக்கேள்வனைக்காண்டலுங்கிளர்ந்த
வாற்றலாநகைத்தெரிவையினலர்ந்தசெவ்வாம்பல்
வேற்றுநாயகற்கண்டமெல்லியலெனவெருவிச்
சாற்றுமெல்லிதழ்க்கதவடைத்தனசரோருகமே. 24

பற்றுசோரனேடில்லினுட்படுமின்மேற்சீறி
யெற்றிவாரிமுனின்றிழிவியம்புகொண்கனைப்போ
லுற்றவண்டொடுங்குவிந்திடுவனசமுனுற்றே
மற்றைவண்டுதன்சிறகெறிந்திசைத்திடும்வறிதே. 25

வரைவிலாதளித்திடுமொருவள்ளறன்னிசைபோற்
பொருவிலாமதிப்புலவர்தங்கவிப்பொருள்போன்றுந்
தரையின்வானிடத்தெங்கணும்பரவிருடகர்த்து
விரிநிலாத்தொகைபரப்பிவிண்விளங்கியவிதுவே. 26

நள்ளிருட்குலமதிப்பகைதெறநனிநாடி
வெள்ளியங்கிரிக்கிடைந்தனவான்றனைமேவிப்
பள்ளிகொள்கடற்கிடைந்தனவச்சுதன்பாற்சென்
றுள்ளனந்தழிந்தனசிலபுதர்பொந்திலொளித்த. 27

அசரமாகுமோர்சிலையுநெக்குருகியானந்தங்
கசியநின்றவீர்ங்கதிர்கவர்ந்தேயுளக்களிப்பாற்
பசியகன்றவோர்பறவையுமெனப்பகர்ந்திடினே
நிசிதுமித்தெழுஞ்சசிதவநிகழ்த்துமாறரிதே. 28

கோக்களிப்புறுந்தண்மதிகண்டுகோகனகப்
பூக்குவிந்தனகுவிந்தனகரவர்தம்புந்தி
தீக்கொதித்தனபிரிந்தவர்மனமெனச்செப்பிற்
றூக்குமூழுளார்க்கமுதமும்விடமதாய்ச்சதிக்கும். 29

[இதுமுதல் 4-கவிகள், மன்மதன் பவனிக்காட்சி.]

அணிந்தெம்மன்னவனணுகினனணுகினனெதிர்
மணந்துநிற்றிரான்மகிழ்வொடுமகளிர்புமான்க
டணந்துநிற்றிரேலடுமெனுமொழிபலதந்தே
யிணைந்தவள்ளுவரொற்றல்போற்கடன்முரசிரைய. 30

ஓங்குவானுடுப்புகர்முகத்திருட்களிற்றேட்டி
வீங்குவேனிலம்பருவநற்றுணைவன்முன்மேவ
யாங்குமன்னிசைகாளக்கோகிலமிசைப்பக்
கோங்குமென்முலைத்தேவியுமொருபுடைகுலவ. 31

தூட்டவைங்கணைதூங்கியவாவம்வென்றாக்கி
யெட்டுமாதிரம்வென்றெளிரிக்குவிமேலேந்தி
வட்டவெண்மதிக்கவிகைமேதாய்வாவுதென்காற்றேர்
விட்டுவந்தனனுலகெலாம்பவனிவில்வேளே. 32

கந்தநீண்மலர்க்கைகதைவாட்கவர்ந்தொளிர்தேமாஞ்
செந்தளிர்க்கவசம்புனைந்தரிப்பரிசெலுத்தி
வந்தசித்தசன்பிரிந்துறைமகளிர்புமான்மேற்
சிந்துகட்கணைசிதறினன்றிகைத்துயிர்பதைப்ப. 38

[இதுமுதல் 4-கவிகள், சித்திராங்கதை காமமிகுதியால் வருந்தல்.]

பட்டவைங்கணைப்பாப்பினுற்படர்நிலாவிடத்தா
னட்டகங்குல்வெங்கூற்றினுளாலைவல்லிடியால்
முட்டியுட்புகுந்தென்றல்வெஞ்சூசியான்மொழிந்த
வட்டவெம்முலைபட்டவைவழுத்துவான்றுணிந்தாம். 34

ஆயவெள்ளமுந்திகைப்பமெல்லணையழன்மடுப்பத்
தோயுமொண்பனிநீருலையிரும்பினிற்சுவறத்
தூயமென்றளிர்கரிந்திடப்புரண்டனடித்தாண்
மேயசாந்தமுமிழைகளுநம்வெடித்தெதிர்விழவே. 35

விட்டிலிற்றுடித்தேவிழுமென்மலர்ப்பள்ளிக்
கட்டில்விட்டெழுமழுநகுங்கைவிரனுசி
முட்டியெண்ணும்பின்குறங்கிற்றன்முழங்கைவைத்தங்கை
கட்டம்வைத்துமண்ணேக்கிருகண்கணீர்கலுழும். 36

நையுமெல்லிடைநங்கைமீரென்செய்கேனென்பா
ளுய்யுமாறெனக்குண்டுகொலுரைக்குநிரென்பாள்
பையவொண்முகஞ்சுழித்தொளிர்பற்கறித்திடுவா
ளையகோவெனவரற்றுவாளின்னனவறைவாள். 37

[இதுமுதல் 11-கவிகள், காம மிகுதியால் பலபடப் பிதற்றல்.]

வேறு.

துங்கம்முறுதோழியராமெனவே
தங்கும்மனமின்றுதவிர்த்தனனால்
எங்கும்புகழ்சந்தமிதென்றெரிவை
யங்கம்மிகவெப்புறவப்புதலால். 38

சமனால்விடுதூதரெனச்சமைவீர்
துமியாதிரெனச்சொலவுந்துணியா
திமரீரிதெனாவுடன்மேலெறிவீர்
தமராகுதிரோவுலைநீர்தனியே. 39

செல்லேநிகர்மேனிதிறந்தெரியாய்
நில்லாவிமையுட்படுநேர்மைபெறாய்
கல்லாவிதமேபுனல்கால்விழியே
நல்லாயலநீயிடர்நல்குதலால். 40

ஆணாயகனாமெனவாகுமுருக்
காணாவெளியைத்தழுவிக்கழுவாய்
பேணாவிரல்கன்றுவைகூடல்பெறாய்
வீணாகவிதென்வினைமென்கரமே. 41

நீயுன்னுமனன்வரைநீள்புயமேற்
றோயுந்தகுதித்துறைதுன்னுகிலா
யேயென்னளவேனுமடங்குகிலா
யாயுந்தரமென்வறிதேயகமே. 42

சதுருற்றபொனாலிழைசாளரவாய்
விதுமிக்கொளிவீசவிதிர்த்துடலம்
நிதிதுற்றுலைநாகநுழைந்தனபோற்
கொதிபெற்றகணைந்துகுழைந்தறைவாள். 43

மென்னூலிருகூறுசெய்மெல்லிடையீ
ரின்னாளிரவாதலினேயிதுபோழ்
தென்னேகதிரோனுமியங்குவனால்
பன்னாதனவெம்மைபரப்பியரோ. 44

மின்னுஞ்சவிதாவெனின்மேவுமிரா
வென்னும்பெயரெய்துவதெங்ஙனுல
குன்னும்மதியாகுமதித்துணர்வாய்
தென்னன்மகளாய்வருசெந்திருவே. 45

என்றேயொருசேடியிசைப்பவிரு
குன்றேய்வுறுகொம்மைகுலக்கொடியீ
ரென்றாழலவென்குகிரென்கொலிதின்
குன்றுவொளிவெம்மைகுறித்திலிரோ. 46

விசயற்பிரிவுற்றுமெலிந்துமன
மிசிரத்துழல்வுற்றுமிகத்தளர்வாய்
நிசிநற்பதியேகவினேரிழைநெஞ்
சசைவற்றறிமியன்றனளங்கொருமான். 47

பின்னும்மதியென்றவர்பேசமட
வன்னம்மிடையுந்நடையாயிழையா
டன்னெஞ்செரிதந்தொளிர்தண்மதியை
யின்னும்பலபேசவியைந்தனளால். 48

[இதுமுதல் 9-கவிகள், சந்திரனைப்பழித்தல்.]

வேறு.

புண்ணிற்புகுத்துந்தழற்கொழுந்தைப்பொருவத்தனதுநிலாக்கற்றை
விண்ணுற்றெனதுமெய்விதிர்ப்பவீசிவெதுப்பிவ்வெண்ணெருப்பைத்
தண்ணங்கலைவெண்மதியமெனத்தக்கோர்சாற்றலெத்தகைத்தென்
றெண்ணிற்காணுமுலகினைப்பொய்யென்பார்க்கிதுவுமியல்பாமே. 49

பிறந்தாயமுதப்பெருமடுவிற்பின்னேகங்கைதனில்வளர்ந்தே
யுறைந்தாய்சிவனேடுறவென்று லுன்னையுலகஞ்சிரிக்காவோ
நிறைந்தாரறிவானேடுமிம்மூன்றுந்தகநீநேர்ந்துமுய
ரறந்தானகற்றியொருதமியன்கனமேலழலினுலோனே. 50

எண்ணுவிரகமெய்தினர்மீதழலுநீர்மையெய்திடினும்
கண்ணேட்டந்தானினக்கிலவோகலந்தேனினதுமரபென்றே
நண்ணுக்கருணைப்பேயுமடநல்லார்க்கிரங்குநனியென்றிம்
மண்ணேருரைக்குமொருவாய்மைமதியாமதியென்மதிப்பெயரோய். 51

உலகமுழுதும்வெலுங்காமனுடனுனீறுச்செய்யொருபுத்தே
டலையிலேற்றுனினையஞ்சியென்னிற்களபந்தழுவுநகிற்
றிலதமெழுதுநறுநதன்மைதீட்டுவிழியாரிடந்திங்கா
ளிலகுகதிர்வாள்வீசியிகல்செய்வானெதிர்தலியல்பன்றே. 52

வல்லார்க்காண்கினுளநடுங்கிமறைந்தேயோடிவலிசிறிது
மில்லார்க்காண்கினெதிர்த்தொருவாள்வீசியிகல்செய்வீரனைப்போல்
வில்லார்பரிதிவெளிவரினேவிதிர்த்துக்கருதிமெய்கரப்பாய்
செல்லாநின்றசேயிழைபார்மாட்டேமதிநின்சேவகமே. 53

அற்றாயல்லைகடனுகர்ந்தோனதட்டினன்றேயறச்சிதைவு
பெற்றாயல்லையொருவீரன்றக்கன்மகத்தைப்பெரிதடுநாள்
மற்றோர்மத்தாற்கடைகடலிற்குழைந்தாயல்லைமடநல்லார்
உற்றேயிழைந்ததீவினையாலுயிர்போழ்கதிர்வாளுடுபதியே. 54

உள்ளம்வருத்தவுடல்வருந்தவொளிவாள்வீசியுயர்திங்காள்
வெள்ளைவிடையன்சடைமேனின்வெம்மைதணிப்பான்விண்ணதியை
யள்ளிப்புதைப்பவவனுதல்வாயழலங்காக்கவாக்கினையாற்
பிள்ளைமதியின்றிறனிதெனிற்பெரியமதியென்பேசுவதே. 55

கானந்திரியிற்கவர்வரெனக்கரவின்மடவாரூன்கவர்ந்தே
வானந்திரியம்புலிதன்னைவல்லேகவரும்வகைபுணர்வீர்
ஊனம்பொறுத்துநல்லுணர்வையுணராதாரினுறைந்தென்மே
னூனம்புழுகும்வீசிமிகவருத்தாநிற்குமடநல்லீர். 56

கண்டேன்வடவைக்கனல்விடமுங்கலந்தமலரைக்கணைமதனன்
வண்டார்நாரிபுகைத்தலினிமதியைவெறுத்தன்மதியலவே
யுண்டேகளிப்பச்சுரும்பரினமுகுக்கும்பிரசமலர்க்குழலீர்
விண்டாணிகர்ப்பக்கரந்தமுமஞ்சனமேலிட்டவிழியாலே. 57

[இதுமுதல் 6-கவிகள், மன்மதனைப் பழித்தல்.]

காய்வாய்கணையைந்துகைத்தெனுடல்கனலச்சிறிதுங்கருத்தின்றி
யோய்வேயறச்சித்தசமுந்நீருலகங்காக்குமொருமுதல்வன்
சேயாயமுதத்திருமகட்குஞ்செய்கைமடவார்திறத்திற்றேற்
றாய்போற்பிள்ளையெனத்தரணிசாற்றுமொருசொற்றவிர்த்தனையால். 58

வெண்ணெய்நிகர்க்கும்வெண்பொடியைமேனியணிந்தவிமலனுதற்
கண்ணைவெறுக்குந்திறனில்லாய்கண்டாற்கருகிக்கரைந்திடுவாய்
பெண்ணைவருத்துந்திறங்கற்றாய்பெண்ணுனுயிர்முன்பெற்றெழுந்து
மெண்ணுமானஞ்செய்ந்நன்றியில்லாய்மதனப்பெயரேற்பாய். 59

மன்னுவிரகவனல்மூட்டிவலிசெய்கணையாமிருந்தைகுவித்
துன்னெஞ்சிரதத்துருத்தியமைத்துடலக்குகையுளென்னுயிராம்
பொன்னையுருக்குந்தொழில்செய்வாய்முழுதுங்கவரப்புகுந்தாயோ
தன்னெஞ்சறியப்பொன்கவருந்தட்டாமாயன்றன்மகனே. 60

மட்டுக்கணையைக்கொண்டேயிவ்வுலகைமயக்கவருமதனே
தொட்டிக்கணையைச்சிவன்மீதிற்றொலைவுகண்டுமயர்ந்தனையோ
விட்டுமுயிரைக்கழிமடனேமீட்டுமதுவேவவுகந்தனையான்
முட்டநனைந்தோர்க்கிரமிலையென்னுமாற்றின்முழுகினையோ. 61

தென்காற்றிரதமிசைநொடியிற்றிசையெட்டிரண்டும்வலம்வருவோ
யென்பாற்செலுத்தும்வெங்கணையையெனக்கிவ்விரகமளித்தவொரு
மன்பாற்செலுத்தினுகாவோவந்தேமணந்தெனுயிர்தரினே
யன்பாற்குலத்தேவாய்நினைந்துன்னடியேநிதமும்வணங்குவெனால். 62

வயிற்றுத்தேவும்வல்லபையையமணக்கும்படிநின்வல்லபத்தாற்
குயிற்றுமதனேயெங்கோனைக்கூட்டுந்திறமைகொண்டிலையோ
செயிர்த்துச்சூரம்பவனின்மேற்செலுத்துமெனினுந்தீய்ந்துபிற
வுயிர்க்குத்துயர்தீர்த்தறன்காந்தவொருநீயிடைதலுரிந்தன்றே. 63

[இதுமுதல் 2-கவிகள், தென்றலைப்பழித்தல்.]

எங்கண்மலையிற்குடியிருந்தேயென்னைத்தினையுமதியாமற்
பொங்கிக்கனலையிறைத்தென்மேற்புகுவாய்தென்றலீதென்னே
யிங்கென்வயிற்றுரோமவரியிரும்பைமறைத்தமேருவென்றன்
கொங்கைதனைமுன்பகையின்னுமறவாதெதிர்ந்துகொல்லுதியோ. 64

சுமந்துதிரிவாய்மதனதனுத்துஞ்சியெழுவாய்வனமதனு
ணிமிர்ந்துபொலிசாளரப்புழைவாய்நெருங்கித்தழலோய்வறப்பொழிவா
யமர்ந்துநடத்துமொருமானையடுக்குந்தடத்திவ்விழிமானைத்
திமிர்ந்துநெருங்கேற்றென்காலேசிரத்தின்மருங்கேநின்காலே. 65

[சமுத்திரத்தைப் பழித்தல்.]

உலகைவிழுங்குவாரணமேயுன்னைவிழுங்குங்காரணமே
யிலகுமுனிவனாரணமேயெனவெங்கேண்மைபூரணமே
கலகம்புரியிற்காரகயேகாணெம்வேலின்மாரகமே
நலியுமிடையேன்சீரகமேநையக்கதறேறற்பாரகமே. 66

என்னேயுயர்ந்தென்மனநலியவெறியாதீர்சந்தனமலிய
முன்னார்வசந்தவெம்புலியைமுனியுங்ககனத்தம்புலியை
மன்னுமதனத்தப்பிலியையமாற்றப்புகுவீர்தப்பிலையே
மின்னேயிகலுங்கொடியிடையீர்விகங்கமகலுநடையுடையீர். 67

முல்லையரும்பைக்கவற்றுநகைமுகிழ்மென்முலையீர்தாநீங்கு
மெல்லையகன்றமிந்துவுடனிரவுமகலாதென்னேயோ
வொல்லுங்கணிதநூறணந்தார்க்கொல்லாவோயானுணர்குபுநீர்
வல்லையறைமினெனப்பறைந்துயயங்கும்வலையிற்படுமான்போல். 68

விழுந்தவிரதமூழ்கிற்றேவியாளம்விழுங்கியுமிழ்கிலவோ
வெழுந்துகுணபால்வருமேயோயாதோவறியேனிரவியே
மொழிந்தகடிகைமுப்பதும்போய்வாராதென்கொல்மொய்குழலீ
ருழுந்துபுரளுமேல்லைவையுமோரிடத்தினில்லாவொருநீரான். 69

எண்ணிமதனன்விடுங்கணைமெய்யீர்ப்பவதனுளுலைநாக
நண்ணப்புகுத்திற்றெனவுடலநடுங்கநுழையுநிலாக்கூற்றை
கண்ணற்கரியசூசியினிற்றென்காற்றுளைக்குங்கணமோயாப்
பெண்ணென்றெழுந்திப்புவிதூற்றிப்பட்டபோதும்பேதையரே. 70

[சித்திராங்கதை மூர்ச்சித்தல்.]

இன்னபன்னியாற்றுமைமயெறிக்குங்கிரணமணிமவுலி
மன்னன்மகண்மென்மலரணைமேன்மடிந்தறொப்பச்சாம்பினளாற்
கன்னற்சிலைவேணிலமலர்க்கணையயுகைத்துக்கைவிடவே
யன்னவமைமயஞ்சிலதியர்களங்தோவென்னவரற்றினரால். 71

தொட்டார்கரத்தைப்பாட்டடியைத்துடிப்புண்டெனவேதுயர்நீக்கி
விட்டார்கலைவமேன்மேலும்வீசாநின்றார்பெரும்பீலி
யிட்டார்பூப்பொட்டயினிநீரொடுக்தேதெய்வமேத்திமிக
நட்டாரகலார்யாவருமங்நங்கைக்கிசைந்தநாரியரே. 72

[இதுமுதல் 5-கவிகள், விடியற்கால வருணனை.]

வேறு.

கத்திகைக்குழன்மின்னுற்றகழிதுயர்க்கிரங்கிவானிற்
றத்தெழுபரித்தேராணைச்சார்தியித்ததிசாராயே
வித்தகைத்தாகுமாறென்றெற்றிமோட்டுணர்த்தலேபோற்
சித்திரச்சிறைபுடைத்துச்சேவலங்கொலித்தமாதோ. 73

திங்களுமதனுங்கங்குற்றென்றலுங்கணங்கொண்டிங்கோர்
மங்கையைவருத்திற்றென்னுமந்திரித்தொருபூவன்னோர்
பங்கமுற்றொழியவெய்யோன்பதுங்கிநின்றெறிநதமானத்
துங்கவெண்ணிறங்கொண்டோங்கிச்சுக்கிரனுதயஞ்செய்தான். 74

இன்னிலைகண்டுந்தாழ்வுற்றிருத்தனிற்சழுகன்றிம்மின்
றுன்னுவெந்துயரமாற்றுடுருசின்வாவெனவேகூவிற்
றென்னவின்னிசையெழுப்பியிருந்தகார்க்குருவிபின்னர்
மன்னரன்றணைப்புள்ளெல்லாம்வைவபோலொலித்தமாதோ. 75

நண்புறகுரவன்சொல்லால்ஞானம்வந்தெய்தும்போழ்தி
னுண்மலிமருட்சிபையவொதுங்குமோருள்ளம்போன்றுங்
கண்படைகொள்வான்போர்த்தகரும்படாமெல்லநீக்கி
மண்மகள்கிளர்வபோன்றும்வயங்குகீட்டிசைவெளுத்த. 76

சசிநிறையொளியுந்தேயச்சலநிதியொலியும்வீய
நிசியெனுங்கொடியன்மாயநிகழ்கயிரவம்வாய்மூய
விசியறுபதநாண்டீயவில்லியினுராமுமோய
நசிவுறத்தென்காறேயநவில்பதம்புலரியாய. 77

[இதுமுதல் 4-கவிகள், சூரியோதய வருணனை.]

கொடியகோலோச்சுமன்வெங்குடையின்கீழமர்ந்தமாந்த
ரிடிபெறுமரவத்தெஞ்சிவாய்குவித்திருந்தேபின்னக்
கொடியவன்றனைக்காய்ந்தோர்நற்கோன்வருங்குறிப்பைக்கண்டே
யிடிதவிர்ந்தார்த்ததொப்பமிடைந்தபூவெங்கும்வாய்மை. 78

இசைபெறவருஞ்செல்வற்கண்டெழுந்தெதிர்முகமலர்ந்து
நசைபெறக்குலாம்பரத்தைநங்கைபோன்மரைமலர்ந்த
பசையறவரக்கண்டேகபாடந்தாட்படுத்திநிற்குங்
குசவிலைக்கோதைமானக்குமுதம்வாய்குவிந்தமாதோ. 79

நன்னிதிக்கொருவற்கண்டநல்குரவொருவன்போன்றும்
வின்னிலைக்கொருவற்கண்டவீரமிலொருவன்போன்றும்
பன்னுநூற்கொருவற்கண்டபடிப்பறுமொருவன்போன்றுந்
தன்னொளியொருவித்திங்கடவித்துநின்றயங்கமாதோ. 80

வேறு.

விடுத்தவருஞ்ஞெதயவெங்கனற்கோலானுடுப்படைகள்
　　வீய்ந்துமெய்சோர்
வடுத்துழுலகாட்சியைவிட்டகன்றிலனென்றம்புலிமீ
　　தழல்வான்போன்றுந்
தடித்தமுலையரிமதர்க்கட்டையலுக்கித்துணையலக்கண்
　　டந்தான்மீதிற்
கடுத்தனவொத்துடல்சிவந்தக்கனலியொளிவாள்வீசிக்
　　கடிதின்வந்தான். 81

விரகச்சருக்க முற்றும்

(ஆக சருக்கம் 13-க்கு கவிகள் - 662.)



## (14 ஆவது வழுதிச்சருக்கம்)

இச்சருக்கத்தால், பாண்டியனது சபையின்கண்வந்து ஒருமாது சித்திராங்கதையின் தன்மையைக் கூறுதலும், அதுகேட்டுவேந்து அரசன் மந்திரிகளை அருச்சுனனை யழைத்துவர ஏவுதலும் அவர்கள் வருதலும் பிறவுங் கூறப்படுகின்றன.

---

மரைமலருங்கண்மலருமறையவர்கைம்மலருமிக
மலரவெய்யோன்
விரிகதிரைப்பரப்பியெழவீரர்பரிகரிமிடையும்
விண்டோய்வாயின்
முரசதிரக்கனைகழற்கான்மன்னவருமுன்னவரு
முறையிற்சூழக்
கரைபொருதீர்த்திகையணுகிக்கைதவனுங்காலைவிதி
கழித்தபின்னர். 1

[இதுமுதல் 2-கவிகள், பாண்டியன் அவைச்சிறப்பு.]

இந்திரன்றன்வசந்தமிதற்கிணையிலெனுமெழில்கொடிரு
விசும்பினோங்கிச்
சந்திரன்றனகடுரிஞ்சுந்தனிச்சிகரத்தமனியமண்
டபத்தைச்சார்ந்து
கந்தருவர்வியந்துருகக்கைதடவியாழ்மழலை
கனிந்தபாடற்
றந்தரம்பைநாணுபுநற்சதிமுறையின்மாதர்நடந்
தந்துநிற்ப. 2

திறையளித்தமன்னர்குழாந்தனித்தனியேவந்தெதிர்சே
வித்துநிற்பக்
கறைதவிர்ந்தமதிமுகமென்கழைத்தோளார்வெண்கவரி
கைகொண்டாற்ற
மறையவராசிகணவிலவந்தியர்நல்லிசைகூற
மதியோர்சூழ
விறைவழுதியரியணைமீதிந்திரனெஞ்சலம்வரவீற்
றிருந்தானன்றே. 3

[இதுமுதல் 2-கவிகள், சித்திராங்கதைபின் தாதியர் யோசித்தல்.]

செஞ்சுடர்வந்தஞ்சமெனச்செழுங்கதிர்க்கையாற்றனுட
நீண்டத்தீர்ந்தாள்
பஞ்சவன்மின் றுயர்சிறிதல்லதுணருமிளம்பிறைநுதல்வெம்
பரவையல்குல்
வஞ்சியர்மிக்குவகையகம்வாய்த்தனரென்னினுமிருண்மேல்
வருமென்றெண்ணி
யஞ்சிமகராலயம்போந்தடிபணிவாற்கறையேமே
லடுமாலென்று. 4

உசவியொருவருக்கொருரொளிகளுலுமாமணியொண்
டொடியாட்கோத
வசமிலவென்மனவிருத்திமயிலனையீர்நும்மதியின்
வழிபோமென்னக்
கசடறச்சூழ்ச்சியினிதனைக்களைகுநர்யாரிறைமுனெனக்
கணிக்கும்வேலை
யசைவறுமோவியம்போன்றாரனைவருமோர்மின்னிசைந்தத்
தாணிசென்றாள். 5

[சேவிலித்தாய் அரசவையடைதல்.]

சேடியருந்தோழியருஞ்செவிலியருங்கண்ணிமையிற்
சிறந்துகாப்போர்
கோடியருமிருந்துமென்மின்குமரிகுலைந்தனளெனக்கோ
பிக்குங்கொல்லோ
வேடிகைவில்விசையனெனவுவகைவிளைதருங்கொல்லோ
வேந்தென்றாச
லாடுமுளத்தொடுமேகியணிமறுகுகடந்தவைமு
னடைந்தாளன்றே. 6

[சேவிலி அரசனைவணங்கி அச்சத்தோடு வசனிக்கத்தொடங்கல்.]

அணைந்தவுயிரோவியம்போன்றழகொழுகுமச்செவிலி
யனம்போல்வந்தே
யிணைந்தநகிற்றதும்புறநின்றிறைஞ்சியெழுந்திசைச்சுரும்பர்க்
கிளந்தேனல்கு
மணம்பெறுதார்ப்புயச்செழியன்மகிமயங்கத்தன்னயன
மைவாள்வீசித்
துணிந்தமொழியுளங்கரப்பவெளியீர்த்துச்சூர்கொடுநாக்
குழறச்சொல்வாள். 7

[செவிலி, சித்திராங்கதையினிலைமையை அரசனுக்கறிவித்தல்.]

நஞ்சமெனுந்தென்காலைநள்ளிருளைநமனென்பா
ணளிர்வெண்டிங்கட்
கஞ்சியுடல்பதைபதைக்குமள்ளியிடுஞ்செஞ்சாந்தை
யனலேயென்பாள்
விஞ்சுமெழிற்கொடியிடைசேல்விழிமொழிதேனம்பாவை
மென்பூங்காவிற்
பஞ்சவரினடுப்பிறந்தோன்றனைக்கண்டேயிவையெல்லாம்
பட்டாளின்றே. 8

[அரசன் பெருமகிழ்ச்சியுறல்.]

அருமுனிவர்படிவமெதிர்ந்தடைந்தவன்பின்பண்டைவடி
வாகநோக்கித்
தெரிவைமுதுக்குறைந்தனளெந்தேவாவென்றுளநடுங்கிச்
செப்பிநிற்க
விருபுயம்விண்ணெதிர்ந்துசுடரிருந்தமணிவலயநிமிர்ந்
தெழுந்தேயோட
வருமுவகையூறிவெளிவந்ததெனப்புளகமுற்ற
வழுதிக்கன்றே. 9

[இதுமுதல் 3-கவிகள், அரசன்றனதூழ்வினையைப் புகழ்தல்.]

வேறு.

துன்னுபேருவகையென்னுந்தோமறுமுவரியாழு
மன்னவன்யாருங்கேட்பவான்புகழ்பெற்றவீர
நன்னலமருகன்றன்னைநல்கியநாரிபாகன்
றன்னிருசரணநாளுந்தலைக்கணிசெய்வேனென்றான். 10

செஞ்சடைதிகழுமுக்கட்டேவனத்திருந்துகோலம்
மஞ்சுறழ்மேனிநம்பிவரித்திவணெளிதின்வந்த
தெஞ்சிறுபுதல்விநோற்பினேற்றமோயானோநோற்ற
செஞ்சிறப்பதினோமுன்னோர்செய்தவப்பயனோவென்பான். 11

தேடுநற்பொருடன்காலிற்றென்படல்சிவணத்தாம்போ
யாடுபுனிழைநீர்க்கங்கையருகுறன்மானவூழாற்
கூடியவெளிதினெற்கிப்பயனெனக்களிபோய்க்கூறி
மாடுதுற்றிருந்தவைவேன்மன்னர்மந்திரரைநோக்கி. 12

[அருச்சுனனை அழைத்துவர அரசன் ஆஜ்ஞாபித்தல்]

இத்ததியேகிநீவிரிருங்கடற்றானைசூழத்
தத்துவெண்பரித்தேர்க்காளைதனையிவண்டருதிரென்றான்
புத்தமுதொத்தசெய்திபுகன்றமின்னுடல்பூரிப்ப
வித்தமும்பிறவுநல்கிவிடுக்குமக்கொற்கைவேந்தன். 13

[சித்திராங்கதை துயர்நீங்கல்.]

அம்பிடைந்தோடநாண்விட்டடல்செயும்பகத்தாளோடித்
தம்பிறைநுதலாட்கோதத்தன்றுயர்முழுதும்விட்டாள்
பம்பியவல்குலோங்கிப்படரமேகலைவெடித்த
வம்பறுத்துயர்ந்தகொங்கைமனநிலைவழுத்தப்போமோ. 14

[மன்னர்மந்திரியர் அருச்சுனனை அழைத்துவரச்செல்லல்.]

தென்னவன்பணிமேற்கொண்டதேர்ச்சியர்திணிதோண்மன்னர்
மின்னுமிழ்வயவாள்வீரர்வெங்கரிபரிதேர்சூழக்
கன்னியர்மிடையவள்வார்முரசினங்கறங்கக்காமர்
மன்னியமதனப்பள்ளிமன்றலஞ்சோலைவந்தார். 15

கழிமடமச்சநாணம்பயிர்ப்பெனுங்காவல்வேலி
யழிதரவொருமின்பட்டதறிந்துமன்னேவவந்தோர்
வழிபசுந்தேறற்பூங்காமருவியதுறைத்தேமிப்பால்
விழிசகசிரத்தோன்மைந்தன்செயலினைவிரிக்கலுற்றாம். 16

கோற்றொடியதாத்தேறற்கொண்டிதங்கூறிநீத்து
மாற்றருமனங்கன்வாளிமருமம்பாய்ந்துழக்கநொந்தே
யாற்றலுமுணர்வுஞ்சிந்தியபந்தரிற்சென்று தூய
நீற்றொளிபாவுமேனிநின்மலரீட்டநேர்ந்தான். 17

அன்றிராமுழுதுந்தென்றலம்புலியடர்த்தபோரிற்
சென்றராப்பிணித்துவாங்கத்திரிந்தமத்தொத்தமேனி
குன்றினுலுடைந்துநின்றகுரைகடற்கொத்தநெஞ்ச
மென்றியாமிசைப்பதல்லான்முழுதவன்றுயர்யார்சொல்வார். 18

வேலைவாயிரவியோடுமேதகுமுடிருங்கண்டான்
காலைவாய்நியமமுற்றிக்கருத்தினிதாய்ந்துநிம்ப
மாலைதாழ்புயவேற்கொற்கைமன்னனத்தாணிமேவச்
சாலவேயுன்னிநின்றான்வரும்பெருந்தானைகண்டான். 19

வேறு.

அன்னவத்தொலியாமெனத்தூரியமலற
மன்னுவிண்ணுருமாமெனவாரணம்பிளிற
மின்னலாமெனவீரர்கைவேலொளிமிளிரச்
சொன்னதேருருட்டொலிபரித்துழனிவிண்டொடர. 20

[இதுமுதல் 4-கவிகள், பாண்டியன்றன்மேல் யுத்தத்திற்குவந்தானென]
[அருச்சுனன் சினமுறல்.]

கண்டுகண்ணழற்பொறிதரப்பற்கறகறத்து
விண்டுலங்குவல்லிடியெனவெடிபடநகைத்துத்
துண்டமொத்திடமீசையுந்துடித்தனன்போர்க்கு
மண்டிமீனவன்வந்தனனுமெனமதித்தே. 21

அறைகழற்சுராசுரரொடுமளக்கர்சூழ்வைப்பி
னிறைவர்யாரும்வந்துதவினுமிக்கணத்திவனைக்
குறைசெய்தென்னுயிர்க்கோதைகொண்டகல்வலென்றுன்னிக்
கறையில்வெஞ்சிலையெடுத்தனனகலிடங்கலங்க. 22

எண்டிசாமுகத்திறைவர்கடுணுக்கமுற்றிரங்க
விண்டநாலிருவேழமும்வெருவவிண்கலங்கப்
பண்டைமூவருந்திகைப்பப்பன்னகத்திறைபதைப்ப
வண்டமாமுகடசைதரவடித்தனன்சிலைநாண். 23

சிஞ்சிநீமுகத்துழனிதஞ்செவிபுகத்தியங்கி
விஞ்சுமாமதமொழிதரவெருவியபூட்கை
செஞ்சவேகுகற்கியுநடைதீர்ந்துநின்றுழன்ற
துஞ்சினரின்மெய்மறந்தனர்தோள்வலிமிக்கோர். 24

[அமைச்சரு மன்னரும் அருச்சுனனைப் பணிதல்.]

ஆயகாலைநின்னபயம்யாமருடியென்றறைந்தே
தூயமன்னருமந்திரத்தலைவருந்துவன்றி
வீயடர்ந்தவேல்விசயனடிமிசைவீழ்ந்து
காயமோடுளநடுங்கக்கைகட்டிநின்றனரால். 25

[அருச்சுனனவர்களை வினவுதல்.]

தொழுததன்மையுநின்றிடுநிலைமையுந்தூய
விழியினோக்கிவர்வருவினைவேறெனவெகுளி
முழுதுநீங்கினன்பரிவொடென்முன்னருற்றதனைப்
பழுதறப்பகருதிரஞ்சலென்றனன்பகர்வார். 26

[2-கவிகள் அவர்களுற்றவை கூறுதல்.]

மழலைமென்மொழிமங்கைதன்கடிமணமகிழ்த்து
வழுதியொல்லையின்விளிமினென்றெம்முடன்வழுத்த
விழைவொடுற்றனமையவவ்வேல்விழிநின்னாற்
கழியுமாரிருட்பட்டவையாவையுங்கண்டே. 27

செற்றமாமணிகுயிற்றெருமுடிதிகழ்செம்பொன்
பொற்றைவந்தெனநிற்கணிபூடணம்பலகொண்
டுற்றவையமொன்றுணர்கெனவருகுறவோட்டிக்
கொற்றவீரவேறிதிற்கடிதென்றுகைகுவித்தார். 28

[அருச்சுனன் மகிழ்வுறல்.]

அன்னசொல்லமிழ்தள்வழிப்புக்ககநிறைந்து
துன்னிமேல்வழிந்துறவபோன்முறுவலரும்பினனாற்
பன்னகப்பணத்தல்குறிம்பனிமொழிச்செவ்வாய்
வின்னுதற்சசிக்கொருபதியருளுவில்வீரன். 29

[இதுமுதல் 9-கவிகள், அருச்சுனன் நந்தவனம் விட்டு
வந்தற் சிறப்புக் கூறுதல்.]

விழியினுக்குறுமாடவர்பெண்மையைவிழையத்
தழுவிமுன்னுருத்தண்பிறைச்சடையன்கட்டழலாற்
கழிமனோபவன்மாறுருக்கொண்டெனக்கவினச்
செழியனீந்தணிதிருத்திமெய்சிந்தையொன்றெண்ணி. 30

கோதில்கச்சரையசைத்ததிற்குற்றுடைவாளார்த்
தேதில்பொற்கவசம்புனைந்தேந்திவில்லிடக்கை
போதின்மாரிபெய்திமையவராசிகள்புகலச்
சீதைகொண்கனைச்சிவணவேறினன்செம்பொறறேர்மேல். 31

தக்ககேண்மைகொடாபதருந்தமக்கியைந்த
மிக்கவூர்தியின்மேவினர்விரிமுகமுரசந்
தக்கைசல்லரிதவுண்டைதண்ணுமைதுடிதாளங்
கைக்கவர்ந்தபேரிரட்டொலியெண்டிசைகலங்க. 32

வேறு.

கொமைவளர்முலைமாமலைவிழிவேலிடைகொடிகூன
லமைபிறைநுதலாரபிநயமிகநாடகமாடப்
பொமையுயிர்பெறலேய்வுறமெழின்மடவார்புகழ்பாட
வமைகிர்தோளாராலமெடுத்தங்கருகேக. 33

நிலவொடுசவிதாவலகறவந்துநிறைந்தேபோற்
பலமணிவட்டக்கவிகைநிறைந்தம்பரமேவக்
கலவைகொளிமரீரணிமறுகெங்குங்கழிபோதக்
கலகலகலவென்றெலிவளைமாதர்கைவீச. 34

பம்பம்பம்பம்பமெனமுரலப்பலநாகு
பும்பும்பும்பும்மெனவிரலைபுலம்பப்போய்
திம்திம்திம்திம்திம்மெனமுரசத்தெழிபோதத்
தொம்திம்தரிகிடதோமெனமுழவின்றெனிகூற. 35

மின்னியவோடைமதாவளமுகிலெனமுன்மேவ
அன்னவமேல்வருதிரையெனவாசிகளருகேகப்
பொன்னிறமேருவிதாமெனவலகறுபொறிபோதப்
புன்னிகரம்மெனவீரர்செறிந்திருபுறநோ. 36

இந்திரபூபதிதந்தவில்வீரனிதோவந்தான்
சுந்தரமவுலிசுவேததுரங்கத்துரைவந்தான்
சிந்துகலைப்புவியாடவர்தந்திலகன்வந்தான்
வந்தனன்விசையனெனுவுயர்பீலிமுன்வந்தோத. 37

வாரிகவர்ந்தெழுமாமுகிலொண்சுடர்வடமேரு
நேருறவந்துவயங்குவபோனிகாருதேரின்
வீரியவாருசிகாமணிமேவுபவனிகாண
நாரியரெனுநவிரங்கணடித்தவைநவில்வேமால். 38

வழதிச்சருக்க முற்றும்.
(ஆக சருக்கம் 14-க்கு கவிகள் - 700.)

## [15 - ஆவது உலாவியற்சருக்கம்.]

இச்சருக்கத்தால், அருச்சுனன் மதுரைத் திருவீதியின்கண் வரும் பவனிக்காட்சியைக்கண்டு காமமிகுதியால் மாதர்களுற்ற தன்மை கூறப்படுகின்றது.

[12-கவிகள், பவனிநோக்கப் பெண்கள் வருதல்.]

சுந்தரன்றூதன்வெங்மீச்சூரல்கொண்டுவெஞ்சூரன்
றந்தமைக்கரியகூந்தற்றனிப்பிறைநுதலாள்கொங்கை
மந்தமாத்தன்றேட்கந்தின்வாய்ப்பவானவர்கோன்மைந்தன்
வந்தனனென்னத்தேன்வீழ்வண்டெனமாதர்மொய்த்தார். 1

மயினிகர்சாயலாரும்வளைநிகர்குருக்கணாருங்
குயினிகர்குழலினாருங்குழனிகர்குரலினாரும்
அயினிகர்விழியினாருமமைநிகர்தோளினாரும்
வயின்வயினடர்ந்துமேன்மேன்மன்னனைநோக்கிநின்றார். 2

சாளரந்தன்னினீண்டதம்மனைவாயிறன்னிற்
சூளிகைமுன்றிறன்னிற்சுருங்கையிற்றெற்றிதன்னின்
மாளிகைதனிற்செய்குன்றின்மாடநீண்முகப்பின்வேய்நேர்
தோளியர்மனமுங்கண்ணுஞ்சுகம்பெறநோக்கிநின்றார். 3

சோதிவின்னுதலார்சூதேய்சுந்தரநகிலாரோடிக்
காதடர்ந்தெதிர்ந்துநாசிகதுப்பிணையளக்குங்கண்ணார்
பேதையர்முதலாக்கூறும்பேரிளம்பெண்ணீறாக
வீதியினெதிர்ந்துமொய்த்தேவெள்ளிடையின்றிநின்றார். 4

காந்தியினுலகைவெல்லுங்கனகவெற்பிரண்டுவிண்மீ
தேந்துமோர்கருவியின்றியிராவெனுமனுமானத்தாற்
றேய்ந்தசிற்றிடையுமுண்டென்றுணர்தரத்திகழுமின்னார்
காந்தமுன்னோடுஞ்சூசிகடுத்திடக்கடுப்பின்வந்தார். 5

துஞ்சலில்சுரரைக்காப்பான்றோய்புனற்சடையோனுண்டே
மிஞ்சியவிடம்வந்தஞ்சிவிழியெனப்பெயர்பூண்டுற்ற
வஞ்சியரணிசெய்வண்ணமகண்மிசைச்சீறிக்கைசேர்
செஞ்சுடர்க்கலன்பறித்துத்தெருவெறிந்தோடிவந்தார். 6

தொட்டுவிண்மதியைமுட்டுஞ்சூழ்மணிமாடநின்மேற
யிட்டடிபெயர்த்தொவ்வொன்றாயிழிந்துமேனிலையோரேழும்
விட்டிடையடர்ந்தமேகவெளிவருவிதுநிகர்ப்பக்
கட்டுவம்பெதிர்ந்துதள்ளுங்கனதனமடவார்வந்தார். 7

குடம்புரையுதரங்காஞ்சிகுலைமுழவுறழ்மருங்குல்
விடந்திகழ்முகட்டுக்கொங்கைவெண்சரோருகமுகச்சூன்
மடந்தையங்கொருத்திபையவந்துநோக்குற்றுமாலா
லுடைந்தமத்தமுதமென்னவுள்ளுடைந்தாவிநைந்தாள். 8

மண்படர்ந்திடிற்சிதைப்பர்மாந்தர்தண்டினிலென்றஞ்சிப்
புண்படர்ந்தரவோர்சந்திற்புகுந்திருந்தனையவல்குற்
பெண்படர்ந்தென்றுந்தன்னாற்பெறற்கருவடிவந்தன்னைக்
கண்படர்ந்துருகிநெஞ்சங்கைவளைகழலாநின்றாள். 9

இரிந்தபூங்கோதைபாராளிற்றிழைவிழுவதோரா
ளரிந்தவெண்கோவைதேராளன்பன்வந்தடரநேராள்
விரிந்தமேகலையுஞ்சேராண்மின்னெனவிரைவினோடிச்
சரிந்தமென்றுகில்கைதாங்கித்தையலங்கொருத்திவந்தாள். 10

வில்லெழவிடித்துமின்னிவெண்டுளிசிதறிமஞ்சொன்
றெல்லைவந்தெனமின்காட்டமொளிகெழுகவின்செய்மேனி
நல்விமரீனுடிநனைந்துசோர்குழலோர்நங்கை
பல்லணிகலம்விற்காட்டப்பதச்சிலம்பொலிப்பவந்தாள். 11

வீரியவிசயமேகம்விரிசுடர்ப்பணிமின்வீசித்
தேரொலியசனிபொங்கச்சிறந்தசிங்காரக்காட்சி
மாரியைச்சொரிதலோடமெற்றதிற்றளிர்த்துவீங்கு
நாரியரென்னும்பைங்கூழ்மிகுதியைநவிறற்பாற்றே. 12

[இதுமுதல் 32 கவிகள், மாதர் காமமயக்கத்தாற் கூறுதல்.]

சங்கரன்பொருப்பின்யோகஞ்சார்ந்தெனச்சார்வான்மீதின்
மங்கையருள்ளக்காமன்வந்துகட்கணைகடுவ
வங்கானுதற்றீயொக்குமருச்சுனனெனுமனேக்காம்
வெங்கனல்சுடத்தீய்ந்தோய்ந்தமனத்தினர்மெலிந்துசொல்வார்.

காமனேவுமிழ்வில்வேற்கைக்கந்தனேகுளக்கண்டீயாற்
சாமனேவரனேபூமின்றன்மணமகனேசீதச்
சோமனேகிரணக்கற்றைச்சூரனேவயனேவன்றேல்
யாமனேமடவார்க்கொல்வானிவ்வுருவெடுத்தானென்பார். 14

மீன்மலிநேமிவைப்பின்வேந்தரைமதியாவேய்த்தோண்
மான்செருக்கடக்கமாரன்வடிவினைவரித்தானென்பா
ரூன்கெழுவாட்கணங்கைக்குரோருகமூன்றின்றுகை
யான்மறைத்தொருகண்வந்தானரனரப்பெயர்கொண்டென்பார்.

கல்லதோமணித்தூணேயோகவினெழுகிருதோளென்பார்
செல்லதோகாயாவேயோசெகமயக்கிவன்மெய்யென்பா
ரில்லதோவுள்ளதேயோவெழின்முகத்துவமமென்பார்
வில்லதோமேருவேயோவிறற்கரம்பிடித்ததென்பார். 16

வெம்மைகொண்டன்றமன்றல்விலக்குவேண்மகுடமேய்க்குங்
கொம்மைவெம்முலைமானின்றுகுறித்ததென்கொல்லோவென்பா
ரிம்மணமகனேயாகினெவர்கொலோமறுக்குமென்பார்
மும்மையினிழைத்தநோன்பின்முன்வரப்பெற்றுளென்பார். 17

பூசனையின்றிநீணாட்பொலிவழிந்தமரோர்தெய்வம்
வீசுமெய்யலர்விழாவால்வெறிமடுத்தாடினாற்போன்
மாசறுமுலாநோக்கெய்துமாதர்மேன்மகிழ்வுற்றெய்திப்
பூசல்வேள்குனித்துக்கன்னற்பொழிந்தனன்பூவம்பன்றே. 18

கஞ்சமென்போதின்விஞ்சிக்கவின்கெழுமுபயக்காண்முன்
றஞ்சமென்றனங்கன்வந்துசலாமிடுந்தையலங்கோர்
வஞ்சியைநோக்கிமன்னன்வனப்புநோக்கெனவம்மங்கை
கிஞ்சுகவிதழ்கடித்தாளென்செய்வேங்கிளியேயென்றாள். 19

பொங்கியென்பயனிக்கோன்றோட்புல்லநோற்கில்லீரந்தோ
கொங்கைகாளென்னும்பூத்தகொம்புறழொருமின்மற்றோர்
நங்கையிவ்விளங்கோச்சேருநலந்தாரானெனினுங்காண்பான்
பங்கயனிகநோக்கம்படைத்திலனெனவேநைவாள். 20

ஊடியகொழுநற்கஞ்சியொல்லைவந்தேகுமெண்ணத்
தோடிவர்மலரைம்பாலோர்தோகையக்குழுவிற்றொக்கே
வாடிமெய்யாற்றாதெய்த்துமகளிர்கடம்மேற்சீறிக்
கூடுதிர்நீவிரேயிக்கோனையென்றுரைத்துப்போனாள். 21

அன்றடக்குறுமாலுந்தையளப்பறுங்குன்றமென்னி
னின்றடக்குதனிற்சென்பாற்குன்றிரண்டெளிமைத்தாகும்
வென்றியிதன்றோதாழின்விசயப்பேர்க்கொருமாசன்றோ
வென்றுரைத்தொருமின்விம்முமிருநகிற்றைவந்தெய்த்தாள். 22

கரியவாலினைமேனீட்டிக்கவிழ்முகத்திடுக்குட்புக்கோ
ரரவிருந்தெனவுரோமவணிவயிறல்குலோர்மி
னுருகிவெங்காமத்தீயானுட்புலனைவையுந்தீயக்
கரிநுகர்கபித்தமானக்கருகிமெய்மறந்துநின்றாள். 23

முரலளிநுகர்புதேம்பெய்மொய்மலர்க்குழலினாளோ
ரரிவையங்கார்வப்பவ்வத்தாழ்ந்துவேறறியாள்பிள்ளை
யொருநகில்வருடியுக்கத்துற்றொருநகில்சுவைக்க
நரனெனக்களிப்புற்றுள்ளநாணிக்கண்முகிழ்த்துநின்றாள். 24

வான்பணிகாலநிற்குமரைமதிமானுநெற்றி
நீன்முகிலைம்பாலோர்மின்ஞாங்கர்நேரிழையைநோக்கி
யான்பிறந்தெய்தும்பேறின்றெய்தினனென்மீதேயிக்
கோன்விடாநோக்குற்றெய்துங்கொள்கையாற்கொடியேயென்றாள். 25

ஆவிநைந்துள்ளம்வெம்பியனல்மெழுகாமெய்மாழ்கி
மாவடுவுதகம்பில்கவனசமொட்டனையகொங்கை
தாவுகச்சினைநெகிழ்த்துத்தாதிதோடழுவிநின்றாண்
மூவிறையவருங்காணின்மோகமெய்தொருமின்னம்மா. 26

நினைவொடுமறிவும்பூணுநிறைவளைநாணுஞ்சிந்திக்
கணைசிலம்படியின்வீழக்கலையுமேகலையும்போக்கிப்
புனைமலர்ச்செயலைநீழற்போந்தமாருகற்காமோர்
மனையெனவுரைப்பத்தன்மெய்மறந்தொருமாதுநின்றாள். 27

கண்படுமுருவமுற்றுங்காளைதன்வடிவாக்கண்டே
புண்படுமிருவர்தோரார்புரவலனென்றேதம்மிற்
றண்படுகளபக்கொங்கைதாமுறத்தழுவிநின்றார்
விண்படுதடித்துப்பெண்மைமேவியவனையமெய்யார். 28

ஓரிழைமேல்வான்போய்ப்பல்லுருக்கொள்சாலஞ்செய்கிற்போ
னோநுண்மருங்குன்மீதினின்றபல்லுறுப்போர்நங்கை
தேருருட்சிவனுமல்குற்சேடியைநோக்கியிக்கோன்
வீரியமுளனேலெய்யுமலர்க்கணைவிலக்காவென்பாள். 29

இரதியைநோக்கிபின்பத்தியாதுநீதெரிவையென்னுந்
தெரிவைதன்சகியைநோக்கிச்சிவலிங்கஞ்சிவனுநந்தம்
பெருமுலையெனினுமாங்குபிறையமர்ந்திருந்தபோன்று
நரனுகிர்க்குறியுமீங்குநண்ணினன்குவமமென்பாள். 30

கோட்டுவெம்முலையோர்மங்கைகுழைந்துநெஞ்சாற்றுதோடி
வேட்டவனிடத்தைநண்ணிமீட்டுமக்குழுவினேர்ந்தா
ளூட்டியதிலதஞ்சிந்தச்சேப்பக்கண்ணிதழ்வெளுப்ப
வீட்டியகருமம்யாதோவெம்முளத்துணர்கிலேமால். 31

பரவுமோர்செல்வந்தன்னைப்பால்பெறத்துய்த்தல்பண்பா
மொருவயிற்றுதித்தோர்க்கென்றிவ்வுலகெலாமுரைப்பக்கண்காள்
பெருநலமன்னவனப்பைப்பெற்றநும்முடன்பிறந்தே
யுருகுவெம்முலையல்குற்கேனுதவலீரென்பாளோர்மின். 32

நேசமிக்கெனையேநோக்கிநின்றனனென்மாட்டெய்தக்
கூசினனிவராலென்றோர்கோற்றொடிமடவார்ச்சீறி
யேசினளகன்மினென்பளென்னிவண்கருமமென்பா
ளாசைநோயுழந்தார்க்கெங்ஙனறிவுளதறையினம்மா. 33

இனஞ்செய்வண்டிமிருங்கூந்தலிடுகிடையிகல்வேற்கண்ணாள்
மனஞ்சிறிதாற்றாதாங்கோர்வல்லியைநோக்கிநந்தம்
வனஞ்செறிநிதலைபூத்தமதர்முலையடக்காவாற்றாற்
றனஞ்செயனென்னுநாமந்தகுகிலதிவனுக்கென்பாள். 34

பைத்தவெம்பணியல்குற்றேம்படுமொழிபவளச்செவ்வாய்
முத்துறழ்முறுவற்செப்பேய்முலைமின்மெயொருத்திபென்வே
லொத்தகண்வாயுற்றுள்ளத்துறைந்தனனெனதுங்காவண்ணம்
பொத்தினனிமையைத்தோழிபோதுதுமமளிக்கென்பாள். 35

கூந்தன்மென்கோதைசோரக்குலவுகைவளைமுன்சோர
வேந்துபொற்கலபஞ்சோரவிணைமுலைசோரப்பொன்செய்
மாந்தளிர்மேனிசோரமழைக்கணீர்சோரவாங்கோர்
காந்தைதன்கலிங்கஞ்சோரக்கைதழீஇச்சோராநின்றாள். 36

நன்னுதாலென்னீராட்டநம்பிவேத்தவைமடுத்தா
னென்னவந்தொருமின்கூறக்கேட்டெழுந்தாசைதூண்டப்
பொன்னணிகலனுங்கொல்லைபூணிலைதிரியப்பூண்டே
தன்னரைதரிக்குந்தானைதலைதரித்தொருமின்வந்தாள். 37

சேடியைநோக்கியாணிற்சிறந்தவனிவனேநம்மைக்
கூடுவோன்பயனிலென்னுக்குறிப்பினாற்றெரிப்பானுன்னி
நீடுதற்சனியாற்சுட்டிநிமிர்விக்கையசைத்துநெஞ்சிற்
சூடிமற்றிருகைகோத்துச்சோர்ந்தோர்கைவிரித்தாளோர்மின். 38

கனைத்தலைகடல்சேர்மத்திற்கட்டுகட்செவிப்பேர்கூறி
னுனைத்தினந்தொழுவேனென்றேரொண்டொடியுரைத்தாண்மற்றோர்
புனைக்கொடியாசேனையும்பொய்யுடற்புளகங்கொள்வேன்
வனப்பொடுகயனுஞ்சேரோர்வாய்மைநீகூறினென்றாள். 39

ஒசிமலர்க்கொடிநிகர்க்குமொல்கிடையொருமாதென்னை
நிசிவரின்வருத்துமக்கொனீலமேனியநீயென்பா
னசிவகற்றிடவாற்குப்புனற்பெயர்நவிறற்காமால்
பசுவொடுசெவிசேரோர்சொற்பகரலாகாதேயென்றாள். 40

வேட்டிடவிவன்மற்றெம்மைவிதித்திலன்வேதாவென்பார்
கூட்டொருநாட்கொண்டிக்கோன்கூடினுஞ்சாலுமென்பார்
நீட்டியெம்மெய்மீதத்தம்நீவினுமுய்ந்தோமென்பார்
நாட்டமுற்றொருசொற்கூறினதுநல்குநலமுற்றென்பார். 41

ஆலமேகிளர்ந்திவ்வையத்தழகெலாங்கவர்ந்தேயீண்டோர்
நீலமாமேனிகொண்டிங்கிருபனுயுற்றவாற்றூற்
சாலவேநோக்கிற்றூக்கிச்சரேலெனநுழைந்துள்ளோடிக்
கோலமாமகளிராவிகுடித்ததுகுடித்ததென்பார். 42

பாவியேந்திருந்தநோக்கற்காயினும்பையப்பையப்
போவெனவிருகைகூப்பிப்பொன்னுருட்டேரிற்பூண்ட
மாவினைத்தொழுவாரோச்சும்வலவனைத்தொழுவாரோங்குங்
கோவினைத்தொழுவார்பூத்தகொம்பினிற்றிகழுமின்னர். 43

சுரைவிரையெயிறுதோற்பைத்துணைமுலைசுருங்குகீரை
விரைவிழிவளைவில்யாக்கைகவேழவாய்சிவணுமல்குற்
றிரைமுதிர்மூப்புவாய்ந்தோரன்றியச்செழியன்மூதூர்
வரைமுலைமகளிர்மாலான்மாழ்குறூர்யாவர்மன்னே. 44

[அருர்சுனன் அரசவைசேர்தல்.]

இன்னவைபலவும்பன்னியினைந்துமெய்மகளிர்நிற்பக்
கன்னலஞ்சிலைவேளெய்தேகைசலித்தருகுநின்றூன்
துன்னுபுமான்கணேமித்தொகுதியின்வியந்துநோக்க
வின்னிலைக்குலகமேத்தும்வீரனத்தாணிசேர்ந்தான். 45

உலாவியற் சருக்கமுற்றும்.

(ஆக சருக்கம் 15-க்கு கவிகள், 745.)



## (16 - ஆவது அவைபுகு சருக்கம்.)

இச்சருக்கத்தான், அருச்சுனன் அரசவைக்கண் வீற்றிருத்தலும், பாண்டியன் தமது மரபினிலைமையைக்கூறித் தன் மகள் வயிற்றில் பிறக்கும் பிள்ளையைத் தனக்குக் கோடுக்கவேண்டுமென்று பார்த்தனைக்கேட்க அதற் கவனிசைதலும், பின் விவாகத்திற்கு முயற்சித்தலுங் கூறப்படுகின்றன.

[3-கவிகள் ஆசனத்தமர்தல்.]



அடைந்தனன்வாசவியமரர்பூமழை
மிடைந்திடவேத்தவைவேம்பின்றூரினேன்
கடைந்தகாளமுதெழக்காண்வலாரியிற்
படர்ந்திடுங்களிப்பெனும்பரவைமூழ்கவே. 1

எழுந்தனர்பொருக்கெனவெல்லைகாண்கிலாத்
தொழுந்தகையரசர்கடொழுதுநின்றன
ருழுந்துருள்பொழுதின்முனுவகையூறுதோ
ளழுந்துபுதழுவினன்வழுதியன்றரோ. 2

இட்டனர்தமனியத்திழைத்தமாமணி
விட்டொளிசிதறியவிரிந்தபூவணை
நட்டவர்தசாதநந்தனன்னெனுப்
பொட்டெனவதன்மிசைப்பொலிந்துதோன்றினன். 3

[4-கவிகள் க்ஷேமம் விசாரித்தல்.]

துன்றுவேதியர்த்தொழுதிருத்தித்தூய்மணி
யொன்றுபொற்றவிசிடையுதவிச்செய்கடன்
மன்றலுக்குரியவன்வதனநோக்குறீஇ
வென்றிவேன்மீனவனிவைவிளம்புமால். 4

துருபதனவையின்முன்றூன்றக்கண்டனெம்
நிருபரெண்டருமனுநிகரில்வீமனு
மிருவருநும்மொருயாயுந்தீவரு
மருவமர்குழலியும்வலியரோவென்றான். 5

செங்கண்மாலருளினற்றிகழுமாரியிற்
பொங்குபைங்கூழெனப்புவியில்கற்புடை
மங்கையர்நிலையெனவலியரேயெனப்
பங்குனன்பகர்ந்திடப்பகரும்பஞ்சவன். 6

என்னருந்தவத்தினேவெம்பினேற்பினே
வின்னகரிழைப்பினேயாதினேவுயர்
மன்னவநின்வரவென்னமற்றவன்
பன்னினன்முனிமொழிவந்தபண்பெலாம். 7

[இதுமுதல் 4-கவிகள், பாண்டியன் கூறல்.]

வேட்டிகைத்தொதுங்கெழிற்காளைவிண்டவை
கேட்டகைதவனுவந்திதுகிளத்துமுந்
நாட்டநாயகன்வரநாடிநற்றவம்
வாட்டடங்கையொருவழுதிமுன்செய்தான். 8

செய்யருந்தவத்தினுக்கிரங்கிச்சேவமர்
மைதிகழ்மிடற்றிறைவந்துநின்மனத்
தெய்தியதியம்பெனவேத்தியென்னையா
ளையவோர்மகவெனக்களித்தியாலென்றான். 9

தழுவியதண்பிறைச்சடையனுங்குல
வழிவழியொருமுளைவருமென்றோதியே
விழிவழியகன்றனன்விரித்தவாய்மைபோன்
றொழுகியவெந்தையுமுவப்பவேயரோ. 10

எனக்கொருமகவும்பெண்ணெனவெழுந்தவா
ணினக்கவடுணைவியாநிகழுநேர்மையால்
வனக்கிளிவயின்வருமகனையான்பெற
நினைக்குதல்கடனுனக்கெனநிகழ்த்தினான். 11

[அருச்சுனன் பதிலளித்தல்.]

வந்துசிந்தடிபணிமாறன்வாய்மையால்
விந்தைவந்தமருதோள்விசயவேந்துள
முந்தியவுவகையைமுறுவலேசொலத்
தந்திடற்கியாதொருதடையிலென்றனன். 12

திரைகடலமிழ்தினிற்றேவர்கோமகன்
றருமொழிசெவிபுகத்தமிழ்புரந்தமன்
பொருவருங்குமரனைப்பெற்றபோன்மென
வருமயிர்ப்புளகெழமகிழ்வுவிஞ்சினான். 13

[5-கவிகள், வஜ்ரவைக்குப் பிரயத்தனஞ்செய்தல்.]

கண்ணியகடிமணக்காட்சிகாண்குபு
புண்ணியமொருவடிவெடுத்தபோன்றொளிர்
தண்ணளித்தருமனுந்தழுவத்தக்கதோ
வுண்ணிகழ்வியாதெனவுசாவினனரோ. 14

நாமவேற்கைதவனவின்றவாசகஞ்
சேமவிற்காளைதன்சிந்தைகொண்டுதேர்ந்
தாமவன்வருகையுமின்றியாற்றினுந்
தோமிலவெனக்குறிப்பறியச்சொல்லினான். 15

பூட்டுவிற்குமரன்றன்புந்திநோக்கியப்
பாட்டியன்வில்லவன்சென்னிபற்பல
நாட்டினர்நங்கைதன்மணக்குநண்ணவே
யோட்டினன்றாதொடுமோலைதன்னையே. 16

கந்தனோர்முகமிருகரங்கொண்டுற்றென
வந்தவனுவப்பவோர்விடுதிமன்னவன்
றந்துநன்னகரணிசமைக்கச்சாற்றிப்பின்
மந்திரமகன்றுதன்மனையினெய்தினான். 17

தெள்ளிதினுணர் திராற்சித்திராங்கதை
யெள்ளலிலருச்சுனற்கிவைந்தமாமணங்
கொள்ளுதிர்நகராணியென்னக்கும்பிமேல்
வள்ளுவர் வள்விசிகருவிவாட்டினர். 18

அவைபுகுசருக்க முற்றும்.

(ஆக சருக்கம் 16-க்கு கவிகள், 763.)



## (17 - ஆவது சித்திராங்கதை திருமணச்சருக்கம்.)



இச்சருக்கத்தால், நகர் அலங்கரித்தலும், சித்திராங்கதை அருச்சுனனுக்கு விவாகம்செய்தலும் கூறப்படுகின்றன.

[இதுமுதல் 20-கவிகள், ஆடவர் மகளிர் நகாலங்கரித்து தாமுமலங்கரித்து வதுவைக் கெதிர்தல்.]

பறையறைதெரிகூடற்பழநகர்தனின்மேவுங்
கறைதவிர்மதிமானுங்கவின்முகமடவாரும்
அறைகழலொளிர்பாதத்தங்கச்சனனையாரும்
பிறையெதிர்கடலென்னப்பெரிதுளமகிழ்வுற்றார். 1

மதிதொடவளர்பூகமறுகெதிர்முன்றின்முன்
கதலியுமாதுரியக்கன்னலுநடுவாருஞ்
சததசவிழியோனுஞ்சதளமுறிமையோருந்
துதைநகர்தனைமேவத்தோரணமிடுவாரும். 2

குலவியமணிவீதிக்குப்பைகடெறிவாரும்
மலயசமதுதங்தேமெழுகிடவருவாரும்
நிலவியவிமநாரம்நிறைவுறமறுகெங்குஞ்
சிலுசிலுசிலுவென்னச்சிவிறியின்விடுவாரும். 3

புனைமணிநெடுமாடம்பொலிவுறுநிலைதோறு
மினமணிநிரைகோவையெழில்பெறவிடுவாருந்
தனைநிகரொளிகாலுந்தமனியமணிமுன்றிற்
பனிமதிநிலவீனும்பாலிகையிடுவாரும். 4

இந்திரனுலகினுமீதிலையெனுமெழிலெய்தச்
சந்தியின்மறுகின்விதானமதிடுவாரும்
முந்தியமணியோடும்பலமணிமுடிகாரம்
பந்தரினொளிவீசப்பந்தியின்விடுவாரும். 5

பன்னருபகல்செய்வோர்பம்பினரிவணென்னப்
பொன்மணைதொறுமணிசெய்பொற்குடம்வைப்பாரும்
மின்னிலவுமிழும்பர்விதுவுடல்கறையெய்தத்
துன்னியுராய்வுறநீடுவசமதிடுவாரும். 6

தக்கநறைத்தயிலந்தடவிகுழற்றந்தச்
சிக்கமதுறநீவிச்சிகழிகைசெய்தேகட்
கக்குமென்மலர்மாலைகவினுறவணிசெய்வார்
நக்கசிலணிதந்தேநாரியரினமெல்லாம். 7

அந்தரவிடைமீதின்மேகலையணிவாரும்
பந்தொளிர்நகின்மீதிற்பட்டிகைதருவாருஞ்
சுந்தரமிகுமம்பொற்றாசரைபுனைவாருங்
கந்தரமிசையாணர்கலன்மிகவணிவாரும். 8

பிளவுறுமதியென்னப்பேசுநன்னுதன்மீதிற்
றளதளதளவெனவிற்றருதிலமிடுவாரும்
அளகமுகின்முன்னரவிர்கொடிமினலேபோ
லொளிபளபளவென்னுமோடைகள்புனைவாரும். 9

விரிகதிரொருவள்ளைமிசைவருபொலிவேபோ
லெரிமணியிழைகம்மலிருசெவிபுனைவாருஞ்
சுரமுனிகரநேருஞ்சுந்தரயாழென்னுந்
தரமுளகரமீதிற்சரிவளையணிவாரும். 10

ஆடியினிழன்மீதினஞ்சனவிழிமேவி
யூடியவிழைதன்னையோளியின்விடுவாருஞ்
சேடியரணிகாலைசிதறியமணிமுத்தங்
கூடியதிரடன்னைக்குப்பையினெறிவாரும். 11

தத்தரிகிடசெணுதாதரிகிடசெணுதகுதோங்
தித்திமிதிரிகிடசெம்திம்திரிதோமெனுநன்
மத்தளவிசையோடுங்கைத்தளவகைநேர
நர்த்தனமிடுவாரும்நல்விசைதருவாரும். 12

யாசகமொழிகூறியார்வரினுஞ்செம்பொன்
காசினையீவாருங்கருதருவிலைமேவுந்
தூசினையீவாருந்தூய்மணியீவாரும்
ஆசகலகடாரவசனமதிடுவாரும். 13

மைந்தர்களுயிர்வாருமறலிகைவலைபிதெனுஞ்
சுந்தரவிழிவீசித்தோகையர்வருவாரும்
பந்தினையடுவாருமம்மனைபயில்வாரும்
உந்துறமுன்பின்றூசலினமர்வாரும். 14

மாதிரமிருநாலும்மார்பணியொளிசெயமெய்
மீதருமணம்வீசவிடலைகள்வருவாரும்
சூதெதிர்பொருவாருஞ்சொற்றகுமல்வில்வா
ளாதியபலவாடலழகுறமுயல்வாரும். 15

பொன்னகமிசைசீயம்வருமொருபொலிவேபோன்
மன்னவரிரதத்தின்வாகுறவருவாரும்
மன்னியமணிமானம்மதிவருநிகழ்வேபோற்
றன்னிகரெழின்மாதர்தண்டினில்வருவாரும். 16

தேரினில்வருவாருஞ்சிவிகையின்வருவாருங்
காரினில்வருமின்போற்கரிணியில்வருவாரும்
வாரியினலைமானும்வாசியின்வருவாரும்
பாரினில்வருவாரும்பண்டியில்வருவாரும். 17

குந்தியநடையாருங்கோவணவுடையாரும்
அந்தரநெறியாருமருமறைமொழிதன்னைத்
தந்திடுநாவாருந்தண்டமர்கையாரும்
மந்திரமுறைதேருமந்தணர்வருவாரும். 18

கடகரிபெரிதென்பார்காவலர்பெரிதென்பார்
விடுபரிபெரிதென்பார்வீரர்கள்பெரிதென்பார்
தடவரிபெரிதென்பார்தையலர்பெரிதென்பார்
மிடைகுதல்பெரிதென்பார்மீள்குதல்பெரிதென்பார். 19

இன்னணமடவாருமிளைஞருமிணையின்றித்
தந்நகரணியோடுந்தம்மணிபலசெய்தே
மன்னியமணமன்றம்வாளரியனமேபோற்
றுன்னினர்நிகழ்தன்மைபேசுதறுணிவுற்றும். 20

[இதுமுதல் 2-கவிகள், கல்யாணமண்டபச் சிறப்பு.]

வேறு.

பத்தினெட்டொழிகாவதம்பரந்தபல்வினைசெய்
சித்திரத்தனமணிபொதிதான்பலசெறிந்த
வுத்தமச்செங்கொற்றகடுவேய்ந்தொளிர்வவிதானப்
பத்திநித்திலமுற்றனகடிமணப்பந்தர். 21

கந்திவாழையிக்கெடுத்துயர்தோரணங்கட்டி
நந்தலின்மணித்தீபநீர்நனிநிறைகலச
மிந்துவிற்றிகழ்பாலிகையின்னியம்பலவும்
வந்துபொன்னகர்போன்றொளிர்வதுவைமண்டபத்தின். 22

[பாண்டியன் மணமண்டபம் வருதல்.]

மந்தரத்தவர்பரிசனர்மறையவர்முதியோர்
தந்திரத்தவர்தரணிபர்தன்கிளைசூழ
வந்தரத்திறைதமரொடுமடைந்தபோன்றன்று
வந்திருத்தனன்வழுதிமாமணியினாதனமேல். 23

[இதுமுதல் 2-கவிகள், கல்யாணத்திற்குவந்த அரசர் முதலியோர்க் காசனமளித் துபசரித்தல்.]

வழுதியோலைகைநேர்ந்துவாசகமறிந்துவந்தே
பழுதினாற்படைபரவையிற்றம்புடைபரவக்
கெழுமுகேண்மையினெய்தியகிள்ளிவில்லவனைத்
தழுவியாதனத்திருத்தினான்முகமனுந்தந்தே. 24

மற்றுமுற்றகாவலர்க்கெலாம்வரன்முறைவழங்கி
நற்றபோதனர்வரவினைநாடிநன்கெதிர்கொண்
டுற்றநீர்மைபல்லுஞற்றிமிக்குவப்பொடுமேத்தி
வெற்றிமீனவனிருத்தினான்விரிமணித்தவிசின். 25

[பாண்டியன் மணமகனை யழைத்துவரச் சொல்லல்.]

கைகுவித்தெதிர்நின்றகஞ்சுகர்முகங்கருதி
நெய்கவித்தவேற்படைக்கரநிகரறுவரனை
மைபுகுத்துசெவ்வரிவிழிமடவரறன்னை
ஐயமிகுத்திடத்தருதிரென்றரசறைந்தனனால். 26

[இதுமுதல் 8-கவிகள், அருச்சுனன் மணக்கோலவருணனை.]

வேறு.

உரைத்தசொற்படியன்னோர்போயுரைத்திடக்கேட்டவுற்றோர்
விரைத்தநன்னீரானனமேவலர்க்கரியையாட்டி
நிரைத்தகுஞ்சியைப்புலர்த்திநிகரிலுள்ளுடைவரிந்து
திருத்தகநுதலினானத்திலகநன்கமையத்தீட்டி. 27

நலந்திகழ்முகிலைச்சூழ்ந்துநகுகடித்தெனநுசுப்பிற்
பொலன்பெறக்கைசெய்தூயபொன்னரைஞாணையாத்துச்
சிலந்திநூறனினுநொய்தாச்செங்கொனாற்கொண்டியற்றிக்
கலந்துபண்பணிவிளிம்பார்கவின்பெறுங்கலிங்கங்கட்டி. 28

தரைமகிழ்புழுகுநானஞ்சந்துகுங்குமஞ்சவ்வாதோ
டுரியநற்கந்தங்கூட்டுமொப்பறுங்கலவைபூசி
விரைகமழ்தெரியல்வெண்கேழ்மேம்படுத்தரியநீல
வரைதவழருவிமானமார்பிடையுலாவச்செய்து. 29

தினயணிசசிபாற்சேர்தற்சிவணச்சீருகிரின்பாங்கர்
புனைமணிப்பொலன்பிஞ்சொன்றபொன்விரல்பொலியப்பூட்டி
நினைவருமிடியுமொன்னார்நெஞ்சமுமஞ்சவார்க்குங்
கனகமாமணிசெய்வீரக்கழல்பதங்களுலக்கட்டி. 30

மந்தரந்தொடர்செஞ்சூட்டுவாசுகிமானத்திண்மைச்
சுந்தரப்புயத்தினம்பொற்சுடர்மணிவலயந்தூக்கிக்
கந்தரத்திடைமதாணிகண்டிகையாரமற்றும்
இந்திரதனுநிகர்ப்பவேற்றிமுப்புரிநூன்மார்பில். 31

வீகமெல்விரல்புனைந்துமேம்படுவில்வீரத்தை
யீகையைவிளக்கக்கையினேமகங்கணமுங்கட்டி
வாகுயரிருகுன்றின்மேல்வயங்கிருசுடர்போற்செம்பொன்
வேகடமணிகுயிற்றுவிற்குழைசெவிக்கணிந்து. 32

பனிப்பிறைகிழியநாப்பண்படர்கொடிமின்னலேய்ப்பத்
தனித்தொளிர்வீரபட்டந்தன்னைநன்னுதலிற்கட்டி
நினைப்பருங்கதிர்செய்சோதிநீனிறவரைமேனின்ற
தெனச்சிரத்தொளிகுலாவுமெழின்மணிப்பாகைசூடி. 33

சேப்புறமாலஞ்சுற்றிச்சிந்தியைவண்ணச்சொன்றி
காப்புநன்னுதற்கணிந்துகண்ணெச்சிற்கழியப்போக்கிப்
பூப்பொதியமரர்தூவப்பூவையர்பலாண்டுகூறக்
கோப்பதிசுதனுக்கங்கைகொடுத்துமாமணித்தேரேற்றி. 34

[இதுமுதல் 2-கவிகள், அருச்சுனன் மணமண்டபஞ் சேர்தல்.]

வேறு.

வல்லமங்கையராடினர்பாடினர்வரவே
பல்லியம்பொரப்பரிசனர்பற்பலர்பரவ
மெல்லமஞ்ஞைநற்கதிகொளக்கற்கிதேர்விடுத்தே
யெல்லையில்லெழிற்கடிமணக்காவணமெதிர்ந்தார். 35

நீடுதோள்கொடுநீணிலந்தேரினின்றிழித்து
மாடுமாமதிதவழ்மணிமண்டபநாப்பண்
பீடுசார்ந்துயர்வேதிகைப்புறத்தொளிபிறங்கு
மீடிலாமணித்தவிசெதிரிருத்தினரன்றே. 36

இதுமுதல் 4-கவிகள், சித்திராங்கதை மணமண்டபஞ் சேர்தல்.]

தத்தைமென்மொழியெனநடைத்தனிமயிற்சாயற்
சித்திராங்கதைதன்னையுஞ்செழும்புனலாட்டி
யுத்தமக்கவினிறைந்தமெய்யொளியையொப்பனையாற்
பொத்தினரெனவணிபலபூவையர்செய்தார். 37

வண்ணமைந்துடையயினியைமாநிலஞ்சிதறிச்
சுண்ணமஞ்சணீரெடுத்துயர்தெய்வமுந்துதித்தே
நண்ணநன்னுதற்காப்பணிந்திளநிலாநகையார்
பண்ணைசூழ்வரயுவதியர்சோபனம்பாட. 38

இன்னியம்மெழச்சேடியர்தோளிணையேந்திக்
கன்னல்வேண்மணிமுடிநிகர்கனதனப்பொறையான்
மின்னுநுண்ணிடையிறுமெனமெல்லெனநடத்தி
மன்னுமாமணக்காவணமொல்லையின்வந்தார். 39

ஓதுமாமுகிலுடனெருங்கடித்துறைந்தென்ன
வாதசேயின்பின்வந்தவன்வலப்புறமதனிற்
காதுமோதரிக்கண்ணியைக்கன்னியர்சேர்த்தார்
தீதறத்திகழ்சீதைராகவன்றனைச்சிவண. 40

[வேதியராகுதி வளர்த்தல்.]

வேதவேதியரெழிலுறுதண்டிலம்விரித்தங்
கேதமற்றபைந்தருப்பையையினிதுறச்சாத்திக்
கோதகன்றசெந்தழலினைக்குழுமுறமூட்டி
யோதுமாகமநூன்முறையுகந்தெலாஞ்செய்தார். 41

[இதுமுதல் 2-கவிகள், பாண்டியன் அருச்சுனனுக்கு
தன்மகளை தாராதத்தஞ்செய்தல்.]

உற்றநீரளியோரையென்றுரைத்தனருவந்து
கற்றவெண்ணிலைக்கலைவரையறுத்தசீர்க்கணிதர்
வற்றவம்பாமயிலெறிமாறனஃதறிந்து
தெற்றெனத்தனியணைதவிர்ந்தெதிருறச்சென்றே. 42

வீரைமாநிறநம்பிகைவிரிசரோருகமீத்
தாரைசேனிகர்நங்கைகாந்தண்மலர்தயங்கக்
காருமின்னெனக்கலந்தறங்காத்திரென்றிசைத்துத்
தாரைசெய்துலகறியமன்னுவப்புறத்தந்தான். 43

யாங்கல்யந்தரித்து அக்கினிவலம்வந்து அம்மிமிதிக்கச்செய்
தருந்ததிகாட்டல்.]

உரியமங்கலநாண்புனைந்துவந்துகைபற்றித்
தெரிவையோடழல்வலஞ்செய்வந்ததிற்பொறிசிதறி
வருமலத்தகப்பதங்கைதொட்டனாகன்மீவைத்து
விரியும்வானமீக்காட்டினன்சாலியைவிசயன். 44

சூரியானகமார்த்தநன்முழவினமார்த்த
சாருவேதியராசிகடகவுறவார்த்த
நாரிமார்சுபசோபனநனியெழுந்தார்த்த
வாரிபோல்வளையார்த்தவானவர்மலர்தூர்த்தார். 45

பின்னுமுள்ளனமுடிந்தபின்பிதாப்பதமிசையவ்
வன்னமென்னடைதாழ்தலுமவன்மிகக்களிபோய்க்
கன்னல்வேளிரதியமெனக்கடவுளர்காலம்
மன்னிவாழ்கநின்மகிணனோடென்னவாழ்த்தினனால். 46

கந்தனேமதனேவரியோவெனுங்காளை
வந்துபூசுரர்தொழுதெதிர்நின்றமாதுலன்மார்
புந்தன்மார்பையும்வரைசெல்வான்புந்தியினுன்னிச்
சந்திசெய்தபோன்முறைமையிற்றழுவினனன்றே. 47

வதுவைநம்பியைநங்கையைமணவறைநீத்துப்
புதியமாளிகைபுகுத்தினர்புலவர்மாபரிசும்
விதியினந்தணர்தானமும்வேந்தர்நற்சிறப்பும்
மதிமனல்கப்பெற்றுவந்துதத்தம்பதிவந்தார். 48

சித்திராங்கதை திருமணச்சருக்க முற்றும்.

(ஆக சருக்கம் 17-க்கு கவிகள், 811)

## (18 - வது மகப்பெறுசருக்கம்.)

இச்சருக்கத்தால், பள்ளியறைக்காட்சி கூறுதலும், சித்திராங்கதை கருப்பந்தரித்துப் பப்பருவாகனனென்னும் பிள்ளையைப் பெறுதலும், அப்பிள்ளையை பாண்டியனுக்குப் பார்த்தன் கொடுத்தலும் கூறப்படுகின்றன.

[இதுமுதல் 4-கவிகள், பள்ளியறைச் சிறப்பு.)

இரவிமின்மினியாயெஞ்சவிமைக்குமாமணிகுயிற்றித்
தரளமுற்றிழைவிதானந்தயங்குபொற்பரியங்கத்திற்
பரவிமுப்பகுப்பாயொன்றும்பஞ்சணைவயின்மென்பூத்து
யரவுரிநிகர்க்குநுண்டுகிலேடுத்தவோரமளிசேர்ந்தார். 1

விரியிளம்பிணைமென்காதேய்வெள்ளிலைபாகுபுட்பம்
பரிமளத்தொகுதியாழ்பொற்பணிபணியதனையொக்கு
மரியநுண்டுகிற்சிற்றுண்டியமிழ்துபொற்படிக்கமெய்யின்
வரமயிர்ப்புளகநோய்தாவழங்குகாற்றொளிர்சாந்தாற்றி. 2

பின்னரும்பலவில்லொக்கும்பிருகுடிமடவாருய்ப்பத்
துன்னுநீரயினிசுற்றித்தொல்குலத்தெய்வம்போற்றி
மன்னுமக்கதைகைக்கொண்டுமங்கலங்கூறித்தூவி
நன்மகற்பெறுவீரென்னாநங்கையர்வாழ்த்திப்போனார். 3

இந்திரகோபமுத்தமிருட்குழலிகுளையாயம்
முந்துமையலின்மெய்யெய்த்துமுடுகுமவ்விருவர்க்காணூஉச்
சிந்தைசெய்தினிப்பாணித்தல்செய்வதேரலவென்றொல்லை
கந்தரமுறழுமொண்கேழ்கஞ்சிகைவீழ்த்திப்போனார். 4

[இதுமுதல் 8-கவிகள், சித்திராங்கதை ஊடலை அருச்சுனனிவர்த்தி செய்தல்.]

தூயமையெழினிவீழ்த்துத்தோழியரகன்றபின்னர்
போயநாள்விரகத்தென்மெய்பொங்கழற்புழுவிற்றுள்ளி
மேயசொற்பலகானீட்டிவிளித்துமேவுகிலாயென்றே
யாயிழைபரிபவச்சொலறைந்தரும்புலவிகூர்ந்தாள். 5

உற்றிடுமூடல்கண்ணுற்றுலம்பொருதிணிதோட்காளை
செற்றமென்வருதற்காமோசெப்பெனச்செப்பாளாகி
நற்றிருக்குதகம்பில்கிநகைநிலாத்தவழாதேங்க
வுற்றநெட்டுயிர்ப்போடம்மின்னொழுகுகண்ணாலிநீக்கி. 6

மாரனம்புருவிப்போந்தமருமச்செம்புழைப்புண்ணுற்றும்
வீரியமருத்துக்குன்றவெம்முலைவேதொற்றாயேற்
றீருதற்குளவோமையற்சிறைப்படுதமியன்மீது
நேருதிகருணையென்னாநேரிழைக்கிதநிகழ்த்தி. 7

வாரிணைநெகிழ்த்துச்செச்சைவனமுலைக்கூட்டித்தொய்யற்
சீருறவரைந்துமையைச்சேல்விழிக்கமையத்தீட்டி
வாரிமற்றிருகையாரமகிழ்வொடுமுடியிருத்திக்
கூருகிரதனாலோதிகுழைவுறமெல்லநீவி. 8

துய்யமஞ்சரிபுனைந்துசுடரிழைபலதிருத்தி
யெய்யலர்க்கணையானைவேற்கிதழமுதளித்தாளென்ன
மையகலாம்பற்போதுண்மறைந்துறைதாளக்குப்பை
பையவேவெளிவந்தன்னபாசிழைமுறுவல்பூத்தாள். 9

அருநகைக்குறிப்பையோர்ந்தாலிங்கனமைந்துமாற்றி
யரவெழின்மணியிதென்னவல்குன்மீதிவர்ந்துநின்ற
விரிசிகையகற்றிவெண்கேழ்மெல்லிழைக்கலிங்கமோர்சுற்
றரையதுமுண்டென்றண்ணலஞ்சலன்மகிழ்ந்துதந்தான். 10

புகன்றிடுமதனநூலின்புறத்தொழிற்படலம்யாவுஞ்
சுகன்றனையுதவும்வேதசோதிசேயுதவுஞ்சூனு
வகன்றெளிரல்குற்பேதைக்கறிவித்துப்பின்னரன்னா
ளகங்கழிகளிப்பினாகவகத்தொழிற்படலங்காட்டும். 11

[இதுமுதல் 23-கவிகள், ஸ்ரீ புமான் கலவி யின்பநுகர்தல்.]

தெரிவரும்புகழினோங்குந்தென்றமிழ்த்தேயமாதர்
பரிவுறங்குலியிலீலைப்பண்புபல்விதம்புரிந்தா
னுருவமீதமுதந்தொட்டேயுவப்பச்செய்தாலந்தீண்டா
தரவினற்பணத்தைமானுமவயவங்கனியச்செய்தே. 12

கற்பகத்தருவைச்சுற்றுங்காமவல்லியைப்போன்மன்னன்
மற்புயந்தழுவுமங்கைமணிக்குயநெருங்கப்புல்லிப்
பற்குறிதந்துசேயபவளவாயமுதந்தேக்கி
யற்புதக்கரணலீலையகமகிழ்வுறச்செய்தானால். 13

அரியநுண்மருங்குலற்றவற்றவென்றலறிக்கூவிப்
பரிபுரம்புலம்பக்கூந்தற்பண்ணளிபுலம்பச்சூடுஞ்
சரிவளைபுலம்பவெண்புட்டனிதமுங்கிரீவந்தாரா
விருவிழிவிழியைப்பற்றவிசைந்துமின்னின்பந்தந்தாள். 14

கேசவன்பொறியுமென்னக்கிரிகுகன்வள்ளியென்னக்
காசிபனதிதியென்னக்கழைவிலியிரதியென்ன
வாசவன்சசியுமென்னவாணியும்விதியுமென்ன
வீசனுமுமையுமென்னவிருவரும்போகந்துய்த்தார். 15

வேறு.

மேற்றுவன்றிமிகுபுனல்நேருமோ
ராற்றிடைக்குறைநின்றவரன்னமெய்
தோற்றுகாதற்சுரப்பினையோர்சிறி
தாற்றிநின்றனராற்றருநீர்மையார். 16

சிதறுகூந்தற்சிகழிகைசெய்ததிற்
புதியதேமலர்மாலைபுனைந்தொளி
பதறுவள்ளிதிருத்திமெய்பண்புறக்
கதிர்கொள்பொற்கலைகட்டினருக்கமே. 17

உற்றசிற்றுணவுண்டுபெருகினர்
குற்றமற்றுயர்கோவமிழ்தங்கலாற்
செற்றசந்தனத்தேய்வைதிமிர்ந்துமெய்
பற்றலுற்றனர்முற்றறுபற்சுருள். 18

செய்யபங்கயங்கொண்டுதிவவுயாழ்
மையலூர்கவைதமல்கவிசைத்தனர்
வெய்யவைவங்கணைவில்லியுகைத்திட
நொய்யபஞ்சணைசார்ந்தனர்நோன்மையார். 19

சீருலாவியகொங்கைச்சிலீமுகம்
நேருமங்குலிதன்னினெருடியே
நாரிமேகலைநம்பிநெகிழ்ந்திடச்
சாருமையல்சகிப்பரிதாகியே. 20

கொங்கையானைகடவிக்குராற்றனிச்
சங்கொலித்துப்புருவத்தனுவளைஇத்
துங்கவம்பகத்தோணியையேவியம்
மங்கைலீலையமர்மனன்மீச்செய்தாள். 21

இடையெனுங்கொடியேற்றெதிர்தோன்றுமின்
கடிதடத்தடந்தேர்கட்டறக்கடி
தொடிவிறன்குறியேவுகைத்தன்றுபோர்
வடிவமிக்கமன்னும்புரிந்தானரோ. 22

கலவிமுற்றிக்கழிமகிழ்வுற்றவப்
புலவுறைந்தடர்புட்சுழல்வேலினன்
வலமுறப்புவியோகியின்வந்ததிந்
நலமுறற்குகொலென்றுநகைத்தனன். 23

கன்றுகையிற்கலந்தொளிர்காரிகை
நன்றுநக்கதுகூறெனநாயகன்
ஒன்றுமில்வறிதேயெனவூடியே
பின்றலுற்றனண்மாமுகம்பேர்வுறீஇ. 24

மாதினூடல்கண்டுண்மயக்குற்றுமன்
காதைகூறிற்கதமுறுமென்றனி
மோதிநின்றவிளிம்புமுகிழ்த்தனன்
பேதையாசையிற்கண்படைபெற்றிலன். 25

நொய்யநூலினுநொய்யநுசுப்பினாள்
பொய்யிதன்றெனப்பொய்த்துயில்கூர்ந்தனள்
வெய்யமாரன்விடுங்கணையான்மிக
மையலுற்றனண்மாற்றருநீர்மையாள். 26

உறுமோர்துர்க்கனவின்வெருவுற்றபோ
லிறைவனாகமதிற்கரமிட்டனள்
அறைபருப்பதமார்பினிலங்கவட்
பொறிகுருக்கணெருக்குறப்புல்லினான். 27

ஓதைவிட்டவுவரிகாலாயுதங்
காதைவிட்டநீள்வாயிற்கதிரவன்
சோதிவிட்டெதிர்தோன்றியும்விட்டிலர்
காதல்விட்டிலர்கையிணைதோளிணை. 28

புனையுமேகலைமாதுடன்பூமனும்
கனிவினித்தகைக்காதலின்மூழ்கியே
யிணையதிங்கட்டிதினமீதென
நினைவுகண்டிலராயினர்நீடுநாள். 29

வேறு.

[இதுமுதல்-3-கவிகள் கருப்பச்சின்னங்கூறுதல்.]

ஏலநறுங்குழல்விசயனிரவுபகலிணைபிரியா
திடையாராகிச்
சாலநடித்தனர்மதனாடகம்யான்யான்வெல்வலெனச்
சபதங்கூறி
யாலிலையொப்பகலவயிறுரவுண்போர்நடனவினைக்
காகாவாபோற்
சீலமருந்ததிக்கிசைக்குஞ்சேயிழைதாழ்ந்தாள்கருப்பந்
திகழ்ந்துமன்னோ. 30

மாந்தளிர்பொன்மேனிநிறமாறிநரப்பினம்பசுமை
மருவக்காஞ்சி
யேந்துநுசுப்பையமின்றியிலகமரைமுகிழிடைவண்
டிருந்ததேய்ப்பச்
சாந்தணிபயோதரமென்முகடுகருநிறந்தழுவித்
தனிமசக்கை
போந்துகிடைகொடுப்பமனம்புளிக்குவந்துவிளர்ப்பமுகம்
பொலிந்தாளன்றே. 31

தாரணிமென்கூந்தலடிக்கடியவிழ்ந்துகயிற்புறத்திற்
றூழத்தூசு
நேரணிநுண்ணிடைமுழவகிர்ப்பமெலிந்திருதோள்வே
யுவமைநீங்கக்
கூரணிமையிருநயனங்குழிவுறவுரோமமிகக்
குளிர்மைகூறச்
சாரணிமையெனக்கருப்பமுதிர்ந்தனடாதியரிருபாற்
றூங்கிச்செல்ல. 32

[பப்பருவாகன் பிறத்தல்.]

தழுவிமதியொருதசமுந்தனிப்பிரசூதப்பவனந்
தாவிக்கொல்ல
வழுதுகவன்றினியாகாவன்பனுறவென்றுமென்றவ்
வரிவைசாம்பத்
தொழுதுகரங்குவித்திறங்கித்துடித்தரற்றித்தோமிலசெந்
நாகத்துச்சி
வழுவியொருமாமணிவந்தெனப்பகாக்கவின்மெயொரு
மைந்தன்வந்தான். 33

வடிவமிகுமதனனெனவான்கிளைச்சூர்தெறுவேற்கை
மயிலோனென்னக்
கடிமலர்மென்றுறைமயிலைக்கலந்துமுகினிகர்த்துலகங்
காப்போனென்னத்
துடியிடையின்றிருமகவைத்தோற்றினளென்றிடக்களிபோய்த்
தொல்லோர்சூழப்
படியரசன்றன்மருகனுடனேகிவைகையுதம்
படிந்துற்றானல். 34

கூலமுறுபல்வகைக்கொங்கொடுசுண்ணமரிசனமுங்
கூட்டுநன்னீர்
கோலமிகுநகர்மாந்தர்சிவிறியிற்கொண்டெதிர்வீசிச்
சுபங்கொண்டாடச்
சீலமறையவருவப்பவளித்திறைவனேழையரேழ்
தினஞ்சூரின்றிச்
சாலவெடுத்தேகுபெனநிதியிறிறந்ததிர்முரசஞ்
சாற்றிவைத்தான். 35

[அருச்சுனன் பப்பருவாகனைப் பாண்டியனுக்குக் கொடுத்தல்.]

பஞ்சவனங்கனைபயந்தபப்பருவாகனனென்னப்
பகருநாம
மஞ்சனெழில்விழிகவர்ந்துவாகிருபதுண்டயானை
வாட்டுவன்மை
விஞ்சிரகுபதிநிகர்க்கும்வீரனிவனெனத்தாதை
வியந்துகூறிக்
கஞ்சமலர்க்கரத்தேந்திக்கழிகாதன்மாதுலனற்
கரத்தினீந்தான். 36

பெற்றுமகவுலகறியப்பிறந்தமுதினிந்திரன்போற்
பெறிதுவந்தே
யிற்றையெமதொருமரபைநிலைநிறுத்துநினக்காற்றற்
கிலன்மாறென்னுப்
பொற்றவழுமணிவலயப்பூழியனப்பற்குனனைப்
புகழ்ந்துகூறி
யொற்றைமணிக்குடைநிழற்கீழெழாதுங்கியினிதாசுபுரிந்
திருந்தானன்றே. 37

மகப்பேறுசருக்க முற்றும்.

(ஆக சருக்கம் 18க்கு-கவிகள், 848.)

## (19-ஆவது சேதுதரிசனச் சருக்கம்.)

---

இச்சருக்கத்தால், சித்திராங்கதை தனது நாயகனது பிரிவாற்றுமை கூறுதலும், அருச்சுனன் சேதுதரிசனஞ்செய்தலும் திருப்புல்லாணி கன்னியாகுமரி திருவாஸினன்குடி திருநணுமுதலிய ஸ்தலத்தை தரிசித்தலுங் கூறப்படுகின்றன.

---

கந்தரவாகன்சுதனக்கடிநகர்விட்டகன்றிடத்தன்
கருத்துற்றெய்திச்
சிந்துநுகரயிலோன்பாற்செப்பிவிடைபெற்றுளிர்சே
யிழைபாற்சென்று
சுந்திரச்சந்திரவதனத்துடியிடைமெல்லனப்போக்குச்
சுகநேர்வாக்குச்
செந்திருவேயெனக்குவிடைசேதுதரிசனஞ்செயநீ
செப்பாயென்முன். 1

[இதுமுதல் 2-கவிகள், தலைவன் பிரிதனோக்கித்தலைவி துயரடைதல்.]

செப்புருக்கிவிட்டதுபோற்றேர்வேந்தன்மொழிசெவிக
டயச்சேர
வப்பருகுபைங்கூழினரிவைமெலிந்தென்புலவி
யாற்றற்கந்நா
ளெப்பிறவியினும்பிரிவதிலைநினையென்றிசைத்தடலா
ரிரதிகேள்வன்
வெப்புறுசாயகம்விடுக்கும்வேலையகலுதறகவோ
வேந்தரேறே. 2

என்றுமெனத்தணப்பதுளத்தெண்ணுயென்றிருந்தேனென்
றேங்கியேங்கிக்
கன்றுகரந்தனிற்சோரக்கினமைமேகலைசோரக்
கண்ணீர்சோரத்
துன்றுகுழல்சோரமுகஞ்சோரமனஞ்சோரநகிற்
றுணைகள்சோர
வொன்றுமுணராவெழுதுமோவியம்போன்றிருந்தலக்க
ணுறுமின்னாளே. 3

[இதுமுதல் 3-கவிகள், தலைவன் தலைவிக்குத் தேறுதல்கூறல்.]

அக்கமொழுகாவிதவிர்த்தணிதவழ்மென்றுணைமுலைமார்
பழுந்தியொல்க
மிக்கவணைத்தரியடர்சேல்விழியிழைநேர்மென்மருங்குல்
விரிந்துவேரி
சக்குமலர்த்தொடைதழுவிக்கருகிநெறிந்திடுங்கூந்தற்
கவின்செய்மேனி
யிக்குமொழிப்பெண்ணரசேயானடைவல்விரைவினினை
யிரங்கேலென்றான். 4

என்னையழகினின்வெலுமோரேந்திழைகாண்குறின்மறப்பா
யெனைநீயென்றே
மின்னனையாள்விம்மிவிம்மியிரங்குதலுமீட்டுமவள்
விழிநீர்மாற்றி
வின்னிலவச்சகடன்றிப்பிறமாதைமிகநசையா
விதந்தோர்நங்காய்
சொன்னமொழியயரேனென்றெப்பறுசூளுரைத்தவடன்
றுயரைநீக்கி. 5

[அருச்சுனன் சித்திராங்கதையை விட்டுப்பிரிதல்.]

நான்குமருப்பிபபதிசேய்நல்குவிடையெனப்பலகா
னயந்துகேட்ப
மீன்கவருங்குரண்டம்வளைவேற்றுமைதேர்வறத்திகழு
விரிநீர்வைகைக்
கோன்குமரிசிறிதுமனங்கொண்டுவிரைந்தெதிர்கியெனக்
குழைந்துகூறத்
தான்கடிதவ்வொருமொழியினேயகன்றானாதையரு
டனையன்பின்னோன். 6

வேறு.

பெற்றுவில்வனப்புவந்துபெருகுபொற்கலன்கழித்
தற்றவாசையார்மெய்பூணுமாடைபூணெலாமணிந
தெற்றைநாளுமழிவிலாவிருக்குவேதமோதிடப்
பெற்றமாதவத்தர்சூழமதுரைபின்னராயினன். 7

காளைமேதியறவுழக்கவேகலங்குமனதுடன்
வாளைபூகமேறுநாடுவளமைகண்டுகண்டுசின்
னாளினேபன்னாரநாடிமூழ்கியேநமன்றனைத்
தாளின்வென்றதாணுவிண்டுதாள்பணிந்துசென்றரோ. 8

விம்மிவிண்ணடைந்துதாழமேவியந்தரங்கமா
வெம்மைகொண்டிடாதுபூவின்மேகமாகவந்துகாத்
தம்மரக்கரைப்படுத்தியாதிராகவன்னெனச்
செம்முகம்நிறைந்துநின்றசீதவேலைநண்ணினன். 9

வேறு.

புரையறத்தெளிந்தகத்திற்பொருள்பலதாங்கிநீர்மை
வரையுறநிறைந்துகாட்டிவான்முகங்குளிரவாரம்
பொருகரையடியார்கம்மேற்பொருந்தக்கையமைத்துஞானக்
குரவனைத்துரைக்குஞ்சொல்லிற்குமுறுமக்குரவைகண்டான். 10

நிலைபெறுவகத்தவாகிநிறைமணியினங்கடாங்கி
மலைநிகர்க்கரந்துகாட்டிவயங்குமீனேக்கம்வீசி
யலைவளைக்கைகணீட்டியழைப்பபோலமையும்பண்பால்
முலைவிலைமகளிர்மானுமுழங்கின்சொன்முந்நீர்கண்டான். 11

நிலைதவவேடங்கண்டுநேரிழையின்மைகண்டு
மலைநிகர்தனுவைக்கண்டுமைநிகர்தனுவுங்கண்டே
குலமுனிசுதன்மேல்வாளிகும்பியென்றுகைத்தோன்சேயென்
றலைகடல்கதறிற்றம்மாவன்றுசெய்யலக்கணெண்ணி. 12

முன்னொருகால்வந்திதன்மேன்முனிந்தபோன்முனியேலென்னு
மன்னிராகவனுமென்றேவைத்தகாணிக்கையேய்ப்பப்
பொன்னொடுமணியுமுத்தும்பூத்திடும்பவளமற்றுந்
தன்னொருதிரைக்கையேந்தித்தனஞ்செயன்றன்பாலுய்க்கும். 13

எம்மொருநண்பன்மாறனீன்றமின்னுயங்கிக்காம
வெம்மையுற்றிடநீத்தானென்றெதிர்வைதுவெகுள்வபோலு
நம்மொருபுதல்வன்பேரனுமெனவேடநாடி
விம்மலுற்றழுவபோலும்வீங்குநீரொலிப்பமன்னோ. 14

மணிமுடியிழந்துசிராமருவிபசிரசுஞ்சோதிப்
பணிதவிர்ந்தக்கமாலைபரவியமார்பும்நோக்கிப்
பிணியுழந்தாற்றிப்பெற்றோற்குரைத்திவைபிரிப்பலென்னுத்
துணிவொடுமுவணைக்கேகுந்தோற்றத்தினலைகளோங்கும். 15

தமங்கெடவொளிசெய்கூர்வாட்சதமகற்கஞ்சிப்போந்தீண்
டமுங்கெனைவிடாதுகொல்வானடைந்தகொலவன்சேயென்னுக்
கமஞ்சிறைமைநாகங்கண்கலுழ்வொடுபாறலேய்ப்பத்
திமிங்கிலகிலநீர்விசித்திரைகடல்கிழியச்செல்லும். 16

மின்னுவாள்கிடுகுதண்டுவேலொடுசூலமாதி
துன்னுபல்படைகள்யாவுந்துணிக்குமோரீட்டிமான
மன்னியபல்விகாரவடிவமீன்றொருகுதியெஞ்சத்
தன்னொருகொம்பின்வீட்டித்தனிச்சுறாவுலவுமாதோ. 17

மாதிரம்வலஞ்செய்தெய்த்தமைத்துனன்றன்மேற்சாந்தஞ்
சீதான்றுயில்விட்டெய்திச்செங்கைகொண்டெறிந்தாலேய்ப்பப்
போதவிழ்முடங்கற்றூதுபுன்னையஞ்சுண்ணமேந்தி
யோதநீர்த்தரங்கமீதினுலாவிளந்தென்றல்வீசும். 18

இடும்பைகூர்ந்தென்றமின்பமெட்டுணையின்றுநீங்காக்
கொடும்பவம்விளைக்கும்பொல்லாக்குடும்பபாரத்தினொந்தே
விடந்தனிலிகழ்ந்துநீத்துவீட்டின்பம்விழைந்துமேவுங்
கடுந்துறவியரிற்போயக்கரைபெறக்கலமுலாவும். 19

ஈரிருமருப்பினுகத்தெருத்தமரிறைவன்றன்கு
மாரனென்றுரைத்தற்கேற்பவாள்விழியிமைத்தலற்றுன்
காரிரும்புனலைக்கவ்வுங்காட்சியுங்கரையுலாவிப்
பேருவெண்டிரைவிண்மீப்போம்பெற்றியுமுவந்துநோக்கி. 20

சங்கினநான்குங்கண்டான் சரப்பொருள் பலவுங் கண்டான்
மங்குல்கண்படுவகண்டான் மகரமீன் முனேவகண்டான்
பொங்கியதரங்கங்கண்டான் புதுமணிப்பரப்பைக்கண்டான்
சிங்கலிலரவங்கண்டான் சேவிலக்கறமுன்கண்டான். 21

கருமுகில்வனசம்பூத்துக்கார்முகங்கவினவேந்தி
வருவபோன்முன்னோர்நம்பிவந்துமறக்கடங்களோடும்
பொருபகைநிருதரூரிற்புகநெறிபுதுக்குஞ்சேது
தரிசனமுவந்துகண்டான்றயித்தியர்பகைவன்றந்தோன். 22

வேறு.

தாயொடுதந்தையுந்தணிப்பில்வெம்பசி
நோயுறவேனைக்கியுநகரும்பாவியும்
தூயதன்னில்லவடுயருழந்திட
நாயினிற்கணிகைபானயக்கும்பேதையும். 23

தஞ்சமென்றடைந்தவர்தமக்குமீளறு
வஞ்சனையிழைப்பவன்மன்னைவிட்டொரு
வெஞ்சமந்தன்னில்வெந்திட்டவீரனும்
நஞ்சினைச்சுரபிக்குநல்குபாவியும். 24

தன்னொருகாதலற்பிழைத்துத்தான்மறைந்
தன்னியனுறவுசேர்பவளுமாமுறைக்
கன்னிகற்பழித்துப்பின்கடிமணஞ்செயா
தன்னவளிடர்க்கடலாழச்செய்குவோன். 25

வேதநன்னெறிநிலைதவறுவிப்பிரப்
பாதகன்றனைப்பணிபவனும்பண்டைநூற்
றீதரும்பொருணிலைதெரித்ததேசிகற்
கோதருந்துன்பம்வந்துறச்செய்நீசனும். 26

கருவழித்திடுமிகுபாவிகற்புடைக்
குருமனைநயப்பவன்கோவதைப்பவன்
வருவிருந்திகழ்பவன்மனைவியன்னியன்
மருவல்கண்டவள்கையால்வாங்கியுண்பவன். 27

வன்புடனோரமாம்வழக்குரைத்ததாற்
றன்குலஞ்சிதைத்திடுந்தறுகட்பாவியுந்
தன்சுதன்மனைவியைத்தனையளென்றெணா
தின்புறமுயங்குவானெண்ணுநீசனும். 28

கணைகுரற்கன்றழக்கறந்துளோன்குல
வினையலாவிழிதொழில்விரும்புவீணனும்
மனைவியைவழங்கியுண்பவனும்வாழ்த்தினுந்
தினையளவுந்தராலோபத்தீயனும். 29

பார்ப்பனகுலத்திடைப்பிறந்தும்பண்பற
வேர்த்தொழிற்கைப்படவியற்றுமேழையு
மூர்ப்புரோகிதஞ்செயுமொருவன்றன்னைநற்
சீர்ச்சிரார்த்தத்துறவரிக்குந்தீயனும். 30

பூவுலகுவப்புறப்புகலுநாற்கவிப்
பாவலரகம்வருந்தச்செய்பாவியும்
சேவிறைபுள்ளிறையொருமைத்தேவெனும்
பாவனையின்றியேபகுக்கும்பாவியும். 31

மாற்றவனின்புறமணமகன்றனைக்
கூற்றுவற்கிரையிடுங்கொடியபாவியுஞ்
சாற்றரும்பொய்க்கரிசாற்றித்தன்வயி
றூற்றுமேழையுமதுவருந்துநீசனும். 32

பூப்புறுமகளிரைப்புணரும்பாவியுந்
தீப்படவாழ்மனைசெய்யுந்தீயனுஞ்
சேப்பொலியொருவனைத்திகிரியோன்றனை
நாப்புகழாதிகழ்ஞானநாசனும். 33

மேட்டிமைக்குலத்திடைமேவிக்கீழ்மகற்
காட்டொழிற்செய்துபுமாதனோடுருங்
கூட்டினைக்கலைத்துவாழ்பறவைக்குஞ்சினை
வீட்டியவிரக்கமினெஞ்சவெய்யனும். 34

யாதொருநல்விரதமுஞ்செயானிழி
மேதையைக்கொள்பவன்விண்டுசங்கர
காதையைப்பழிப்பவன்கருமஞ்சொல்வரு
தூதரைச்செற்றவன்சூள்பிழைத்தவன். 35

அந்தணர்பாலர்கோவரிவையேமுதற்
சிந்தையிற்சிந்தியாச்செயத்தகாக்கொலை
முந்துறச்செய்முழுமூடன்கோட்டிமுன்
வந்தறிஞரையழிவழக்கின்வாதிப்போன். 36

நக்கினத்தோடுமாற்றிடைநடப்பவன்
றக்கவர்க்கண்டெழா தணையிற்சார்பவன்
ஞெருக்கவீக்கொட்டமெய்மெலிந்துஞ்சோர்ந்ததேன்
நக்குவோன்றனிற்பிறர்மனைநயப்பவன். 37

குருமொழிகைவிடுபவனுங்கொண்டபெண்
டருமொழிவேதமாத்தழுவும்பேதையும்
செருமுகத்தஞ்சியவரசுந்தீதறு
மரசினுக்கிடர்வரச்செயுமமைச்சனும். 38

தன்னிடத்தடைக்கலமாகத்தந்திடும்
பொன்னைவஞ்சிப்பவன்புனிதமுற்றதன்
முன்னவன்மணந்ததேன்மொழிமினுளையோ
ரன்னையென்றெண்ணலான்மோகத்தாழ்குவோன். 39

குறைவிலைநிறையளவென்னக்கூறிய
தறைமொழிக்கொழுகலானகித்தன்றலை
நிறைபிழைவணிகனேழையர்கண்ணீர்தரக்
கறுவுவோன்மித்திரபேதகன்மியும். 40

கங்கையின்மலங்கழிப்போன்கலன்கழி
மங்கையைமுயங்குவோன்வழியலாதகோற்
றங்குடிவருந்தவோச்சிறைவன்றனஞ்செய்
செங்கையைத்தடுக்குமோர்தீயனின்னமும். 41

வேறு.

மிஞ்சியபவஞ்செய்தோருமேவிநீராடினுரேற்
பஞ்சழற்பட்டபோலோங்கும்பவமறுத்துயர்வீடுய்க்குஞ்
செஞ்சிறப்பமையுநீர்மைச்சேதுவைச்சென்றுநோக்கி
மஞ்செதிர்மயிலினுள்ளமகிழ்ந்தனன்மகவான்மைந்தன். 42

[சேதுவில் ஸ்நானஞ்செய்தல்.]

பின்னைநாயகனைமானப்பெருங்கடற்கிடந்தசேது
முன்னர்நீர்துளைந்துபோற்றிமுறைபலமுறையின்முற்றித்
தன்னுடல்பூப்பவாமோதந்திகழ்ந்தகலாயோகங்
துன்னுமாதவர்துணைத்தாடொழுதவணகன்றுபோந்து. 43

[திருப்புல்லாணி]

சீரியர்வணங்கக்கண்டுஞ்சிந்தைசெய்யாதோன்செல்வம்
வீரியமழியுமென்பதுலகிடைவிளங்கமேனாள்
வாரிதிக்கரசைநோக்கிவளர்குசசயனத்தேனாள்
ஆரியனேற்றசீர்ப்புல்லாணியையடைந்துபோற்றி. 44

[வீடணனடைக்கலத்தலம்.]

என்புலத்திசைந்துநில்லாதெண்ணலர்த்துதிப்போய்நீயென்
றுன்புறினின்னைவாளான்முடிப்பலென்றுரப்புமுன்னோன்
அன்புவாரிதியுநீந்தியடைந்தவீடணனுக்கன்பாய்த்
தன்பதச்சேவைராமன்றந்துழிகண்டுமீண்டு. 45

[இது முதல் 5-கவிகள், இராமலிங்கேசுரனைத் தரிசித்தல்.]

மீண்டுதன்பேதையோடும்வெயிற்குலத்துதித்தவீரன்
காண்டகுமமரர்போற்றக்கருதியோர்வியாசந்தன்னு
லாண்டுவாலுகத்தினூற்றுமரும்பெருமிலிங்கந்தன்னைத்
தேண்டியபொருள்முன்னுற்றசெயலினிற்றெரியக்கண்டான்.

தீவளர்செங்கைமுக்நூற்றிகழுமெய்மறைசேர்நாவான்
மூவுலகுவப்பத்தூசுமுழுதளித்திசைமுதிர்ந்த
தேவலன்மரபோர்யாருந்தினந்துதிசெய்யுந்தூய
சேவநமிராமலிங்கதேவனைப்போற்றிசெய்வான். 47

ஆலமுற்றிருண்டகண்டத்தரகரவாழிநீரின்
வாலுகவடிவாய்நின்றமங்கைபங்காவெண்கோட்டுக்
கோலமுமனமுமாகிக்குறித்தருண்முடிப்பான்றேடும்
மாலொடுமயனுங்காணுமறைப்பதமுடியோய்போற்றி. 48

தக்கனைப்புரத்தைமாரன்றனைச்சலந்தரனைச்செங்கொ
லக்கவாசுரன்சேயைக்காலனைச்சினந்தழிப்போய்நீங்கா
விக்கொடும்பிறவிநீங்கவேத்துவோர்க்கருடந்தாட்கொ
ணக்கவைம்முகசிவைக்குநாதவெண்டோளபோற்றி. 49

ஓவருமாயைக்கங்குறனையுணர்வொளியாற்போக்கி
மேவருநிலையவீட்டின்மேவிமெய்ப்பொருளாமுன்றன்
சேவடிதரிசித்தென்றுஞ்சிதைவில்பேரின்பந்துய்க்குந்
தேவலன்மரபுவாழத்திருவருள்புரிவோய்போற்றி. 50

அவிரிராமலிங்கத்தெம்மானடிபணிந்தகன்றுபோந்து
கவையடிப்பகடுழக்கக்கயமொரீஇத்துள்ளித்தெங்கின்
குவிகுலைவாளைவீழ்த்தக்கொம்பிறாலிடறித்தேறற்
புவிபடர்ந்தருவிபாயும்பொருநைமாநதியைக்கண்டான். 51

[திருப்பழநிக்கேதிர்தல்.]

அந்நதிதுளைந்துநீங்கியருட்புகட்டமிணுட்டெல்லைக்
கன்னியைக்கண்ணுற்றூடிச்கடந்துபஃறலஞ்சேவித்துத்
துன்னுபொன்னிலத்திலேகர்துயர்தெறச்சூர்தடிந்தோன்
மன்னுமாவினன்குடிக்குவாதசேய்க்கிளவல்வந்தான். 52

[இதுமுதல் 6-கவிகள், முருகக்கடவுளைத் துதித்தல்.]

தடங்குளன்பூங்காதெய்வத்தருநறுஞ்சோலைசான்றோர்
மடம்பலகண்டுவந்துவான்கிரியிவர்ந்துகாவ
லிடும்பனைக்கடந்திலேசரினமுழுதேத்தநின்ற
கடம்பனைத்தெரிசித்துள்ளங்களிக்திருகழற்றாழ்ந்தேத்தும்.

சிறந்தான்றழற்கட்போந்துசிலைவக்கொருமகவாய்க்கங்கை
யுரைந்தறுமீன்றனப்பாலுண்டயற்சிறைபுரிந்தே
பறைந்துரைகுடிலைக்கொப்பில்பரன்செவிகளிப்பவஞ்சம்
நிறைந்ததாரகனுங்குன்றும்நெகச்செலுத்தயிலோய்போற்றி.

வானிமிர்பூதர்வீரவாகெண்மரிலக்கர்தம்மைப்
பானுவின்பகைஞன்றெண்ணீர்ப்பரவைபுட்படுப்பத்தொட்ட
கோனலிந்தொழியவானக்குழுகுதுகலிப்பவெற்றி
வேனணிவிடுத்துமீட்கும்வீரமான்மருகபோற்றி. 55

மேதர்மறையயனைந்தங்கஞ்செப்பவிண்டொழும்புசெய்யுஞ்
சீர்படைத்துகம்நூற்றெட்டுஞ்செய்யரசழிவில்காயச்
சூர்முதறடிந்திலேகர்துயரொறுத்தவபொன்றுத்தி
வார்முலைவள்ளிகைம்மாமகட்கொருமகுணபோற்றி. 56

ஊரறுத்திமையச்செல்விக்கொருபதியானேன்சேயாய்ச்
சூரறுத்தவபைங்கேழ்மெய்த்தோகைவாகனசெஞ்சூட்டு
வாரணத்துவசகுன்றின்வாழ்க்கைநாயகமாண்புற்றோர்
தாரணத்தியானங்கூருஞ்சரவணபவனேபோற்றி. 57

இன்னசொற்புகழ்ச்சியேத்திபிணர்விரிநீபத்தொங்கற்
றன்னுமாறிருபுயச்செஞ்சுடர்மணிமவுலிபூத்த
சென்னியாற்றெளிருஞ்செவ்வேட்டிருக்கிரிவலமாய்ப்போந்து
பின்னரத்தலநீத்தெண்ணில்பீடுயர்தலஞ்சேவித்து. 58

[இதுமுதல்-2-கவிகள், காவிரி பவானி கூடல் வருணனை.]

வேறு.

செங்கண்மால்வரத்தாற்கங்கைவீறடக்குஞ்
செய்திதன்பதியிடந்தெரிப்பான்
சங்கெதிர்தவழுந்தன்றிரைக்கரத்திற்
றண்மலர்ச்செண்டெடுத்தாடிக்
கொங்கைபுற்புதங்கணிவந்திடக்குவிந்து
குங்குமஞ்சந்தனங்கோட்டம்
பொங்கமெய்முழுதுமணியணிபுளைப்
போந்திடும்பொன்னியங்கனையை. 59

கண்டுசக்களத்திதன்னிறுமாப்பைக்
கவிழ்த்தகாரிகையெனக்களிப்புக்
கொண்டுகைதழுவிச்சந்தலர்மணியக்
கோதைமெய்புகப்புகக்குவித்துத்
தண்டமிழ்முகமனுரைத்தெனவொலித்துச்
சாம்பவிசங்கமமாகும்
மண்டிநன்முனிவர்வதிந்தநண்ணுப்ப
வானியைநண்ணினன்மன்னே. 60

[காவிரி பவானி கூடலில் ஸ்நானஞ்செய்தல்.]

சீலமாதவர்களினிதருந்தவஞ்செய்
தெக்கணவதரிகாச்சிரமச்
சோலைபுமுனிவர்மடமுஞ்செய்யாக
தூமமுங்கண்டுவந்தேகி
நீலவெற்புதித்துக்கரையகழ்ந்தலைக்கை
நிகரினுற்றிணைப்பொருளேந்திக்
கோலமுற்றெதிர்பவானிகாவிரியுங்
குலவியகூடலிற்குடைந்தான். 61

[இதுமுதல் 2-கவிகள், சங்கமேசுரர் வேதாம்பிகை
ஆதிகேசவப்பெருமானைச் சேவித்தல்.]

திரிபுரதகனதேவர்கடேவ
சிவசிவசிவைமகிழ்மகுண
வரகாதிரியம்பகமழுவேந்தி
யாலபோசனவழலாடி
கரியுரிதிகழ்மெய்யைம்முககால
காலகங்காதரகாவென்
றிருபுறநெருங்கியிமையவரேத்து
மீசுரசன்னிதியெதிர்ந்தான். 62

சோதியைச்சுடரைச்சங்கமவிறையைச்
சுந்தரன்றூதனைப்பெண்மைப்
பாதியைப்பரனைப்பழயமெய்ப்பதியைப்
பரிவுடன்றுதித்தெதிர்பணிந்து
வேதமோருருவுகொண்டொளிர்வேதாம்
பிகைபதம்விழைவொடுமேத்தி
யாதிகேசவன்செஞ்சரண்டொழுதுவப்புற்
றனனரவங்கணையன்பன். 63

[ஹாடகமலை வரதராஜப்பெருமாளைச் சேவித்தல்.]

பழிவழிவொழுகுஞ்சோமுகற்செகுத்துப்
பரவையுட்சேலெனப்பாய்ந்து
மொழிவழியுணர்தற்கருமறைகவர்ந்து
முன்னரிற்பெரிதுளமுவந்து
விழிவழிக்குயர்ந்துசேண்செலும்வேத
மெவற்படைந்தயன்றனக்களித்தெம்
வழிவழியடிமைகொண்டருள்வரத
ராசனைவணங்கினன்மாதோ. 64

[பஞ்சகிரி தரிசனஞ்செய்தல்.]

வேறு.

துங்கமுற்றுயர்பவானித்தொல்பதிக்கணியாயுற்ற
மங்கலம்வேதஞ்சங்கமாசுணம்பதுமமென்னும்
ஐங்கிரிதரிசித்தப்பாலருச்சுனன்சவியசாசி
பங்குனன்கிரீடிசுவேதவாகனன்விசயன்பார்த்தன். 65

[மேற்கடற்கரை சேர்தல்.]

அப்பதிதணந்துவான்பெய்தரியபைங்கூழ்களோங்கு
மொப்பறுங்கொங்குதேயத்துபர்தலம்பலவுங்கண்டே
செப்புகன்னடநாடுற்றுத்திருநாராயணச்செல்வன்றாட்
கைப்படுத்தகன்றுமேலைச்சாகரக்கூலங்கண்டான். 66

[பரசுராமக்ஷேத்திர தரிசனம்.]

அருச்சுனமிடறுந்தேவுக்காவியொன்றுடல்வேறாகு
மருச்சுனன்பமரம்பம்புமலங்கரேய்ந்தழகுலாவி
யருச்சுனவணிகொடிண்டோளாயிரம்பெற்றவீர
வருச்சுனன்றன்னைச்செற்றோனகனிலங்கண்டுமீண்டு. 67

சேதுதரிசனச்சருக்க முற்றும்.

(ஆக சருக்கம் 19-க்கு கவிகள், 915.)

---

## (20-ஆவது பஞ்சதீர்த்தச் சருக்கம்.)



இச்சருக்கத்தால், பஞ்சதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தலும், அத்தீர்த்தங்களில் தேவேந்திரன் சாபத்தால் முதலையாயிருந்த தெய்வ கன்னியர் ஐவருக்கும் சாபவிமோசனமாதலுங் கூறப்படுகின்றன.

[பஞ்சதீர்த்தத்தையடைதல்.]

விரிந்தபண்மிழற்றுஞ்சிறைச்சுரும்பணுகா
மென்மலர்ச்சண்பகமுதலா
மரந்திகழ்சோலைசூழ்கயம்நதமுன்
வந்துவந்தாடிவானிறைசேய்
பொருந்தநாற்பணியுமுவந்துசர்சீடர்
புரியமெய்ப்பொருளினிற்புக்தி
பரிந்தமாதவத்தரினிதுறைபுனிதப்
பஞ்சதீர்த்தத்தினையடைந்தான். 1

ஐவருமொடுங்கவடக்கியங்குளுற்று
மருந்தவர்க்காண்டகையிரைஞ்சப்
பைவருபணியுமிதழியும்பிறையும்
படர்சடைப்பரணிகர்புனிதக்
கைவருகனலோர்யாரைநீயென்னக்
கழறினன்றன்னொருமாபுந்
தைவருயாழின்முனிவனுமுற்ற
தன்மைபுந்தவக்குழாமுவப்ப. 2

பாப்புகம்பரித்தபடிநிலவுயிரைப்
பார்ப்பினைப்பறவைகாக்குவபோற்
காப்புடையரசநின்றிருவதனக்
காட்சிமாதவத்தினுற்கண்டேம்
வீப்பொலிசுனையைந்துளவிவணதனோர்
வீறினைவிரிக்கின்விண்ணெழுகும்
பூப்புனனிகரன்றெனவுலகிசைப்பப்
புண்ணியமொருவழிபூத்த 3

(இது முதல் 5-கவிகள். பத்ர தீர்த்தவருணனை.)

கனற்றிருநுதலிற்கண்ணுதற்பரன்செங்
　　கதிரொளிபரப்புவேணியினூர்
புனிற்றிளங்கீற்றுப்பிறைப்பனிகவற்றும்
　　புனறவழ்முண்டகமலர்மீத்
தனக்கிணையெனக்கண்படுப்பதன்பெடையைத்
　　தணப்பறுஞ்சூட்டிளவன்னங்
கனக்கணம்படரப்பகலுநன்கறியாக்
　　கவினுறுமகத்தியச்சுனையும். 4

ஆசுவத்தடருஞ்செறுநர்மெய்சிதைய
　　வலங்கொளிவாள்கரத்தொருவன்
வேகமுற்றிலக்கின்விதிமுறைதாவி
　　வீசிநேரிகல்செயற்கடுப்ப
மேகமுண்பயத்துவழிசெலுமொருமீன்
　　மேனமக்கிருந்ததென்றிகலி
நாகமுற்றெளிர்பன்மீன்மிசைச்சமரம்
　　நடத்துசவ்பத்திரத்தடமும். 5

மருக்கமழ்துளவோன்வாய்மையொன்றவன்றன்
　　மனைவிமுன்சொலவாற்சிவண
முருக்கவிழ்கஞ்சமிசையுறங்கஞ்ச
　　முன்னரின்வெள்வளையுழல்வ
குருக்கொள்பல்வகைமாமணிகுயிற்றியபொற்
　　குட்டிமச்சாயைபோந்துயர்பொன்
றருக்கிளர்தருபன்னிறமலரொணக்கேழ்
　　தருபவுலோமகோட்டகமும். 6

கணிகைபானிதியமளித்திடும்விடரைக்
　　கடுப்பச்சூழுகுமுண்டகமீ
தணிதிகழ்முத்தமுயிர்க்குவெண்குரண்ட
　　மணுகவெண்டலறிமெய்விதிர்ப்பத்
திணியுடற்கமடங்குழவியென்றதைத்தீ
　　விரத்தொடுந்தன்வெரிநமர்த்தித்
தணிபுயலயத்தாட்கரந்திடுங்காரந்
　　தமமெனும்புனிதநீர்ச்சிறையும். 7

இருளிறக்கதிர்செயிரவிகூவிரமீர்த்
திடைவிடாதோடியெய்த்தனவேழ்
மரகதப்பரியென்றிரங்கிநீருட்ட
வருவபோற்றரங்கம்வான்மருவும்
சிரலுடலசைவற்றிருசிறையசைத்துச்
சேல்மிசைநோக்கொடுஞ்சேணிற்
பிரமவித்துறழத்திகழ்தகும்பரத்து
வாசமாம்பெருமைசேர்கயமும். 8

செப்புநல்லிசைசெய்யறுபதம்நுகரத்
தேன்பிலிற்றினமலர்திகழு
மிப்புனல்குடைவானமரும்விழைவ
ரிலகுவெண்கனியிதென்றெண்ணி
முப்புடைத்தெங்கின்மீதமர்கடுவன்
முயற்கறைதிகழ்முழுமதியைக்
கைப்படுத்திடக்கைநீட்டுநற்கழனிக்
காவலவெனக்கழறினரால். 9

அங்கவர்கழறுமொழிசெவிபடா
வரவொடுமுறவுசெய்திருந்த
திங்களஞ்சடையோனிகர்க்குநுந்திருத்தாட்
டெரிசனமெய்துபேறுடையேற்
கிங்கிவைகாண்பதரியதன்றெனவேத்
தெடுத்தவர்தமக்குவரியைப்போற்
பொங்குநீர்க்கயத்துட்குடைந்திடவேகும்
பூபதிக்கவரிவைபுகல்வார். 10

[முனிவர்கள் முதலையின் செயல் கூறல்.]

வீரவேல்விசயவெற்புறழிமில்வெள்
விடையிவர்விமலன்வேணியினு
நாரநேர்புனிதம்பெறினுமிவ்வமைய
முயிர்கவர்நஞ்செனத்தகுமாற்
கோரமீன்படிவச்சூர்ம்பலீர்வாணோர்
தொடியவாற்றீவிழிச்சிஞ்சு
மாரமோரோர்வாவியினுமொவ்வொன்று
வரையெனமதர்த்துலாவுதலால். 11

மன்னுதம்வலியைமிகமதித்துறுதி
வழங்குமெம்மொழிகொளாதிழிந்தோர்
பொன்னுலகடைந்தாரன்றிநீர்துளைந்து
போந்தவரின்றிதுகாறும்
இன்னுயிர்ச்சேவலைப்பெடையுடன்வீற்
றிருப்பகண்டினியுயிர்வாழே
னென்னவோரனந்தீப்புகுவபோற்கமலத்
தேகுநீர்நாடகேளின்னும். 12

வெளிகவர்ந்தோங்கியடர்சினைத்தருவிவ்
விபினமுற்றிருந்துயர்வேள்வி
விளைதவத்தீட்டத்தியாமுமிந்நீருண்
மேவியாண்டொருசதஞ்சென்ற
களிமிகச்சுரும்பரினமுரான்றண்ணக்
கற்பகநறுமுகைவெடித்துத்
துளிமதுத்தெரியற்புனைசசிபதிதன்
சுதவெனமனனிவைசொனுமால். 13

வேறு.

முற்றுணர்வீர்விண்ணெழுந்துமுழங்குமுந்நீர்பொருவஞ்சனையி
னுற்றவிடங்கர்வலித்தலைபானுமுருவகையன்றறிமீ
துற்றபயந்தியண்டர்களில்வபினுண்டுவிளாமிசையோர்
கொற்றியெடுத்தெறிவிக்கிரமன்னருள்கொண்டெடுகிர்மீள்குவெனுல். 14

[இது முதல் 5 கவிகள், அகத்தியதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தல்.]

இக்குகசப்பவிசைக்குமொழிச்சயிலக்குமரிக்கிறையாம்
நக்கனெனத்தகுறும்மருளின்வலிநண்ணுமியானிதனுட்
டொக்கவன்மீனையெடுத்துமண்மீதினிமீறுமறவீசுவலென்
றக்கயநீரவத்தொடுவிண்புகவன்றுகுதித்தனனால். 15

விசைத்திருபாதமசைத்தெதிர்நாரமிசைக்கரமாறியெடுத்
திசைத்தசுரும்புவிசைத்தெழவிண்டையிசித்தறலோடியேநாற்
றிசைத்தலைபம்பியொசிப்பநசிப்பசிதைப்பவுழக்கினனல்
வசைத்திருநாவினிசைப்பறியாதவலாரிதருந்தனயன். 16

நந்திறவாரன்மலங்குபன்மீனுடனற்சபரங்குலைய
விந்திவரங்குமுதங்கழுநீரவிபிண்டையினஞ்சிதைய
நொந்துளமாமையுநீகமுமள்ளனுழைந்துபதைத்திடநீள்
கந்தாமுற்றுவலாகமுதற்புட்கலங்கியிரிந்திடவே. 17

நின்றெதிருந்துவனுனுகிசாமுகம்நீரினமிழ்ந்தெழுவன்
துன்றுசெதும்புசிதைந்திடவங்கைகடுற்றியுழக்கிமனங்
கன்றிவன்மீன்வருகிற்கிலவென்றுகயந்தனைமோதிடுமா
தன்றிவனுலவ்வகத்தியவாவியலைந்துகுலைந்திடவே. 18

அங்கொருசார்குழுதழுவெனுமோதையளிக்குமயஞ்சிதறிப்
பங்கமுறத்தனதம்பினிலேகிப்பதுங்கும்வெடித்தெழுபால்
தங்கியவச்சவருந்தவருங்களிதங்கினர்சஞ்சலமற்
றிங்கிவனுடுவினோதமறிந்தவர்யாவர்கொலோகளியார். 19

[அருச்சுனனீரிற்றுடைதலை முதலையுணர்தல்.]

மத்தவிலங்குவனத்தையுழக்கியவாறெனவித்தகனப்
புத்தமுதொத்தவனத்தையுழக்கியபோதுராகாதிபா
ரத்தலைதாழ்புனலுட்கிரியாமெனவக்கநெருப்புமிழ
நித்திரைகொண்டயர்வுற்றவிடங்கர்நினைத்துவிழித்தனவால். 20

[முதலைநீரினின்று ஆகாயத்திற் குதித்துவீழ்தல்.]

நின்றுகுறித்திதுழக்குநருண்டெனநெஞ்சின்மதித்துமிகக்
கன்றியுடம்புமுறுக்கிவைகூர்பற்கறித்துருமிக்கடிதே
யொன்றியபற்பலவெஃகமெனத்தகுமொப்பறுவால்விசிறி
யன்றுவிண்மீதுகுதித்ததுகம்பலையண்டமுடைந்தெனவே. 21

[முதலை அருச்சுனன் காலைக் கவ்வுதல்.]

அந்தவொலிப்பினின்மும்மடிவாய்கொடரற்றியவ்வாவியின்வீழ்ந்
தெந்தைபிராமணதம்பினிலுங்கடிதென்னவிரைந்தெதிரின்
வந்துதனஞ்செயனுந்துணெனும்படிவவ்வியவன்கழலை
முந்தொருயானையைவந்துவலித்திடுமுதலைநிகர்த்திடவே. 22

[இது முதல் 6-கவிகள், அருச்சுனனுக்கும் முதலைக்கும் யுத்தம்.]

பற்றியபாதமிடங்கரெனத்தெரிபங்குனனம்புனலுட்
சற்றுமசைப்பறநிற்றலுமஃதுகுசத்துளிழுப்பமுனி
வுற்றதின்மெய்யிருகைகொடுபற்றியுறுக்கிமுறுக்கியெதி
ரெற்றியுரப்பிநெருக்கிமறித்துமிசித்துநசித்தனனால். 23

ஓரொருகுத்தெறிவானுகுமிற்படவொள்ளியன்மோதுதலும்
நீரொருவாவதுவுந்தனவேசகநீளநிமிர்த்துவளைத்
தேரொருவாவடிவத்தினிலங்கிதமெய்தவடித்திடுமாற்
காரொடுகார்மலைவுற்றெனவண்டகடாகமதிர்ந்திடவே. 24

பற்குன னுங்கரை துற்றநினைந் துபலங்கொடிழுத்திடினே
முற்பலிடங்கர்வலிக்கொடெழுந்ததின் மும்மடிபம்பிடுமாற்
பற்கொடுகவ்வுபதத்தைவிடாவெதிர்பன்முறைமொத்திடினுங்
கற்படுபுட்பமதொத்தவலா லுடல்கம்பிதமுற்றிலவால். 25

அப்பினுள்வாருண திக்கினிசித்திடினஃதுகுணக்கெதிருஞ்
செப்பியசாரிதிரித்திடின் வால்கொடுசெய்யவன்மேலெறியுங்
குப்புறவெண்ணிநிவந்திடினஃதுகுழம்பினமிழ்ந்திடுமா
லிப்படி முக்கடிகைச்சமர்செய்தன னிந்திரன் மாமதலை. 26

மற்படுகையினிடித்திடவச்சிசுமாரவுடம்பதனின்
விற்படுவாணிகர்வாலதியாலதுவீசலிவன் றனுவிற்
சொற்படநாவினெடுத்தறைதற்கருசோரியெழுந்தனவீ
தற்புதமென்னவரற்றியவாவியுமஞ்சியொதுங்கவரோ. 27

அந்தியெழுந்தவிர்செக்கர்நிகர்த்திடவவ்விருதாவரமின்
றுந்தியெழுங்குருதித்திரளோடையுடம்புநிறைத்தொளிர
கொந்திருவோருமயத்துளயர்ந்தமரத்தெரி நுண்ணறிவா
ரந்தரவாசிகளங்கைவிதிர்த்தன ரண்டர்நடுங்கினகால். 28

[முதலை கரைமீதுவிழ விசயனெடுத்தெறிதல்.]

எஞ்சினனெஞ்சினனென் றுமுகந்தனிலெற்றுகரத்தொடுத
நஞ்சயனோடுறுமாதவரத்தலநண்ணுமருந்தவரும்
அஞ்சியரற்றியபோழ்தயர்வற்றவ்வயம்பிதிராக்கரவை
விஞ்சிருகைகொடெடுத்துமண்வீழ்தரவீசினன் வில்விசயன். 29

விண்டுகைவாளின்விழுந்தகவந்தன் விறன் மிகுமொய்ம்பெனவுங்
கண்டகர்வானவர்முன்தொருசிந்துகடைந்திடுமத்தெனவும்
விண்டலமீதமர்கட்செவிதப்பிவிழுந்தமண்மீதெனவும்
மண்டனின்வந்துவிழுந்தகிடங்கர்வலாரிமகற்கெதிரோ. 30

[இது முதல் 2-கவிகள், முதலை பெண்ணுருவாதல்]

வேறு

மண்மீதுற்றுவிழுமுன்னர்மதியின்கிரணமுகஞ்சொரியக்
கண்மீதுற்றுவிழுமிஞிறுக்கணஞ்சேரளகமுகில்கவினப்
பண்மீதுற்றுவிழுமியவெண்பற்கண்முல்லைமுகைபடர
விண்மீதுற்றுவிழும்புதியமின்னற்கொடிபோலழகொழுக. 31

பொன்னுல்வலைசெப்பெனவனசப்போகிலெனப்புத்தமுதகட
மென்னுவலசமயங்கவிம்மியிறுமாந்தெழுமென்முலையிலக
மின்னேபுரையுமிடைதுவளவிழியாமயிலைவெளிவீசி
யென்னேயிதுவென்றாசயிர்ப்பவெழுந்தாளொருபெண்டிலகமனுள். 32

(அப்பெண்ணை அருச்சுனன் யாரென வினவுதல்.)

கரைமீதிவருங்கிருட்டிணன்பொற்கலன்பூண்பாவைமுகநோக்கி
விரைசேர்குழனீயாரைசெயல்யாதிங்கறியவிரியென்னத்
தரைமீப்படுத்தவிழியினளாய்த்தண்டார்புனையுங்கயில்வளைத்துப்
புரிநாண்பழுதைநசியவெதிர்புகல்வாண்மொழியினமுதொழுக. 33

(இது முதல் 10-கவிகள் தனது சாபவரலாற்றை அப்பெண்கூறுதல்.)

களிகொண்டடைந்துபுதுக்கடிசெய்கரும்புட்கிரங்கிச்சுரும்புமதுத்
துளிகொண்டதன்வாயருத்துமலர்ச்சோலைசூழ்நன்னீர்நாடா
விளிகொண்டிடுவர்வந்தைபெனவிண்மீதுறைவெண்விற்குழைமீ
தொளிகொண்டடருவிலோசனமாருயிர்த்தோழியர்மற்றொருநால்வர்.
இவர்களுடன்றேவாரணிபமெய்திப்பலநன்மலர்தருவான்
அவிர்செய்பசும்பொற்கிம்புரிக்கோட்டயிராவதக்கோனருச்சனைக்குக்
கவர்கொண்மலரைக்கைக்கவர்ந்துகளித்தவ்வனத்துட்டிரிபோழ்திற்
றவரெண்டேவமுனியொருவன்றவமுற்றிருந்தான்றபனனென. 35
கண்டேங்கண்டபோழ்தத்துக்கரந்தவுருவோன்கணையடரக்
கொண்டேம்விரகங்குலமாதர்கொள்ளுமச்சத்தொடுமடநான்
விண்டேமருணவரிபடருவிழியானுக்கிநோக்கிவருந்
தொண்டேமறந்தத்தவனருகிற்றெருக்கேமிவைகடொடங்கினமால். 36
எங்கடனுச்சந்தனமவன்மூக்கெதிரவாடையெதிர்நின்றேங்
கொங்கைகுலுங்கநடம்புரிந்தேங்குழலுங்கசப்பக்குரலிசைத்தெங்
துங்கமலர்மெய்மேலெறிந்தேஞ்சொல்லாவிரகமொழிசொற்றே
மிங்குசொலற்காகாவின்னுமிழைத்தேமிதயத்துணர்குதிரால். 37
அங்கச்செயலுக்கம்முனிசற்றசையாயோகத்துடனிருப்பத்
தங்கும்பொழுதுங்கற்புநிலைதளரவிரகந்தளர்ந்திலரா
யங்கம்வருந்திப்புரந்தரன்றனுணையெம்மையுகைத்திடவே
தொங்குவடத்தூசலின்மனத்தேஞ்சுரர்நாயகன்முன்றோன்றினமால்.
பறித்தமலர்முன்வைத்தடியிற்படிந்தியாமொல்கியெதிர்நிற்பக்
குறித்தெஞ்செயலைத்தன்பெயர்கொள்கோபமெனக்கண்சிவந்துமனங்
கறுத்தென்னருச்சனைக்கிசையுங்காலம்போக்கிக்கருத்தின்மயல்
பொறுத்தமடவீரிடங்கராப்போமின்பூவினெனப்புகன்றான். 39

செற்கண்டயருங்கூடபதச்செயலிற்சோர்ந்துபதந்தாழ்ந்து
கற்கண்டனையநயமொழியாற்கழியுங்காலங்கழறென்ன
முற்கொண்டசினமாறிமகமுதல்வனெம்மேன்முகமலர்ந்து
மற்கொண்டபுயவில்விசயன்வரினும்மிடரற்றிடுமென்றான். 40

நேர்நின்றெறிநூனுழையாமனொருங்கிக்குவிந்ததுணைமுலைமேல்
வார்கொள்சவுரபேய்சமுசிவந்தைதலவிதையெனுந்தோழி
மார்வந்திடப்பூவருபோழ்நின்வருநாரதற்கண்டடிபாவி
யேர்கொண்முனிவவெஞ்சாபமிழியுந்தலம்யாதியம்பென்றேம். 41

கேட்டமுனிவன்குடகடலின்கீழ்பாற்றவஞ்செய்வோர்க்கிடமாய்ச்
சேட்டமிகுமைஞ்சுனையுளதாற்றிருவிற்பொலிசிந்தூரநுதலீர்
கூட்டம்பிரிந்தங்குறைகுதிரேற்குறைதீர்ந்துய்விரெனவுரைப்பக் [றும்
காட்டையிரண்டொன்றினிலடைந்திங்குறைந்தேங்கரவாய்க்கயந்தோ

அந்தமகத்தோனருள்வழியீங்கடைந்தேநீவிருந்துயரொன்
சிந்தையுவப்பெய்துபுமுன்னந்தேவவனிதைசெய்தனிரால்
இந்தவடைவென்றுணைவியருமிடர்நீத்தெழச்செய்குதிரென்னுக்
கந்தமலர்மென்குழல்படமன்கழல்வீழ்ந்தனளக்காரிகையே. 43

வந்தைமொழியமுடியசைத்துவயங்குமுறுவல்விளைத்துவியந்
தெந்தைமயிற்செல்குபுநும்மையிற்றைவிடுப்பலெனவியம்பி
வந்துகயங்கடொறும்படிந்தம்மாதர்தமையுமெடுத்தெறிந்தான்
சிந்தைமகிழ்ந்தைவரும்போனார்செம்மற்பணிந்துபொன்னுலகம். 44

நீற்றைவளர்க்குந்திருமேனிநெருப்பைவளர்க்குங்கையினரைப்
போற்றிவிடைநல்குதிரென்னப்போந்தெம்முயிரையளித்தவனக்
காற்றக்கைம்மாறிலம்பகைமுன்னழியாவிசயம்பெறுதியெனச்
சாற்றுமுனிவர்மனந்தொடரத்தணந்தான்சவியசாசியே. 45

ஒலிவண்டுழன்றுகுவிந்திடலற்றெளிர்பங்கயமொத்திலகுவிழிப்
புலவர்நிதமும்படியமிகுபுகழ்போம்புனிதம்பொருந்துபல
வொலியல்குடைந்துகுடைந்தாங்காங்குயருமூர்த்தியடிபரவித்
திலகனுலகிற்கெனுங்குந்திசிறுவன்மறையோருடன்சென்றே. 46

பஞ்சதீர்த்தச்சருக்க முற்றும்.

(ஆக சருக்கம் 20-க்கு கவிகள், 961.)

## (21-ஆவது கோகன்னச் சருக்கம்.)

இச்சருக்கத்தால், கோகன்ன க்ஷேத்திரவரலாறு கூறுதலும் அருச்சுனன் அத்தலமடைந்து மாபலேசுவரரைச் சேவித்தலுங் கூறப்படுகின்றன.

[இராவணன் கைலைச்சாரலிற் றவம்புரிதல்.]

கலியார்கடலகழ்சூணகர்கம்பத்துடையோனம்
புலியார்புனல்பொலிசெஞ்சடைபுனிதன்மலையொருசார்
நலியாவுடன்மெலியத்தவநாள்பற்பலசெயவே
விலியாகமீதழல்வீசியவிழியோனெதிராணுகா. 1

[சிவன் பிரசன்னமாதல்.]

வருமொப்பறுபரனைக்கிரிமகளுக்கொருவரனைப்
புரமட்டிடுமரனைப்பணிபூணிற்பொலியுரனை
திரையுற்றொளிர்சிரனைத்துடிதிகழும்மொருகரனை
நரியைப்பரிசெயுநேரனைநமவென்றடிதொழுவான். 2

[2-கவிகள், சிவனைத்தசமுகன் றுதித்தல்.]

காலன்படவுதைபாதகபாலந்துடிகனல்மான்
சூலந்திகழ்கரநின்மலசூன்முற்றியமுகின்மெய்
மாலும்பிரமனுநாடுமகேசாவுயர்மறைகள்
நாலும்புகழ்சிவசங்கரநமவோநமநமவே. 3

கங்காதரவிமயந்தருகளிமாமயில்கவினும்
பங்காதனிமுதலேமுடிபணிவெண்பிறைபடருந்
துங்காபுலியதளாடையசுடர்மேனியசுரர்க
ணங்காவெனவிடநுங்கரநமவோநமநமவே. 4

[சிவனையிலங்கைவந்திருக்கக் கோருதல்.]

நேசம்மிகவிலுந்துதிநிருதர்க்கொருபதியை
யீசன்மனநிகழ்வோதெனவெந்தாய்திரிபுரமுன்
னாசம்பெறநகைசெய்தவநாயேனுறைநகரம்
வாசஞ்செயவரநீயெனமகிழ்வோடிறைநொடியும். 5

[சிவன் வரமுடியாதென் றோரிலிங்கமளித்தல்.]

வென்றாயிகல்விண்மண்பிலம்வீணைக்கொடியேற
நின்றாய்நிலையாநின்பதியுறநேர்கிலம்நின்றோட்
பொன்றாவிதுநடுவண்ணுறுபோழ்துன்னகர்கிளைக
ளென்றேயொரிலிங்கந்தனையிசைவோடுமளித்தே. 6

[இலிங்கத்தை பூமியின்வையாதிலங்கைசேரென் றனுப்புதல்.]

பாரின்கண்விடுக்கிற்பினர்பலசெய்யினுமிதுகை
சேருந்தரமன்றேகுதிசேராதிவளூர்தி
காரிற்கருவடிவோயெனவிடைதந்துகபாலி
தாரக்கிரிபுகவிண்மிசைதானேகினனிருதன். 7

[தேவர்கடங்குறையை விநாயகருக்கறிவித்தல்.]

விடைகொண்டவனேகத்தனிவிபுதத்திரள்கூடி
யொடிகொண்டவோரெயிறத்திமுனேடித்துதிபாடி
நடைகொண்டவிலிங்கம்மவனகரிற்கடிநண்ணிக்
குடிகொண்டிடினுய்வென்றுகொல்கூறெங்குழுவிற்கே. 8

தவமுற்றவனதுபெற்றனனன்றித்தனவலியாற்
சிவனிற்பெறுகிலனேயெனத்தேவர்க்கிறைசெப்ப
வுவமிப்பதெனுலகுக்கிடையூறைச்செயும்வஞ்சப்
பவனுக்கிடையூறைச்செயிற்பவமோவிதுபழியோ. 9

[தசமுகன் வயிற்றினீர்நிறையச்செய்தல்.]

என்றேகுறைகூறச்சுரரோம்பனிசைந்து
நின்றேபுனலிறைவன்றனைநீசெல்பவனுதரங்
குன்றுவகைநிறைநீரெனநொடியிற்குறைவறவே
யன்றேநிறைவித்தானனிலவனுக்கிவையரிதோ. 10

[தசமுகன் றுயருறல்.]

மாகஞ்செலுநிருதர்க்கிறைவயிறுப்பிவருந்தி
வேகஞ்செலவிண்விட்டுமண்மேவித்தனதொருகைப்
பாகஞ்சிவனுறநீர்விடல்பழுதென்றுளமழியாச்
சோகம்பெறநின்றானுறுதுயர்சொற்றிடலரிதே. 11

[விநாயகன் தசமுகன்முன் வருதல்.]

வேறு

அன்னராவணன்றுயரொடுஞ்சுரர்துயரகற்ற
முன்னியுற்றனன்மும்மதநாலுவாயைங்கை
மன்னுசிந்துரமாமுகனொருமறையவன்போற்
றன்னுவெவ்வினைநிசிசரனுவந்திவைசொல்வான். 12

[வேதியநுடங்கொண்டுவந்த விநாயகனைத் தசமுகன் வணங்கி இலிங்கத்தைச் சற்று கையேற்றுக்கொள்ளெனல்.]

விதிக்குமாமறைப்பொருணிலைவிளக்குவேதியமெய்
வதைக்குநீர்கழித்தியான்வருமெல்லையும்வானோர்
துதிக்குமிப்பெருஞ்சோதியைப்பரியெனச்சொல்லி
மதிக்குமாருயிரிரப்பவர்போற்றுதிவகுத்தான். 13

[வேதியன் மறுத்தல்.]

பூக்குழற்பரைபாகனுமிதனையான்பொறுக்கு
மூக்கமுற்றிலேனெல்லைசெல்கருமமொன்றுடையே
னீக்கறும்வலிநிருபவென்றிறைசொலநிருதன்
றீக்கொழுந்தரூக்கண்வெளுத்துயிர்த்திவைசெப்பும். 14

[இது முதல் 3-கவிகள், தசமுகனீதிகூறல்.]

மட்பொதிந்தவிப்புடவியைமாமணிமுடியாற்
கட்செவிக்கிறைபரிப்பதுங்கதிரொடுமதியும்
விட்புகுந்தபொன்முடிமகமேருவைவிடாமற்
கொட்பினுடொறுந்திரிவதுந்தற்சுகங்குறித்தோ. 15

முன்பளித்ததுமொருமுனிதன்முதுகென்பைப்
பின்பளித்ததுமொருமுனிதன்றவப்பேற்றை
யன்பொடும்பிறர்நலந்தனக்கேயெனினையா
யென்கவற்சிகண்டாற்றலற்றேசனிற்கியல்போ. 16

நிறையுநீர்கழித்தொல்லையில்வருவலிந்நிமலன்
றறைபுகாவகைதாங்குதிசரணினக்கிதனுங்
கறமிலோர்தியென்றறத்தொடுமுராணுறுமரக்கன்
முறையிடக்கரிமுகனுவந்தித்தகைமொழிவான். 17

[வேதியன் நியதிகூறி இலிங்கத்தை யேற்றல்.]

முந்துமுன்பெயரெடுத்தியான்விளிப்பன்முக்காலும்
வந்திடாயெனிற்காட்டுவன்வசுந்தரையெனலுஞ்
சிந்தையாய்கிலன்படுந்துயர்தீவினைதூண்டத்
தந்துநீர்பெய்வான்றணந்தனனூழ்வலிதன்னால். 18

இடமறிந்திருந்தேயவன்மெய்வருத்திழிநீர்
விடுவமுன்னரின்வேதியனொருமுறைவிளித்தா
னடையநீக்குமுனழைத்தனனுங்கவன்சவுசம்
படருமுன்னரிற்கூவினனவன்செவிப்படவே. 19

[இலிங்க ஸ்தாபனஞ் செய்தல்.]

விளித்துமும்முறைவந்திலனுமெனவியனீர்
தெளித்துப்பூமிசைநிறுத்தினன்றேவர்கடேவைக்
களித்துப்பூமழைசுரர்பெயக்கரிமுகத்துருவ
மொளித்துநின்றவனெல்லையினிருதனுமுற்றான். 20

[கவாவாரமையால் தசமுகன் மாபலமெனல்.]

வந்துசீற்றமுழுவகைபுந்தியக்கமுமருவுஞ்
சிந்தையோடதையெடுத்தனன்றிண்டிறற்றன்கை
வந்திலாமையால்வியந்தவன்மாபலமென்ன
வந்தநற்பெயர்புனைந்தவீறுயருமவ்விலிங்கம். 21

[இலிங்கம் ஆவின்செவிபோற் குழைதல்.]

பின்னுமற்றதைக்கவர்தரும்பெட்பொடுநீங்கா
மன்னுதன்முழுவலிகொடுவலிப்பவும்வாராவாய்
முன்னருற்றமெய்குழைந்துமண்முகம்விடாதசையா
தன்னலிங்கமங்கமர்ந்தவோராச்செவிநிகர்ப்ப. 22

[தசமுகன் வேதியன்சிரத்திற் தட்டல்.]

சிங்கிநின்றொளிர்களத்திறைசெப்புசொற்கருகிக்
கங்குனின்றமெய்யோனதைக்கவர்தனீத்தெழுந்தே
யங்கையுட்புதைந்திடவுகிரகல்விரன்முடக்கிப்
பொங்கிவேதியன்சிரம்புடைபுடைத்திடப்புடைத்தான். 23

[தசமுகனை ஆகாயத்தெறிதல்.]

ஆயகாலையிற்சினந்துமண்ணந்தரநடுங்கத்
தூயதன்னுருவெடுத்துயர்துதிக்கையாற்றுவக்கித்
தீயவன்றனையெறிந்தெறிந்தேந்தினன்றீராக்
காயமீதினிற்கந்துகமாடுதற்கடுப்ப. 24

[இராவணனுதலித்தல்]

ஐந்துநற்சிரன்சுதனெறிந்திடவரக்கனதீ
ரைந்துநற்சிரஞ்சுழன்றுமெய்பதைத்தடல்பெறுநா
லைந்துநற்கரமாவின்வீழெனவலைந்தபய
மைந்துநற்கரத்தண்ணலேயென்றவனலற. 25

[இது முதல் 4-கவிகள், விநாயகனைத் துதித்தல்.]

மூரலெய்திமுக்கண்ணிறைபுலத்தியமுனிவன்
பேரனுக்குமண்காட்டவப்பிறைசெறிந்தன்ன
கோரதந்தனுவாமுகன்மலர்ப்பதங்குறுகிச்
சாகுமென்பிழைபொறுத்தியென்றேத்தினன்றாழ்வான். 26

ஞாலமுண்டுசெய்தளித்தழிநாயகத்தெய்வந்
தாலமுண்டவன்றாமரைமலர்மிசைத்தவழ்வோ
னாலமுண்டவனென்றுலகிசைக்கினுமவர்க்கோர்
மூலமுண்டெனும்படியொளிர்முதல்வனேசரணம். 27

தும்பிமாமுகத்தகுவனைக்கிரியொடுந்தொலைத்த
வெம்புவேற்குகன்முன்வருவித்தகவிழைந்துன்
செம்பதந்தொழுமடியவர்க்குறுகண்டீர்த்திதய
கம்பமுற்றொளிர்கரிமுகக்கடவுளேசரணம். 28

ஓடெடுத்தொருகாரணத்துலகெலாமேத்த
ஆடெடுத்துநின்றம்பலத்தம்பிகைதனையோர்
மாடெடுத்தவன்சுதகயமுகற்றெறவலத்தோர்
கோடெடுத்தவசரணெனக்குஞ்சரமுகத்தோன். 29

[விநாயகர் சொற்படி தசமுகன் குட்டிக்கொள்ளல்.]

நன்றெனக்கம்புடைத்தென்னநின்னால்விரன்முடக்கி
யின்றன்கம்புடைத்திடுகவென்றிசைப்பதன்முன்னர்
குன்றங்கம்புடைபிதிர்ந்திடக்குட்டினன்பலவா
யொன்றங்கம்புடைபுடைப்பக்கையோய்விலாமுறையே. 30

[விநாயகனுவந்து தன்னிருப்பிடஞ்செல்லல்.]

கண்டுவந்துநின்போலினியெனைத்துதிகருதிக்
கொண்டுதஞ்சிரங்குட்டிடுவோர்க்கருள்கொடுப்பே
மிண்டையோன்வழியரக்கநீயேகெனவியம்பி
யண்டர்பூமழைபொழியவைங்கரனுமேகினனால். 31

பாவகாரியர்தமக்குநற்பொருள்பலித்திடினு
மாவபோலிருந்தகலுமென்பதையுலகறிய
யாவரும்வெலற்கருந்திறந்தரத்தகுமிலிங்கத்
தேவனைக்கிடைத்தரைக்கணத்திழந்தவத்தீயோன். 32

[அருச்சுனன் கோகன்னப்பதிக்கு வருதல்.]

தந்திமாமுகன்றனைச்சுரர்தம்மையூழ்தனையே
நொந்துதன்பதிநுழைந்தனனுவலுமாச்செவிபோ
னந்தலற்றொளிரிலிங்கத்தாற்கோகன்னநாமம்
வந்தவப்புனிதப்பதிவாசவியெதிர்ந்தான். 33

[ஈசுரசந்நிதிக்கு வருதல்.]

பதியைநோக்கியுண்மகிழ்ந்துமெய்பாவசங்கொடுதன்
விதியைநோக்கிநல்வந்தனைசெய்துபின்மீளாக்
கதியைநோக்கியவருந்தவக்கணமெலாம்படியும்
நதியைநோக்கிநீராடிச்சந்நிதியைநண்ணினனால். 34

[இது முதல் 7-கவிகள், ஈசுரசந்நிதிச் சிறப்பு.]

வேறு

பூவிரியம்புயம்புகுந்ததேவனுங்
காவிரிபொன்னகர்க்காவலாளனும்
நாவிரிப்பருதொகைநாகர்யாவரும்
பாவிரிமறையிசைப்பனுவல்பாடவே. 35

அரங்கடிவேல்விழியனுமுலோசையு
முரங்கவர்ந்தெழுமுலையுருப்பசிக்கொடி
கரந்திடுமிடைநிருத்தலைநற்கன்னிகை
நரம்பிசைநிகர்மொழியரம்பைநங்கையும். 36

கிஞ்சுகவிதழ்க்கிருதாசிகேழ்கிளர்
மஞ்செடுத்தெழிமுலைவளருமேனகை
கொஞ்சரிமொழிசிகத்தலைமென்கோதையும்
நஞ்சுமிழ்விழிவிசுவாசிநங்கையும். 37

வின்னுதற்பிரமுலோசந்திவேல்விழி
கன்னகுழலைத்திலோத்தமைகவின்சக
சன்னிசைபூருவசித்தித்தையலோ
டின்னமுமரம்பையரெய்தியாடவே. 38

துந்துமிமுழங்கிடச்சுரிமுகம்மெழ
நந்தலில்விளக்கொளிநாகமாதர்க
டந்திடத்தும்புருதவரெண்யாழ்முனி
வந்திசையெழுமையும்வழங்கிநிற்பவே. 39

ஓதுவாமுகன்குகனுலப்பிலாதவெம்
பூதரும்பிருங்கிகுண்டோதரன்புலிப்
பாதனற்பதஞ்சலிபின்னும்பற்பல
தீதகல்சிவகணத்தலைவர்சேரவே. 40

மோனியர்முனிவரர்முழுதுணர்ந்தமெய்ஞ்
ஞானியர்சித்தர்வைதிகர்நான்மறை
நூனெறிபடிந்திசைநுவன்றுபோற்றவோ
ரானெதிருறப்பொலியமலமூர்த்தியை. 41

[அருச்சுனன் மாபலேசுவரரைக் காணுதல்.]

கண்டனன்களிப்பெனுங்கடலினாழ்ந்தனன்
விண்டனனொருமொழிவேள்வியாளரோ
டுண்டுகொலிப்பதிக்குவமைவேறெனுத்
தண்டளமலர்புனைதார்மகிபனே. 42

[இது முதல் 6-கவிகள், தோத்திரம் செய்தல்.]

அருந்தவந்தனிற்பெறுமரக்கன்பாற்பெறுங்
கரும்புழைக்கரன்புவிகாட்டவன்றுதொட்
டரும்பெலவிலிங்கமாயமர்ந்தமூர்த்தியை
விரும்பிநேர்தொழுதனனிவைவிரித்தரோ. 43

ஆடகக்கண்ணன்சேயந்தகன்றனை
யேடுடைக்கழுமுளாற்குத்தியேந்திமெய்
வாடுபுகதிரின்முன்வாட்டிவானவர்
நீடியதுயர்தெறுநின்மலாநம. 44

தக்கனவெடுத்திசைததீசிசொற்கொளா
தக்கணத்துணையிகழ்ந்தமரார்சூழச்செய்
மிக்கமாமகஞ்சிறுவிதியை வீட்டுமா
றுக்கிரன்றனைவிடுமொப்பிலோய்நம. 45

முன்னொருசிசுவழுமுப்பதோடிரண்
டென்னுமிலக்கவோசனையிருந்தபா
லன்னவமலர்தருந்தருளியைங்கணை
யொன்னலன்றனையெரிக்கூட்டுவோய்நம. 46

விடயவைம்புலக்கள்வர்வீயமூவரிற்
றடைபடவிருவரோர்சத்துவன்றனை
மிடையமெய்புணர்வொடுவிபுநின்றன்னிலை
யடையவெற்கருள்புரியாதியேநம. 47

ஐம்முகம்நமநமவலவனீயணி
பைம்முகம்நமநமபரசுபூத்தவெண்
கைம்முகம்நமநமகடுக்கைவேணியிற்
செம்முகம்நமநமசிற்சொரூபமே. 48

[விசய னீசுரசந்நிதி நீங்கல்.]

இன்னன துதியெடுத்திசைத்துப்போற்றியே
பின்னரான்பிரிகன்றிற்பேதுற்றீசுர
சந்நிதிதணந்துமாதவத்தர்தாள்பணி
தன்னவருவந்திசையாசிபெற்றனன். 49

கோகன்னச்சருக்க முற்றும்.

(ஆக சருக்கம் 21-க்கு கவிகள், 1010.)

---

## (22-ஆவது இரைவதகிரிச்சருக்கம்.)

---

இச்சருக்கத்தால், மலைவருணனை கூறுதலும், அம்மலையையடுத்த விசயன் கண்ணனை நினைத்தலும், கண்ணன் அவனிடம் வருதலும், இருவரும் விசேஷசம்பாடணைபேசுதலும் பிறவும் கூறப்படுகின்றன.

[அருச்சுனன் இரைவதகிரிசேர்தல்.]

தன்னெடுமடைந்ததூயதழல்புரிவினைஞர்நம்மை
யன்னெடும்பதிநீத்தேகியச்சுதற்கனுசையாகுங்
கன்னகுழலைசேர்வல்லிகடிமணஞ்செய்வானெண்ணி
யன்னவத்துவரைமூதூர்க்கயலொருகுன்றஞ்சார்ந்தான். 1

[இதுமுதல் - 20 கவிகள், மலைவருணனை.]

மண்டுநீர்மங்குறன்னைமதஞ்சொரிமாவென்றெண்ணிக்
கண்டிரவஞ்செயிர்ப்பக்கரிணிதன்றுணையென்றுள்ளங்
கொண்டுநைந்தொருகைநீட்டிக்கோதறவிளிப்பமஞ்ஞை
கண்டுதன்றாவிவீசிநடித்திடுங்கவின்செய்குன்றம். 2

கூன்பிறைக்குணிலிரட்டிக்கொண்டல்வெம்பறைமுழக்கி
வான்செல்வேய்மிசைக்கழாயர்மகளிர்போன்மயினடிப்பத்
தான்மகிழ்ந்தொளிர்பொன்காசைத்தருந்தலைவன்போல்வேங்கை
தேன்கமழ்மலர்கள்சிந்தித்திகழ்சிமயச்சிலம்பு. 3

விண்படருடுச்சூழ்செக்கர்மீதொளிர்விதுக்கொழுந்தை
வெண்புகர்படர்மெய்தீக்கண்வேங்கைவாளெயிறென்றெண்ணிக்
கண்படர்வருடையஞ்சக்கானவர்கவர்ந்துமாத
ரொண்குளஞ்சிவணச்செய்வானுட்கறைதுடைத்துநிற்பார். 4

நறைமலர்கெழுதண்கோட்டினுலிருவினையுடுச்சூழ்
நிறைமதியென்னக்கவ்வநெருங்கிவந்தேபின்வான்றோய்
கறையுமிழ்கூர்ம்பற்பிண்ணாக்கட்செவிகலங்கிப்பாறுஞ்
சிறைவளர்சிகண்டிமாடுவதிதறன்னயனந்தேர்ந்தே. 5

வானநீர்பாயவோங்கைவனஞ்சிறைகாப்பான்கொட்டுங்
கானவர்முருகியத்தையவரிலாவேலைக்கொள்
கூனல்வாற்குரக்கொன்றுடிக்கொட்டமற்றதனைக்கொம்பின்
மேனிலாவினங்கணோக்கிமிகநடித்துவக்குமாதோ. 6

வாழ்மலர்விடுத்துமானம்வருபொன்போற்பரண்மீதோங்கித்
தாழ்குழன்மகளிர்வார்கொறனந்தும்புறத்தங்கொல்லை
வீழ்கிளிப்புட்டுரத்தவீசுபொற்கவண்கலோதை
யூழ்முறையிபமேற்சீறுமொருவிலங்கொலியடக்கும். 7

மட்கலற்றிமைத்துவான்செல்மரகதமணிவிற்கற்றை
கட்புலன்கதுவத்தேனுகன்றுபுல்லெனக்கறிக்கும்'
விட்புலத்தருவின்பைங்கேழ்வியன்றழைமுறித்துவேழம்
பெட்பொடொண்குளகென்றுன்னிப்பிடிக்குவந்தருத்துமாதோ. 8

சிலப்பிறைபொன்னாட்டிற்றன்செழுங்கொடிநாட்டலேய்ப்ப
வுலப்பில்பாப்புரித்தமென்றோலோங்குவேய்முனைபோயாடக்
குலக்கொடிச்சியரிடிக்குங்குங்குமங்கோட்டமேலங்
கலப்புறுவிரைபோம்வானக்கற்பகங்கமழுமாதோ. 9

ஒலிகெழுமங்குன்மீதினொளிர்கொடிச்சபலைதன்னை
நலியிடைக்கொடிச்சிமாதர்நாளிருந்தளித்தமக்கட்
பொலிவுறுமரைமுன்ஞாணாப்புனைகுதுமென்றுகையால்
வலிகுவர்பிடிபடாமன்மறைந்தும்பின்மடமைதன்னால். 10

இந்தியக்குப்பைநீயன்றிறையெனுங்குரவன்சொல்லாற்
பந்தமதொழித்துத்தன்னைப்பரமெனவுணர்ந்துய்வான்போல்
வந்தினத்தொன்றுகூறவயப்புலிக்குருளைதேர்ந்து
சந்ததந்தழுவிநின்றசரபத்தினினத்தைநீங்கும். 11

செஞ்சுடர்ப்பதங்கள்மேல்பாற்சிந்துசேர்கங்குற்போதுந்
துஞ்சலற்றிமைப்புமற்றசுரர்துணங்கறலுக்கஞ்சி
நெஞ்சழிந்துழலாவண்ணநின்றவிர்சவிதாமான
விஞ்சொளிபரப்புஞ்சோதிவிருக்கம்விண்ணோங்கிநிற்கும். 12

பாரினைப்பிளந்தனந்தன்படத்தினைக்குடைந்துகீழ்போம்
வேரவோராவின்வீழ்போற்கீழ்மேல்வீழ்வெம்பாந்தட்
பேருயிர்ப்புட்கொள்வான்பெட்புடனங்காக்கும்பேழ்வாய்க்குட்
சாருமால்விலங்கின்சாலந்தனிக்குகையிதுவென்றெண்ணி. 13

வேறு.

வேலைப்பழித்துக்குழைகிழித்துவிடத்திற்கருகிவிளர்த்தமிழ்திற்
சாலத்திகழ்ந்தஞ்சனங்குமிழ்முன்றாழ்ந்துபிறழ்ந்தையரிசிதறும்
நீலத்தடங்கண்கொடிச்சியர்விண்ணிலைவைத்தாமங்கெறிந்தாடுங்
கோலமலர்ப்பந்தெனவேவைக்கொண்டுநாணங்கொண்டெறிவார். 14

புலிகீண்டிலகுவேரிடைமுட்புறஞ்சேர்கனியின்சுளையள்ளிக்
கவியார்வத்தொடளிப்பவதன்காதற்கருப்பக்கவிறுகரும்
அவிர்கான்றெழுமுட்டணக்கதிரோனமுதம்பொழியுமதியெனவெஞ்
சவிதீர்ந்திமைக்குந்தண்டுகினந்தவழுஞ்சிகரந்தனைச்சார்ந்து. 15

கீற்றுப்பிறைவெண்டுணைக்கோட்டிற்கேழல்கிழித்தசுவட்டினிடைக்
தாற்றுச்சூதமுதற்கனித்தேன்றவழ்ந்துபரவித்தனித்தோடி
யாற்றிற்பெருகிக்கழிமுகங்கொண்டடையப்பெருகுந்துறைதோறும்
நாற்றிக்குளநற்சரப்பொருள்கணண்ணிக்குடைந்துண்டகமகிழும். 16

சந்துபூழில்மாக்கடம்பஞ்சாலஞ்சாகம்பலசாடித்
தந்திமருப்பாடகமுதலைந்தினமுமணியுந்தாம்வரன்றி
யுந்தியலைகளெடுத்தெறிந்தாங்கோடுமருவியாற்றின்வழி
வந்துவேற்றுநிலத்தவரும்வாய்த்தபொருள்கொண்டுவப்புறுவார். 17

குலிசப்பொன்செப்பிகலுநகிற்கொடிச்சிமார்வேங்கையிற்கோங்கி
லுலவத்தொடுத்தபொன்னூசலுகந்துகனிந்தகுறிஞ்சியிசை
குலவப்பாடக்கேட்டசுணங்குளிர்ந்துள்ளுருகுங்கூன்கையால்
மலியுமுழைத்தேன்கவர்ந்துமிகமதமாமகிழ்ந்துபிடிக்கருத்தும். 18

பிரமனுலகத்துறையன்னம்பெடையோடமரக்குடம்பைதெற்றிச்
சிரமந்தணியநிழற்புகுந்துதினமுந்திரிசெங்கதிர்மதியம்
பரவுமலரிற்பம்மிலங்கப்பணைத்துப்படர்ந்துதிசைதடவி
விரியுமண்டமுகடோங்கிவிளங்கும்யாலவிருக்கங்கள். 19

வந்துவனப்பைமாநிலத்தில்வழங்கும்புயல்சென்றடாவிருண்
முந்துவேயின்புதர்நாப்பண்முளைத்துக்கிளர்செஞ்சோதிவல்லி
கந்தவாகனடர்தொறுமக்கழைப்பாசடைகள்விலகவெளி
வந்துவந்துமறைவமுகில்வயங்கிவயங்கிமறைமின்போல். 20

இருகான்முடங்குபாகன்விடுமெழுகொய்யுளைபூட்டிரதமிசை
வருவானமுதம்வழிந்தொழுகிவருமாறெனச்சந்திரிகைவிடு
முருவானெதிரும்பொழுதெல்லாமுயரும்வடகோடெனச்சுழன்றே
திரிவானடைந்துநீணிறத்தைத்தேராநாணித்திருகுவரால். 21

வேறு.

இத்தகைவனப்பின்மிக்கவிரைவதசயிலந்தன்னை
யத்திரிசிறகிர்வன்மையசனியோன்சுதன்சேர்ந்தாங்கோர்
பத்திரச்சினைகளோங்கும்பழுமரப்பக்கம்புக்கான்
மித்திரன்செம்பொற்றிண்டேர்மேற்கடன்மறைந்ததன்றே. 22

[இதுமுதல் 6-கவிகள், மாலைக்கால வருணனை.]

வெல்லுபுகுடவெற்பென்னுங்காலநேமியின்மேற்கீழ்பாற்
கல்லெனும்நெடியோனேவக்கதிரவனென்னுநேமி
வொல்லையினோடித்தாக்கியுக்கவோரெயிறிற்றோன்ற
வில்லுமிழ்பிறைமெய்சோரிவிரிந்ததொத்திலகுஞ்செக்கர். 23

கஞ்சமென்மலர்கடுஞ்சக்கயிரவம்விழிப்பப்பேடோ
டஞ்சந்தம்முறையுளடவடைந்தபுன்மாலைச்செவ்வி
விஞ்சிளம்பிறைசெவ்வான்மீமிளிர்குவசிவன்விரிந்த
செஞ்சடைமீதிற்சோமன்றிகழுவசிவனுமாதோ. 24

செல்லினம்படர்ந்துநீறுதிகழுமெய்காட்டுமத்தக்
கல்லெனுஞ்சிவன்மீதிற்புட்கரமெனுங்காமனெய்தி
யெல்லெனும்பூவம்பெய்தேயெரிவிழியதனாற்றன்கை
வில்லொடுமெரிவதொப்பச்செக்கரிற்பிறைவிளங்கும். 25

காமுகரெனுமீன்றன்கைக்கவர்தாவிடுத்ததூண்டி
லாமெனவிருட்களிற்றையடக்குமங்குசமாமென்னக்
கோமதன்முரசமெற்றுங்குணிலெனவுலகங்கூற
யாமினியெதிரக்கூன்மெய்யிளம்பிறையிலங்கிற்றன்றே. 26

இறைவனேரம்பனேவவிணையில்வெள்ளெயிற்றோன்றேகிக்
கறைகெழுவுடலிற்றூக்கிக்கயமுகன்மேனின்றொப்பப்
பிறைகுடவரைமேற்செக்கர்பிறங்கநின்றேபின்முந்நீர்
மறையுமக்கோடுதெண்ணீர்வாரியூடுபுசென்றென்ன. 27

சொல்லரும்பிரமத்தொன்றுய்த்தோய்ந்தும்வேறுகித்தோன்றி
வல்லவரையுமயக்குமாயைபோல்மாலைநேர்ந்து
தொல்லைவெவ்வினையான்ஞானத்தோற்றமற்றுழ்ந்தபந்தப்
புல்லியர்நெஞ்சம்போலவிருட்பொதிபுகுந்தவெங்கும். 28

[இதுமுதல் 3-கவிகள், மழையின் காட்சி.]

கங்குல்வந்தெதிரத்தூயககனமெண்டிசையுமூடிப்
பொங்கிவானிடித்துமின்னிப்பொழிந்தனபுயல்போற்கூந்தன்
மங்கையைவேட்டான்வந்தமணமகன்றன்னையாட்டக்
கங்கைநீர்மொண்டுவீசற்கடுப்பவாகாயக்கன்னி. 29

சீரியபொருள்விரிக்கும்புலவர்தஞ்செந்நாமானக்
காரணங்கருதாதீயும்வள்ளறன்கரத்தையேய்ப்பப்
பாரிருநாலுதிக்குமணித்துளிபறந்துவீழ்த்தி
மாரிபெய்திடமன்னுலமரப்பெரும்புழைபுக்கானுல். 30

படாமுலைப்பாவைமையற்கொப்புளம்படர்ந்தமெய்யில்
விடாமழைத்தூறற்செந்தீவெங்கொழுந்தென்னப்பற்றக்
கடாமலைக்களிற்றுமன்னன்கடுந்துயரடைந்தானேனும்
விடாமுயற்சியரிற்சிந்தைமெல்லிமைவிடாதானுகி. 31

[அருச்சுனன் கண்ணனைத் தியானித்தல்.]

வெண்ணிறத்தலமன்சிந்தைவேறெனச்சிறிதுதேர்வே
மெண்ணுநங்கருமமுற்றச்செய்வதெவ்விதத்தென்றெண்ணி
யண்ணலெவ்வமையத்தேனுமடியவர்க்குறுகண்டீர்ப்பா
னண்ணுமக்கண்ணனென்றேயவனைத்தன்னிதயநட்டான். 32

சித்திரமணிவிதானந்திகழ்பைம்பொற்பாண்டிற்சேர்ந்து
சத்திராசித்தன்பாவைதன்னெடுமகிழுமாயன்
தத்தரிவிழிமின்மாலாற்றன்னை வாசவன்சேய்நெஞ்சம்
வைத்துமெய்மாழ்கலோர்ந்துமணிக்குறுமுறுவல்பூத்தான். 33

இக்கயின்றூரங்கக்குமிருணிறச்செங்கண்மேதி
தொக்கபல்வளஞ்சேர்பண்ணைத்துவரைநாடுடையோன்றன்பாற்
புக்கமூரலினேரையம்பொள்ளெனக்கொண்டுவாடி
நக்கெனையிகழ்வாயென்னுப்புலவியுற்றனள்பூநங்கை. 34

எனக்குருக்குமணிமேற்றேயெழிலினுக்கவட்குடைந்த
நினக்கருத்தியனென்றெண்ணிநீவறிதகமுவப்பா
யெனச்சிரித்திகழ்வானென்றேயூடுமேந்திழையென்றன்னுண்
மனக்குறிப்பெளிதிற்றேரும்வள்ளன்மற்றவட்கிதோதும். 35

ஒளிநிறைமதியங்கவ்வுமுரகனிப்பிறையைக்கவ்வ
வெளிதெனவருமென்றப்பாம்பேங்கிநிற்குபுவில்வாங்கி
வளிதொடுத்தெனவயங்குமயிர்நுதற்புருவக்கண்ணாய்
இளிவரற்குண்டோநின்பாலிரங்கலென்றணைத்துத்தேற்றி. 36

மைத்துனனெனக்கிந்த்ராணிவனமுலைவருடுந்தோளான்
புத்திரன்முரசமேற்றபுண்ணியன்றனக்குப்பின்னோன்
இத்தினமிரைவதக்குன்றெதிர்ந்துநின்றெங்கைமாலான்
மத்தலைதயிரிற்சாலமனமிலைந்தெனைநினைந்தான். 37

ஆதலினகைப்புற்றேனென்றவன்வரவாதியீறுத்
தீதறப்புகலவையந்தீர்ந்துநக்கவன்பாலிக்கொன்
போதுயர்தெறநீயென்றுபூமகள்புகலவந்தா
னாதியென்றழைத்தமாமுன்னடைந்தவனரிசேய்முன்னர். 38

[கண்ணன் அருச்சுனன்முன் வருதல்.]

ஐம்புலனவித்தயோகாரன்விரிஞ்சனுக்குமெட்டா
வம்பவிழ்துளவநான்றமார்பினன்வருதனோக்கி
யம்புறழ்தடங்கணங்கைபடைந்தபோலார்வமுற்றிக்
கம்பதம்படியத்தாழ்ந்தான்கண்ணனுந்தழுவிச்சொல்வான். 39

முக்கவர்க்கதையோன்சொற்றமூவிருபருவமல்லான்
மிக்கயாத்திரையெனெம்மூர்மேவியெம்மில்வாய்மேவா
திக்கிரியுறைவதென்கொலிடர்க்கடற்படியுநெஞ்சம்
புக்கனைபோலுமுற்றபுகறியென்றுரைத்தேபின்னும். 40

குன்றிதிற்றனித்துவேட்டங்கொண்டியானிருப்பக்கங்கு
லொன்றிமாமழையுமேவவொதுங்கியிவ்வருகோர்சூழல்
நின்றுபின்னூர்செல்போக்கிற்பிதற்றுநின்குரல்கேட்டுற்றே
னென்றனனவனுற்கேட்பவெண்ணியாவையுந்தேர்நீரான். 41

புற்புதநிகர்க்கும்வாணாட்புன்குரம்பையின்வாழ்சீவர்க்
கற்பமுந்தெரியாச்சோதியடியவர்க்கெளியனாகுந்
தற்பரசிலையுட்டேரைதனக்குமூண்டந்துகாக்குஞ்
சிற்குணவிதனாற்பன்னாட்சென்றவென்றெடுத்திசைத்தான். 42

கங்கையிற்குடைந்துநாககன்னியைமணந்துதென்னன்
மங்கையைவேட்டுச்சேதுமருவிக்கோகனமுங்கண்டேன்
பொங்குவேடத்தானும்மில்போந்திலேன்யானிக்குன்றந்
தங்குதற்கொன்றுண்டென்னாநகைத்தனன்சாற்றான்வெள்கி. 43

பூநனை பொதுளிப்பூத்துப்பொங்குபைந்தேறற்றெய்வக்
காநிழல்வைகும்போகிகாதலன்வெள்கிநிற்ப
நீநவின்றவையுமின்னனோர்செயனிகழ்த்தாதெற்கு
நானனியடக்கிநக்கமருமநானறியொணாதோ. 44

மனத்தமைமருமங்கூறுயெனினுமாறுழல்வார்போலப்
பினத்தலென்விசயமற்றென்பெயரெடுத்திசைத்தாய்போலுங்
கனக்கலிப்பதனுற்செவ்வேகேட்டிலேன்கழறிற்றுண்டே
லெனக்கதும்பறைதியென்னுமெம்பரற்றொழுதுசொல்வான். 45

புரையிலிந்திரத்தூய்மப்பேர்ப்பூழியன்பொதிகைப்புத்தே
ளுரைதனின்மதமாவாகியோரிடங்கரின்மெய்மாழ்கி
முரசனிற்பிளிறியாதிமூலமேயெனமுக்கூட
வரையிடத்தோடைமுன்னர்வந்தநீயறியாதுண்டோ. 46

எனக்குயிர்த்துணையேநெஞ்சத்திலங்குமாமணியேயாதும்
உனக்கொளித்தாகுமாறேவுன்கைமேன்மயன்மிக்கேயிக்
கனச்கிரிவதிந்தேன்காமன்கணையடப்பிதற்றியுய்வா
னினைக்குறித்தழைத்ததுண்டென்றுரைத்தனனெகிழநாணம். 47

கேட்டவனகைத்துவேடங்கிடைத்தவன்வெளிவந்தேறி
நாட்டியம்புரிதற்கம்மாநாணமுற்றுவதுண்டோ
மோட்டிளவரியேறன்னாய்நினக்கிதுமுடியாவோவென்
றோட்டியவ்வுரையைநக்கேயுரைத்தனனரனுரைப்பான். 48

குன்றினையெடுத்துமாதர்கூறையையெடுத்துமாண்பே
நின்றவாவெனதோர்புன்கணீத்தலற்றெள்கற்பாற்றோ
மன்றெதிர்நடித்தோனேற்பைமாற்றுமாதவனேகாத்தி
யென்றிடப்புகல்புக்கோர்தம்மிடர்தெறுமிறைவன்சொல்வான்.

எந்தையும்யாயுமெங்கையோடெமர்பலருஞ்சூழத்
தந்தவண்ணனுமற்றுள்ளதரணிபருடன்யானே
முந்துமிக்கிரியினேர்ந்துன்முசிப்பறவெம்மில்சேர்ப்பான்
றந்திரமிழைப்பேனீயுந்தக்கவாநடித்தியென்றான். 50

[கண்ணன் விசயனை நீங்கல்.]

அன்னசொல்லமுதமாந்தியகங்குளிர்ந்தமலற்போற்றி
நின்னதோர்சூழ்ச்சிக்கேற்றநேரயானடிப்பேனென்றான்
முன்னொருவெங்கட்சோகின்முலைசுவைத்துயிர்கவர்ந்தோன்
றன்னமைத்துனற்றணந்துதரணிமின்கோயிற்புக்கான். 51

கரும்பொழுதகலக்கீழ்பாற்கதிரவனுதயஞ்செய்யச்
சுரும்பெழுந்திசைகள்பாடச்சுருக்கவிழ்ந்தலர்ந்தகஞ்சம்
பெரும்பழுமரநீழற்கண்பிறங்குபுற்றேற்பீடத்து
வரும்புனல்வேணிபோலமன்னவனிருந்தானிப்பால். 52

இரைவதகிரிச்சருக்க முற்றும்.

(ஆக சருக்கம் 22 - க்கு கவிகள், 1062).

---

## (23 - ஆவது திருவிழாச் சருக்கம்.)

---

இச்சருக்கத்தால், துவாரகையை அலங்கரித்தல் கூறுதலும், கண்ணன் முதற் பலரும் இந்திரனது திருவிழா நடத்த இரைவதகிரி சேர்தலும், பற்பல விநோதக் காட்சிகளும் கூறப்படுகின்றன.

கூனலங்கைதமிசைச்சிறைபுலர்த்துங்குரண்டநீழற்குறிப்புணர்ந்து
மீனநெஞ்சுருகிநெடுங்குழீர்ச்சிறைசூழ்மேம்புகட்டுவரையம்பதிவா
ழூனமர்ந்தொளிகான்றினப்பருந்துழல்வேலுக்கிரசேனமன்னுரையின்
வானமன்விழவின்றறிகுதிரென்றேவள்ளுவர்முரசமெற்றினரால். 1

[இதுமுதல் 11-கவிகள், துவாரகையை யலங்கரித்தல்.]

இமிழ்முரசோதையிருசெவிபடா
வேந்தெழிலிளைஞராயிழையார்
அமிழ்தெதிர்தரக்கண்பரவிமையவரி
னூர்வமிக்கொருவர்முந்தொருவர்
கமழ்நறுந்தெரியற்புனைகுவரெழிலார்
கவின்மணிக்கழல்சிலம்பணிவா
ருமிழ்சுடர்மணிமாலிகைதரித்திடுவா
ரொளிசெய்பொற்காழகமுடுப்பார். 2

காலைஞாயிறுவந்தொளிர்கயிலையைப்போற்
கவின்மணிக்கலசம்வெண்மாட
மேலமைத்திடுவாரருவிபோலின்முன்
வெண்மணிக்கோவைநாற்றிடுவார்
மாலிமகரனென்றாழுடுவெனுநால்
வான்பதத்தோன்றினெனென்றுயரச்
சாலவிக்காரம்பைகமுகொடுநடுவார்
தட்டையுமகரிகைதயங்க. 3

சோதிசெய்நுதலாரூடலின்வெறுத்த
சுடர்மணிக்குப்பைகணீக்கி
யேதமில்சாந்தின்மெழுகிநற்கோல
மிட்டிமகீர்மறுகெறிவார்
கோதறுதுவசமுயர்த்தியம்பிறைநேர்
குணில்பொருமதிர்முரசெற்றி
யாதுலர்க்களிப்பாரறுசுவையடிசி
லாடைபொன்னுதியபிறவும். 4

பல்வகைமணிவிதானம்விண்சுரரும்
பரவுதம்மறுகெதிரெடுப்பார்
வில்கெழுவிதுபற்பலவிருந்தெனவெண்
பாலிகைமுன்றில்வாய்விரிப்பார்
நல்விருந்தெதிர்வார்நளினமாமலர்க்கை
நலிவுறக்குரவையாட்டயர்வார்
மல்குசெந்தேறற்றுளித்தெனக்கனிவாய்
மலர்ந்திசைபாடுவார்மகளிர். 5

காலினிற்சரத்தின்மனத்தினுமுந்துங்
கதிபெறக்கலினவாம்பரியை
நாலிருதிசையுமிடையறுக்கறங்கி
னடத்திநாட்டொட்டமுந்தெடுப்பார்
வாலதிச்செஞ்சூட்டிருசிறைத்துணைக்கை
வாரணம்போர்பொரப்பொருத்தி
யோலமிட்டிருகைபுடைத்துநக்கிகழ்வா
ரொன்றினொன்றோடுவகண்டே. 6

கற்புலில்வெளிவாயரசிளங்குமரர்
கந்துகந்தந்திதேர்திரட்டி
யற்புதமிதெனநடத்துவர்கயமீ
தமர்ந்தபோலரைக்கணத்திரத
வெற்பினிலடுப்பாரிவுளிமீதெதிர்வார்
விண்மிசைப்பாய்ந்துதோள்கொட்டி
மற்பொருதிமைப்பின்முன்னரப்பரிமேன்
வந்துவிற்கறங்கெனச்சுழல்வார். 7

தன்குலஞ்சிதைக்குங்கோடரிப்பிடியின்
றன்மைகொள்செவ்விழிக்குறும்பூழ்
பொன்புகர்சிறையமெய்சிலிர்த்துறுமிப்
போர்செயப்புரிந்துகைபடுப்பார்

மின்புரைவடிவக்கிம்புரிவிரவு
முறுக்குதிண்கோட்டுமேழகத்தைப்
பின்படர்ந்தருமுமஞ்சமுன்ருக்கிப்
பிரிவறப்பொரப்புரிந்துவப்பார். 8

வில்லுமிழரைக்கச்சணிந்துவெற்புறழு
வீரமொய்ம்பிருகவான்புடைத்துச்
செல்லினிற்றெழித்துத்தகரிருகோட்டிற்
றிகழ்கருமீசையைமுறுக்கி
மல்லர்வெம்புலிபோலெதிரெதிர்நிற்பார்
வன்கைதொட்டதக்கிமற்புரிவார்
வில்லொடுகதைவாள்வேன்முதலாடல்
வேந்திளங்காளையர்விளைப்பார். 9

நமனொருவடிவங்கொண்டெனத்திரண்ட
நஞ்சுமிழ்வாட்கணங்கையர்க
டமரொடுமிருந்துசிகழிகைசெய்வார்
தயங்கெழிற்சில்லணிபுனைவா
ருமிழ்சுடர்ப்பணிமெய்மிசைபலதிருத்தி
யொண்பளிங்காடிநேர்நோக்கி
யிமகரனெதங்கவொளிசெய்நன்னுதன்மீ
தெழில்கெழுதிலமெழுதுவரால். 10

போதுசென்றனவென்றெருருவர்முந்தொருவர்
பொள்ளெனவணிபலதிருத்திச்
சூதுறழ்சுணங்குபடர்முலேகயற்கட்
டுடிநுசுப்பமைநிகர்துணைத்தோட்
பாதியம்புலியொத்தவிர்நுதன்மானர்
படர்குவர்மயிலெனப்பரவி
வீதியின்மலேயினிடைவழியெங்கு
மெல்லரிச்சிலம்பொலிமிடைய. 11

கோதிறம்பதியாயெண்ணிலர்வருவார்
கிளைதழுஉக்கொடியினிற்பலர்தம்
ஞாதியருடனேர்குவர்விலையல்கு
னங்கையர்தனித்தனிநகர்வார்
யேதிலர்விரைவார்படையமைச்சுடனின்
னியமெழக்காவலரெதிர்வார்
பேதையர்மனமுநயனமுந்தொடரப்
பேரெழிற்குமரர்கள்பெயர்வார். 12

வேறு.

மதனனுக்கழகுவமையால்வழங்கியகுமரர்
சதளமாறிருசகத்திரந்தற்புடைசார
மதிவிளக்கொருவெண்குடைததேர்மிசைமகமோர்
சதமிழைத்தவனிவனெனக்சாத்தகிவந்தான். 13

முந்துமெய்வலியிடங்கரான்முழுவலியோய்ந்து
தந்திகாவொருதனிமுதலேயெனுந்தருணம்
வந்துகாத்தவனொருமணிவையமேல்வயங்கி
யைந்துநாவிரண்டாயிரர்சூழ்வரவடைந்தான். 14

உலகைக்கீழ்மேலாக்குதற்கிடப்பதற்கொருவாத்
தலையினேந்துதற்கிடைகலாநாஞ்சிலந்தலைவன்
அலகுநாவிரண்டெண்ணிரண்டாயிரராளுக
விலகுமோரியந்திரமிசையம்மலைக்கெழுந்தான். 15

நாசகாரியக்கஞ்சனைநல்குநல்லரசன்
பேசுமந்திரர்பல்படைசூழ்வரப்பெயர்ந்தான்
ஆசிலாவுலகியாவையுமன்றயின்றுமிழ்ந்த
வாசுதேவனைத்தருவசுதேவனும்வந்தான். 16

மற்றுமுள்ளயாதவரொடுபோசரும்வந்தார்
உற்றவாசிகள்மின்னெனக்கூவிரமுயர்பொன்
பொற்றையாமெனவந்தனபுழைக்கையும்வந்த
யொற்றைமாமலைநோக்கப்பற்பலமலையுறல்போல். 17

சுந்தரேசனம்பிகைமணந்துவன்றியசூழல்
வந்தவானவர்தொகுதியின்காட்சியைமான
வந்தமாநகர்மாந்தர்கடிருத்தகவண்டந்தா
ரிந்திரன்முதலிறைவர்போன்மன்னவரெதிர்ந்தார். 18

வேறு.

விந்தைவந்தமருமப்புயல்மேனி
யெந்தையந்தமலைவந்ததிசைத்தாம்
பந்தியைந்தமுலையார்பலர்சூழ
விந்துநைந்தநுதல்வந்ததிசைப்பாம். 19

சொன்னபோழகுவீறுசுமந்தே
மின்னலோருருவமேவியமானுங்
கன்னிநல்விழவுகாணவிழைந்தே
மன்னுமங்கையரிடத்தின்வழுத்த. 20

வேறு.

சொல்லாவணிசெய்தனர்தோழியரந்
நல்லாளெதிர்கந்தொருநற்சிவிகை
யல்லார்குழலேறுதியென்றனராற்
பொல்லாவிழியேறதுபோக்கியரோ. 21

வேறு.

[இதுமுதல் 8-கவிகள், சுபத்திராலங்காரம்.]

என்றுநள்ளிருளிடைப்படன்மானத்
துன்றுகூழைமிசையணிகடிலங்க
வொன்றுவெண்பிறையினேடிகல்செய்தே
வென்றசெய்தியைநுதற்றிலம்விள்ள. 22

அந்தகற்கரசளித்திடுமம்ப
கந்தனின்மைபொலியக்கடுமான
நந்துயிர்த்தமணிநாசிமுனேடி
வந்துநாணியெயிற்றின்முன்வயங்க. 23

மோதுவம்பிகலியொன்றின்முனென்று
வாதுகொண்டுயரவந்தெனவந்த
மாதிணைந்தமுலைமேலொளிர்மஞ்சின்
சோதியிந்தவுலகம்விலைசொல்ல. 24

கஞ்சமெல்லிதழுறுங்கதிரென்ன
விஞ்சுகைவிரலின்வீகம்விளங்க
வஞ்சிமெல்லிடையின்மீதுவணைந்த
கஞ்சிகண்டவர்மனங்கள்கலங்க. 25

எள்ளலின்முனிவரும்மெதிர்காணி
னுள்ளமிந்தவகையாமெனவோத
வள்ளைவென்றவடிவத்தொடுநின்ற
வள்ளின்மீதுகுழையாடியலங்க. 26

நன்னயத்தின்மிகுநாகரிகத்திற்
பொன்னினெய்துபலமணிகள்பொதிந்த
கன்னியொல்குமிடைகண்டகலிங்கந்
தன்னினிந்தவுலகத்திருள்தள்ள. 27

கஞ்சம்விட்டுவருமாதுகடுக்கும்
வஞ்சிசீறடிவனப்பெதிர்நில்லா
தஞ்சியுற்றதடமம்புயமென்றே
விஞ்சிமேல்வருசிலம்புவிளம்ப. 28

துய்யபட்டம்நுதன்மீது துவன்றிப்
பையநின்றுபளபளவெனமின்ன
வெய்யவற்குமிகவீசொளிசங்கங்
கையினின்றுகலகலெனவொலிக்க. 29

வேறு.

[இதுமுதல் - 6 - கவிகள், சுபத்திரை இரைவதகிரிக்கு வருதல்.]

சிந்தாகுலமற்றசுபத்திரைமான்
சந்தார்மணிமாலைதயங்கிடவே
வந்தேறினள்மாமணியானமிசை
யிந்திராணியோடிந்திரைகாணவரோ. 30

நங்கைக்கொருநற்சகுனந்தரல்போற்
சங்கத்தொனிமுன்புதழங்கமிகப்
பொங்கும்பலகோடணைபூவுலக
மெங்குஞ்செவிடெய்தவிசைத்தனவால். 31

அன்னங்கிளியம்மனைகந்துகம்யாழ்
இன்னுஞ்சிலர்கொண்டுறவேசறுவார்
மன்னுஞ்சிமிணோர்நகின்மாதர்சிலர்
மின்னும்பொன்விமானமெடுத்தனரால். 32

எடுத்தாரெனிலீதரிதோவவரோர்
கொடித்தானிருகுன்றமெடுக்குறுமேல்
விடுத்தார்வழிமேதகுதேவகிமின்
றடித்தாணயனத்தொடுதோளிடமே. 33

மெய்க்கும்பமிரண்டுமிகப்பொலிநீர்
கைக்கும்பமதொன்றுகவின்பெறுமிம்
முக்கும்பமெடுத்தொருமொய்குழல்மா
னக்கும்பலெதிர்ப்படவாயினளால். 34

மீனம்பலசூழவிமானமிசைத்
தானம்புவிவந்துதயங்குவபோல்
மானம்மலைவந்தனள்மாதரொடும்
வானும்புவியாவுமயங்கவரோ. 35

இன்னேபலரெய்தினரிந்திரைபோல்
முன்னேபலர்தத்தையின்மொய்த்தனராற்
பின்னேபலரெய்தினர்பீலிகள்போல்
மின்னேரிடைவேய்புயவேல்விழியார். 36

[இதுமுதல் - 42 - கவிகள், திருவிழாக்காட்சி கூறல்.]

விற்பட்டநுதற்றிருமெல்லியரும்
மற்பட்டொளிர்வாகுயர்மைந்தர்களுஞ்
சொற்பட்டிடுமக்கிரிதொக்கனராற்
பொற்பட்டினமன்றுபுறந்தரவே. 37

மின்னைப்பொருமெல்லியர்வெம்முலைகாண்
பன்னற்கருமஞ்சர்பதைத்தனரால்
வன்னத்தடமைந்தர்தம்வாகுதெரீஇப்
பொன்னைப்பொருமாதர்புழுங்கினரால். 38

விம்மாவெதிராவருவெம்முலைமேற்
கைம்மாநிகர்காளைபுயங்கடுகிப்
பம்மாமடமாதுபழிச்சொறர
வம்மாவறியேனெனவங்ககல்வான். 39

காரண்குழன்மாதிதுகைக்கவரென்
றோரம்மலர்வீசினளோகையின்மால்
சாரும்மொருகாளைதனித்திணிதோள்
நேரும்படியன்றொருநேரிழையே. 40

முன்னுற்றகறட்டிமுனுவிழுமோர்
மின்னைத்தழுவிக்கையெழுத்தவிடன்
என்னுற்றனை பார்வையிலாயெனவே
பன்னிக்களிகொண்டுபடர்ந்தனனால். 41

ஒக்கச்சமமையலுழந்திடுமோர்
மைக்கட்செறிமங்கையுமற்றவனும்
புக்கக்குழுவன்றுபொருந்திமுலை
தைக்கப்புயம்நின்றுதகைந்தனரால். 42

என்னேயொருகட்செவியென்றணவா
வின்னுளெதிர்வுற்றனனித்துணையென்
றுன்னுமிகுகாமுகனோரிருகை
மின்னார்நகின்மேவவிரித்தனனால். 43

கச்சைப்பொருமாமுலைகைதொடுமா
றிச்சைப்படுவானொருநாரியெதிர்
மெச்சித்தனியாரம்வியந்துகைதொட்
டச்சத்தொடழுத்தியகன்றனனால். 44

மின்னும்மூலைமீதுயர்வாகுவின்மேல்
முன்னம்புகமுட்டுவரொட்டுவரால்
மன்னும்மயல்மிக்குமயக்குதலாற்
றுன்னும்பலகாளையர்தோகையரே. 45

வன்னச்சிலைமாரன் வடிக்கணையாற்
கண்ணற்கருகாளையர்கன்னியரும்
நண்ணக்குழுவுற்றநடக்கையெலா
மெண்ணிச்சொலயாருளரிப்புவிமேல். 46

வேறு.

இன்னகைமகளிருமிளம்புமான்களும்
பன்னுமக்கிரியெலாம்பரந்துசுற்றினா
ரன்னமஞ்சுகமயில்குயில்களாமெனத்
துன்னுபஞ்சானனந்தும்பியாமென. 47

பொங்கரிற்சோலையினீள்பொதும்பரிற்
றங்குநீர்ச்சாரலிற்றனித்தசூழலிற்
சிங்கலில்விடர்தனிற்சிமயந்தன்னின்மற்
றெங்குமக்கிரிபுரியாகவேறினார். 48

விரிமலர்ச்சோலையும்வியந்துநற்கனி
தரவிசைபாடுவார்சதிபிழைத்திடா
தருநடம்புரிகுவாரம்மவொப்பிலாப்
புரிவருங்காட்சிபல்புரிகுவாரரோ. 49

எந்திரத்தால்வருமிரதமோச்சுவோர்
அந்தரஞ்செலப்புவியடையவேசூழல்
தந்திரவிமானங்கடணைமுடுக்குவோர்
இந்திரசாலவித்தைகளியற்றுவோர். 50

பொய்ப்படிவத்தினைப்புவியெலாமிறு
மெய்ப்படிவெனத்தகநடத்திமேவுவோர்
கைப்படவெடுக்குவகரப்பகாண்பருஞ்
செப்பிடுவித்தைபற்பலவுஞ்செய்குவோர். 51

கைப்படையொடுபலகதியிற்பாய்குவோர்
குப்பெனக்கனலிடைக்குளித்துமீள்குவோர்
ஒப்பறுந்தந்தியிற்கழையினோங்கியே
செப்புதற்கருவினோதங்கள்செய்குவோர். 52

மற்பயில்வோரொளிர்வாளையோச்சுவோர்
பற்பலபடையையோர்படையிற்றூக்குவோர்
பற்படாததிற்கவ்வப்படுமிலக்கினை
விற்படுபகழியாற்றுணித்துவீழ்த்துவோர். 53

கருநிறத்தலகைநேருருவங்காட்டிமுன்
வெருள்படுமனத்துமூரியைவிட்டுவோர்
அரிபடுவாயகுக்குடத்தையாட்டைமற்
றெரிவிழிக்காடையைப்பொரவியற்றுவோர். 54

துடியடித்தொருவிதக்காதைசொல்லுவோர்
செடிலடுத்தாடுவோர்திருடுஞ்சோரரைப்
பிடிபடுத்திருபுயம்பிணித்தயாப்பொடுங்
கடிதிழுத்தரசர்முன்வந்துகாட்டுவோர். 55

வெல்லினுஞ்சூதினைவிடுகவென்றதூஉம்
புல்லியமீன்பொசிதூண்டிற்பொன்னெனச்
சொல்லியுமேலவர்வறுமைத்தூதெனும்
வல்லினையொட்டம்வைத்தாடுமண்ணையோர். 56

தின்குபுகைப்பனதேடுமொட்டைபோ
லின்சுவைப்பண்டமற்றெவையுநோக்கறத்
தென்படநாறுகட்டேடியுண்டுபின்
புன்கவிதனிற்பலபிதற்றும்புன்மையோர். 57

முந்தறம்பொருளின்பமோக்கம்பெற்றுல
குய்ந்திடவிதிவிலக்குவமைகாட்டிநல்
ஐந்திலக்கணநவரசத்தோடையறச்
செந்தமிழ்வழக்குறச்செப்பும்செவ்வியோர். 58

செய்தொழிலெவற்றினுஞ்சிறப்பிதாமென
நெய்தொழில்விரும்பியநிகரில்வள்ளுவன்
பொய்தவிர்மொழிதழீஇப்புறஞ்செலாவகை
வைதிகசமயநூல்வழூத்துமாண்பினோர். 59

மின்சொலித்தென்னமெய்மினுக்கிமேதகு
பொன்சிமிழ்ப்புகர்முலைபொதிந்துகாட்டிநேர்
புன்சிரிப்பொடுவிழிவலையைப்போக்கிமற்
றின்சொலுற்றிளைஞரைமயக்குமேழையோர். 60

மன்னுயிருய்குபுவழங்குமாநிலம்
நன்னிலைபெறமழைநல்கிக்காத்தியென்
றின்னியத்தொடுமெழகெதிர்ந்திருந்தவப்
பொன்னகர்க்கிறைவனுந்தேவைப்போற்றுவோர். 61

எட்புகுத்துதற்கிடமிலையெனுங்குழு
வுட்புகுந்தலக்கணுற்றயங்கிநைந்துமக்
கட்பகிமனைவியைப்பிரிந்துகாண்குறும்
பெட்பொடுமழுதுவாய்பிதற்றித்தேடுவோர். 62

விண்படுபொருளினுமேலவாகிய
வுண்குவதின்குவவுடுப்பபூசுவ
பண்பொடுபருகுவபரிப்பபற்பல
நண்பொடாதுலர்தமைவிளித்துநல்குவோர். 63

கற்படவரைத்தசந்தனங்கலந்தகான்
பொற்புறுமலர்கடேன்பொதிந்தவின்கனி
கற்புரம்பாகிலையொடுங்கணிப்பறும்
நற்சுவைப்பண்டமும்விலைக்குநல்குவோர். 64

பலபெருந்தீவிடைவந்தபண்பமை
விலையுயர்நவமணிக்குப்பைமேம்படு
மலகறுசித்திரமமைந்தவான்பொருள்
மலையெனநிறைத்தொருவிலைவழுத்துவோர். 65

புனமுதலைவகைநிலத்திற்போந்தன
கனகமோடரதனங்கலப்பவெய்திய
வனையுமெல்லிழைபொரவருவமற்றும்பல்
வினைபடரரும்பொருள்விலைக்குநல்குவோர். 66

மாயிரும்புவிதனின்மகிமைவிஞ்சிய
மேயவித்தகையெலாம்விரிந்துநிற்பன
நாயகக்கட்செவிநவிலநோக்குதற்
காயிரத்திரட்டியவெனினுமாவதோ. 67

சொற்படுமின்னனதூயவாகிய
முற்படுபொருள்களுங்காட்சிமோடியும்
பற்பலகண்டுளமகிழ்வுபம்பியி
தற்புதமெனப்பலர்நோக்குவாரரோ. 68

விண்டொடர்தேரினின்மேகமண்டில
மண்டியபூட்கையின்வாசிமீதினிற்
றிண்டிறலரசிளங்குமரர்செல்குவ
கண்டெதிர்வியந்துளக்களிப்பினேக்குவார். 69

நீங்குமினெனப்பல்கானிகழ்த்திமுன்னர்கை
தாங்குவேத்திரர்மெய்ப்பைவிருத்தர்தாமுற
வோங்கியமானமீதும்பராரென
வாங்கெதிராசமினுரைநோக்குவார். 70

இவனெழிற்சாத்தகியாகுமாலென்பா
ரவனலப்படைபெறுமண்ணலாமென்பா
ருவனுவர்க்கடல்தழுவுலகமுற்றமுண்
டவனெனவுவப்பொடன்பமையநோக்குவார். 71

ஈங்குறுவிருத்தன்மற்றியாவனென்றுபின்
வாங்குவில்லுக்கிரசேனமன்னென்பா
ரோங்கியமாமணித்தேரினுற்றுளோன்
றீங்கறுபுகழ்வசுதேவனுமென்பார். 72

கன்னெகிழ்வெனத்திணிந்திறுகிக்கஞ்சுக
மன்னுமெய்வாள்வலிப்போர்வயாவினர்
ஒன்னலர்தமைக்கொதுகாமென்றுன்னுவோர்
மன்னர்முன்பின்வருமறவர்நோக்குவார். 73

நண்பவன்மேற்றெனநடித்துத்தன்மனக்
கண்பொருண்மேற்செலுங்கணிகைபோன்மென
மண்வருந்தகைமையவெனினும்வாம்பரி
விண்வரற்போல்வருவிரேர்தம்நோக்குவார். 74

ஐந்துறுப்பினுங்கொல்வதாயிரண்டொடு
மைந்துறுப்பவனிதோய்ந்தாறுமொன்றும்கி
வந்தொன்பான்முழமுடல்வார்ந்துமுன்னுயர்
மைந்துடையரசுவாவருவநோக்குவார். 75

தட்டுவைடூரியந்தமனியத்திருள்
கிட்டுமார்வச்சிரங்கிடுகுமாமணி
மொட்டுவித்துருமம்விண்முட்டுமொண்கொடி
நட்டபொற்றேர்நிரைநடப்பநோக்குவார். 76

முட்டியவிண்ணென முதுகுகூன்பொறுத்
தெட்டிவாங்கியகழுத்தெக்கியெக்கியே
யிட்டிடுமளப்பறும்பாரமேந்தியாங்
கொட்டகிரைவரலுவந்துநோக்குவார். 77

இத்தகவுற்றபல்காட்சியாவையு
மத்ததிகண்டுகொண்டார்வமிஞ்சியே
பித்தருமுவந்தனரென்னப்பேசிடி
னுத்தமருவப்பினையுரைக்கற்பாலதோ. 78

[இந்திரதேவனைப் பூசனைசெய்தல்.]

ஆயிடையுக்கிரசேனனுணையின்
மேயினர்பற்பலர்விரைகொள்சாந்தமுந்
தூயநீர்நன்மலர்சூடன்றூன்மறை
யேயபல்பொருள்களுமங்கையேந்தியே. 79

நேசமுமுவகையுநிகழநின்றுநற்
பூசனைதொடங்கினர்முற்றிப்போற்றினர்
தேசுகண்படுக்குமெய்த்தேவராசனும்
வாசவன்மனமெலாமகிழ்வன்றரோ. 80

திருவிழாச்சருக்க முற்றும்.

(ஆக சருக்கம் 23 - க்கு கவிகள், 1142.)

---

## [24-ஆவது துவாரகையடைந்த சருக்கம்.]

இச்சருக்கத்தால், யதிவேடம்பூண்ட தனஞ்செயனை கண்ணன் பலராமன் முதலோர்கண்டு வணங்குதலும், தங்காரியசித்தியின் பொருட்டு பிறருணராதபடி சூசனையாய்க் கண்ணனும் யதியும் வசனித்தலும், பின் சுபத்திரை கன்னிகாமாடஞ் சேர்தலுங் கூறப்படுகின்றன.

எண்ணுறுஞ்சூழ்ச்சியனுகுமெம்பிரான்
வண்ணவிற்சாத்தகிமகிபர்பின்வர
வெண்ணிறத்தண்ணல்முன்மேவமேவினன்
நண்ணியகாட்சிகள்பலவும்நாடியே. 1

அங்கவன்வரவையேநோக்கியாலமர்
பங்குனன்மையலிற்பதைக்குநெஞ்சினன்
பொங்கியகிளியொடுவருதுமென்றுபோ
மெங்கணுயகன்வராதென்னெனன்றனுவான். 2

[இதுமுதல் 9-கவிகள், அருச்சுனன் பலவாறு சிந்தித்தலைக் கூறுதல்.]

முந்தராச்சிறுமியைமுயங்கித்தென்னவன்
பந்தனைதனையும்பின்மருவும்பண்பினேற்
கெந்தெரிவையுமினித்தரலெவ்வாறெனச்
சிந்தனைசெய்துளந்திகைத்தனன்கொலோ. 3

இத்திறங்கண்ணுறுமேதியேந்துகைச்
சித்திராங்கதைமிகச்சீறுமேயெனிற்
றத்தரிவிழிமயிற்சாயனப்பினு
ளெத்திறமுய்வளென்றெண்ணியேகொலோ. 4

இன்னவைமறைத்தியற்றுதலெவ்வாறென
வுன்னியெம்மிடரெலாமொறுக்குமொள்ளியோன்
மன்னவைக்கேற்பிபங்கிரஞ்செய்தேயதாற்
றுன்னியமாறுறத்துயக்குற்றேகொலோ. 5

முந்துமைவரைத்தெறச்சூழ்ச்சிமுன்னுமவ்
வந்தன்சேய்நினைவினுகுதற்குமாமென்பார்க்
கெந்திறமுழுதெடுத்திசைத்துமேற்கலாத்
தந்தவண்ணன்சொலாற்றாழ்ந்தனன்கொலோ. 6

உடலெலாம்விடம்பெறுமொருத்தியொப்பறு
மடல்செயுமொருத்தியுமிருப்பவையவென்
மடமயிறனையும்யான்வழங்கலேனென
விடர்பொறுத்தின்றவளியம்பவேகொலோ. 7

கிச்சினுற்றொருவகைகிளர்ந்தும்நேர்வரா
தச்சமுற்றொளித்திருந்தேபினந்தமன்
பிச்சையிற்றருமரசுவக்கும்பேதைக்குச்
சிச்சியீயேனெனத்துணேவன்செப்பவோ. 8

கிழவன்சொல்நல்லிசைக்கின்னாத்திணுக்
கழகுறுவென்பபோலளிக்கவாமென
வழவழப்பொடுஞ்சொலெம்மாமன்மாமிமே
லொழிவறவுரப்புமுன்னவற்கொதுங்கியோ. 9

அந்தமன்முதன்மகற்களிக்கவெள்ளைதன்
சிந்தையென்பதுமுனஞ்சிறிதுதேர்குவேந்
தந்திருமரபினோர்கூடித்தாமதே
மந்திரநிலைசெயமயக்குற்றேகொலோ. 10

இனையனதடைபலவெய்திற்றாயினும்
பனிதெறும்பரிதியின்மாயப்பண்பினால்
நினைவுறுசூழ்ச்சியைமுடிக்குநின்மலன்
மனமுவந்தென்முனம்வராததென்கொலோ. 11

[கண்ணனது வரவைக் காணுதல்.]

உண்ணிகழ்வறிகிலேனெனவுயங்கிவே
றெண்ணலற்றேவறிதிருக்குமெல்லையி
னண்ணலுங்கேளிருமடையவேவருங்
கண்ணனைச்சேய்மையிற்கண்ணினோக்கினான். 12

வேறு.

[அருச்சுனன் நூதனவேடங் கொள்ளல்]

கண்டகாலையிற்கண்பனிநீர்தரக்களிபோய்
விண்டுவோடுதன்விதியையும்வியந்தொருசூழ்ச்சி
யுண்டியாஞ்செயற்குரியவென்றுன்னியோர்வேடங்
கொண்டனன்புவியாவும்வந்தெதிர்ந்துகைகூப்ப. 13

செங்கறோய்ந்தசெஞ்சீரையைத்திருத்திநீள்சடிலத்
தொங்கலோர்வகைமுடிபெறக்கவினுறத்தொகுத்துப்
புங்கபாகவதக்குழாத்திறையெனப்புகலத்
துங்கமண்குழைத்திட்டனனுதன்மிசைத்துலங்க. 14

இட்டுமெய்துவாதசத்திருநாமமுமெய்த
விட்டிடாததின்வில்கிளர்ந்தெண்டிசைவிரியத்
தொட்டுநற்றுழாய்மணியிருதோண்மிசைப்புரள
நட்டனுமிகைகுசஞ்செபமாலைகைநரனே. 15

நேர்வகுத்தமுக்கவர்க்கதைகைபடநிறுவிப்
பார்வைநாசிமுனிலைநிலாக்கரவொடும்பரப்பிக்
கார்மெய்நாரணநமவெனப்பன்முறைகழறிச்
சீர்பெறச்செபித்திருந்தனன்முனிவருந்திகைப்ப. 16

[கண்ணன் முதலியோர் அருச்சுன யதியைக் காணல்.]

ஆமையிற்பொறிகரவொடுமடக்கியுற்றவன்முன்
பூமிகேள்வனீலாம்பரன்முதலினோர்புகுந்தார்
நேமிவைப்பெலாமயக்கொருகிகாறுவேட
மாமிதென்றறிவியங்கெழுமுறுவலுள்ளடக்கி. 17

[கண்ணன் யதிக்கு வணங்குதல்.]

எங்கண்மாதவப்பயனெலாமொருவடிவெடுத்தே
யிங்குவந்தபோன்றடிகள்வந்தெழுந்தனிரினியாம்
பொங்குசஞ்சிதந்தவிர்ந்துய்ந்தேமெனத்துதிபுரிந்தே
சங்கவண்ணனுக்கிளவலைத்தவன்சரண்டாழ்ந்தான். 18

தாலகேதனன்சாத்தகிமற்றுளதரணி
பாலரும்மவன்கரவுணர்ந்திலரடிபணிந்தார்
மானுழந்தவன்முற்றியவந்தநங்கருமம்
போனுமென்றுளங்களிகெழவாசியைப்புகன்றுன். 19

சுட்டுமேலவர்கீழவர்ப்படிவதாய்த்தோற்றும்
முட்டுகாலபேதத்தெனுமுதுமொழிக்கிணங்கக்
கிட்டியோகிமுன்கேசவன்கிஞ்சுகவாய்கை
யொட்டிமேனியையொடுக்கிநின்றிம்மொழியுரைப்பான். 20

[இதுமுதல் 2-கவிகள், கண்ணன் யதியை விசாரித்தல்.]

நஞ்சம்வானுயநுங்கிறைகயிலைகொனயனக்
கஞ்சமாயிரம்படருமெய்க்காவிறைபதிகொ
லஞ்சவெங்கிசைவருமிறையுலகுகொலரிய
மஞ்சுமெய்யிறைவதிதருவைகுந்தமேகொல். 21

எங்குநின்றனிர்படர்ந்ததெணிவ்வழியிலகு
மங்கநொந்தனிர்யாவிரென்றச்சுதன்வினவச்
செங்கைநீட்டியீங்கிருமெனவவர்தமைச்செப்பிப்
புங்கமாதவனெனத்திகழ்வேந்திவைபுகல்வான். 22

[இதுமுதல் 3-கவிகள், யதி பதில்கூறல்.]

வாசவன்முதல்வரும்படர்ந்திருந்திடும்வரையி
லாசறுந்தலமிருக்கையேமரும்பொருளுணர்வீர்
கேசவற்கருங்கேண்மைபனெனப்புவிகிளத்தப்
பேசவேறெனாயணமுதற்பெயர்பெறுவேம். 23

அந்தரத்தருமன்பதிவாழெனையமலன்
றந்தவானதிமுதல்வியனதிபடிதரையிற்
செந்திருக்கிறையடியரைச்சென்றுகாண்கெனச்சீர்
முந்துநல்லிசையொருமுனிமுறைமையின்மொழிய. 24

இகந்துவானமிப்புவியினோர்கங்கையையெதிர்ந்தேந்
திகந்தமும்வலஞ்செய்துசேதுவுந்தெரிசித்தேஞ்
சுகந்தமுற்றவித்துவரையுற்றேசுகந்தோய
வுகந்துவந்தனஞ்சாதுர்மாதம்மெதிருறவே. 25

[இதுமுதல் 12 கவிகள், யதியும் யாதவரும் பல சம்பாஷித்தல்.]

இங்குவந்தெனைக்கண்டநீர்யாரெனவெம்முன்
சங்கவண்ணரீங்கிவரவன்றம்பிசாத்தகியான்
எங்கணும்புகல்கிருட்டிணனிப்பதிக்கிறையாம்
புங்கமாதவவென்றுபின்புகல்வனபொதிந்து. 26

அகத்தினுள்ளியொன்றன்பொடுநோக்கினனண்ணல்
முகத்தைநன்குமுக்காலமுமுணருமெம்முகுந்தன்
அகத்துமேனிபோன்றிருப்பவனம்பகக்குறிப்பான்
மிகத்தெரித்தனனழைத்துயாமேவுதுமெனவே. 27

கருதியண்ணறன்னினைவினைக்கைதொழுதெதியை
வருதிரெம்மனைவிரதமுற்றெல்லையும்வதிந்தே
புரிதிர்நல்லருளெமக்கெனப்புறப்புகழ்பொலிய
வரிநகைத்தலற்றேறத்தலுமவனைத்தறைவான். 28

இறைவர்நீவிர்மற்றற்பவாழ்விச்சியாயதியாம்
மறையைமாதவன்றனையலாலெவற்றையுமதியேம்
அறையிற்பாதலமந்தரநுமக்கெமக்கடுக்கும்
உறைவதெங்ஙனநும்முடனளவளாயுவந்தே. 29

கான்றவத்துவினெம்மனோர்வெறுத்திடுங்கனக
மான்றசெல்வமெய்நிலையெனமமதையுற்றரச
ரேன்றமுத்தர்கடம்மையுமெள்குவரிதற்கோர்
சான்றுதக்கனும்நகுடனுமிந்திரன்றானும். 30

வருவதன்னதிற்கேடெனமதித்திலர்மதிப்போ
ரெரியின்முன்குளிர்காய்பவர்போற்சுகித்திருப்பார்
கருதும்நீரெனக்களிமிகுங்கண்ணனோர்விடுதி
தருதுமன்னதிற்றனித்திருந்தெமக்கருடருவீர். 31

என்றுபின்னருமேத்தநீலாம்பரத்திறையும்
நின்றுயாமுய்வான்புரிதிரென்றன்பொடுநிகழ்த்த
நன்றிருந்ததுன்னூமெனத்தன்னொடுநவின்றே
யன்றனோர்தொழற்கிசைந்தபோனடித்திவையறைவான். 32

முன்னர்நீர்மைநம்மரபினன்முறைவழாவிறைவீர்
கன்னியாயகக்கருத்துணர்சதுரையாய்க்கற்றோர்
சொன்னசுந்தரமுழுதெதிர்ந்தரிலறச்சோரா
தென்னரும்பணிசெயுமொருபெண்மணியிருக்கின். 33

நந்தலின்றிநன்னலம்பெறும்நாற்றிங்கள்விரதஞ்
சிந்தைசெய்குதிரென்றனன்குத்திரச்செயலோன்
விந்தைகேள்வன்மாறுரைத்திலன்மேல்விளைவுன்னி
நந்துமேனியைநோக்கலுமவனிவைநவில்வான். 34

அருந்தவத்தினோன்பறைந்தநல்லிலக்கணமமைந்த
முருந்துவாணகைச்சுபத்திரையிருக்கநீமொழிய
வருந்தலென்னெனவாமெனமாயவன்மகிழ்ந்தே
யிருந்தலாற்பிறிதிசைத்திலன்முசலியீதிசைக்கும். 35

இயம்புநற்குணமியாவையுமலிந்திடுமெங்கை
நயம்பெறப்பணியாற்றமற்றவண்மனைநண்ணி
வியம்பெறத்தனிவிரதநன்கியற்றெனவிசயன்
புயம்பொதுத்தகஞ்சுகமகிழ்வெவர்புகல்கிற்பார் 36

அப்பசுங்கிளிமனைடகன்றிவ்விழாவறிவா
னிப்பருப்பதத்தெய்துமேற்காண்டும்யாமென்னச்
செப்பயோகியவ்வுளவறியாச்செம்மற்குற்று
டுப்பிதழ்த்திருவெனச்சினியருள்சுதன்சொற்றான். 37

[இதுமுதல் 3-கவிகள், சுபத்திரை யதிமுன் வருதல்.]

தேவயிவ்வுழித்தருதுநுந்திருவுளப்படியென்
றேவலர்க்கலத்திறைசொலக்கடிதவரேகித்
தேவகிக்கிசைத்தவள்சொலாற்செல்வியையழைத்து
மேவினாருடன்றோழியர்சூழ்வரவிரைவின். 38

அன்னமாமெனமயிலெனவமுதுகமிழற்றும்
வன்னியாமெனக்குயிலெனமஞ்சர்கண்வாட்டு
மின்னலாமெனக்கொடியெனவேல்விழிவீசிக்
கன்னிவந்தனளருந்தவன்மனமெலாங்கலங்க. 39

னைந்தநூலிடைநகமுலையொளிர்முத்துநகைதேன்
சிந்துமாலிகைசெறிகுழற்சுபத்திரைத்தெரிவை
யந்தயோகிதன்னிணைவொழிந்தியோகமேயடுப்ப
வந்துமுன்னரின்முறைமையின்வணங்கினின்றனளால். 40

[சுபத்திரையைக்கண்டு யதி மயங்குதல்.]

வீசுவாடையின்விரிந்தசுந்தரத்தின்வேல்விழியிற்
காசுலாமுலைக்காட்சியிற்கருத்துலைமெழுகா
யூசலாடியவுயிரொடுநெட்டுயிர்த்தோதா
னூசிகண்முகிழ்த்தம்முனிநாவெழாதடங்கி. 41

[கண்ணன் யதியாகிய அருச்சுனனிலைமையை பலரறியாமற் றெளிவித்தல்.]

தேறிமற்றவன்மனநிலையயனின்றோர்தேறு
வாறுசெய்குவானுன்னியிவ்வகிலமுந்தானாய்
வேறதாய்விளையாடுதன்மாயையைவிபுலை
தேறுணவகைசெய்பரன்யதிக்கிவைசெப்பும். 42

உற்றநல்விவகாரமாந்திசையினும்யோகப்
பெற்றிபெற்றிடும்பெருமையீர்நின்றவிப்பிரியை
சொற்றமின்னுணர்வுறுமெனுமரியின்சொற்சுடரா
னுற்றமெய்மயக்கிருடவிர்ந்தோதினனுசி. 43

சாலவித்தைசெய்பவன்வழுவத்தனித்துணையாய்
மேலிருப்பவன்வழாததினிலைவிளக்குவபோன்
மாலுமன்னனுநடித்திடுமாயையையறியார்
தாலகேதுவுமற்றுளதரணிபர்பலரும். 44

[பலராமர் கூறுதல்.]

நந்துசூலங்குண்டிகைபெறுந்தேவநாயகரா
முந்தைமூவரோர்படிவெடுத்தனையவிம்முனிவன்
சிந்தையிற்பணிபுரிந்ததால்வருநலந்தினையென்
றந்தமானினிக்கறைந்தருந்தவன்முகநோக்கி. 45

பொடியவள்செய்பணிவிடைதனின்வரும்பிழைபொறுத்தே
யடிகணல்லருடரல்வழக்கெனப்பறைந்தவடன்
கடிமனைக்கெழுந்தருளுமென்றம்முனிகழன்மீ
முடிபடிந்தருள்செயும்விடையென்றனன்முசலி. 46

[யதி கூறுதல்.]

நன்றிகொல்கிலர்நீர்மையிற்றிறம்பிலர்நாளுந்
துன்றுசிற்றறத்தினுழந்திலர்தெரிதிமெய்த்துறவோ
ரென்றுநங்கைமேலன்பொருவேமொன்றுமெண்ணு
தின்றுசெல்கநீயென முனியேகினனலக்கோன். 47

[அருச்சுனன் சுபத்திரைகன்னிகாமாடஞ் சேர்தல்.]

அச்சுதன்முதன்மன்னரும்வணங்கியாங்ககன்றார்
உச்சவங்கழிந்தெவருந்தத்தம்பதியுற்றார்
பச்சைமெய்ப்பரியேழுமேற்பரவைகாணப்போய்
கச்சைமென்முலைமின்மனையருந்தவன்கண்டான். 48

துவாரகையடைந்த சருக்க முற்றும்.

(ஆக சருக்கம் 24-க்கு கவிகள், 1190.)



## (25-ஆவது சம்பாடணைச் சருக்கம்.)



இச்சருக்கத்தால், சுபத்திரை பக்திவினயத்துடன் யதிக்குப் பணிவிடை புரிதலும், யதியினது செய்கையி லையமுற்று விசாரித்ததில், விசயனென்றறிந்து நாணமுறுதலும், கண்ணன் வந்து பலபேசிப் போதலுங் கூறுகின்றன.

[சுபத்திரை யதிக்கு உபசரித்தல்.]

சென்றுதம்மில்லிற்றுபதனுவப்பச்செய்கடன்முறைபலசெய்தாங்
கன்றவன்றுயிறற்கிடமமைத்ததற்பினுருயிர்த்தோழியர்படைப்பக்
கன்றெலிகறங்கவமுதயின்றின்சொற்காரிகைகாமர்மெல்லணைமேற்
றன்றிருநயனம்வளர்ந்தனளொசிந்ததமனியக்கொம்பெனத்தயங்கி. 1

[இதுமுதல் 4-கவிகள், யதி காமமயக்கமுறல்.]

செப்பிளங்கொங்கையெழிலின்மென்னடையிற்
றீஞ்சொலிற்பார்வையிற்றியங்கி
யுப்பொடுசுவைமற்றுணர்கிலன்படைத்த
வோதனமுண்டொருதிசைவாழ்
சுப்பிரதீபம்பயம்புசார்குவதொத்
தவள்புகுத்தில்வயிற்றுன்றி
வெப்புறுமதனனங்கணையினவ்விசயன்
மெலிந்தனைமிழற்றிடப்போமோ. 2

தத்தைமென்மொழிவந்தனளெனுமந்தோ
தழுவலற்றகனுமென்றயரும்
நித்திலஞ்செறிதுப்பிதழமுதளித்தி
நேரிழாய்சரணினக்கென்னும்
கத்துவெண்டாங்கக்கடலினைமுனியுங்
காமனைவெலக்கைவில்லெடுக்கும்
பித்தரிற்பிதற்றுமுசலியன்றேத்தப்
பெருமைகொண்டெய்தியபெரியோன். 3

பூட்டுவின்மதனன்சாம்படப்பொதுத்த
புண்வழியழற்புகுந்தென்ன
வாட்டுதென்றீயாற்பதைபதைத்துடலம்
வந்துயிர்வதைக்குவாணிலவா
லோட்டிநெட்டுயிர்ப்பைத்தன்மனமடங்க
வோய்ந்தனன்பட்டவையொன்றோ
கீட்டிசைக்கிரியிற்றபனனைக்கிடைத்துங்
கிடந்தனன்படுக்கையின்கிடையே. 4

வேலைவாயிரவிமேவியுமடிகள்
விழைந்தனிர்கண்படைவிதியைக்
காலைவாய்முடித்திலீரெனவந்தோர்
கன்னிதன்முன்சொலக்கண்டே
யாலைவாய்க்கழையினுலைந்திடுமண்ண
லதற்குமாறறைகுவானுன்னி
மேலைநாட்கிடைத்தவிழாச்சிரமத்தின்
மிகுந்தகண்படையெனவிழித்தான். 5

[இதுமுதல் 4-கவிகள், அருச்சுனன் உண்மைமுனிபோல் சுபத்திரைமுன் கபடமாக நடித்தல்.]

விழித்தவன்காலைவிதியொடுவிண்டுபூசனைமுடித்துவீற்றிருப்பப்
பழுத்தமெய்ஞ்ஞானமுனிவவிப்பேதைபவமகல்காதைகள்பகரென்
றுழைத்தடவிழிமின்றுதிப்பமற்றவண்மீதோடியகாதனுள்ளடக்கிச்
கழித்தவெம்பவத்தாபதனெனநீதிக்கதைபலவன்றுகட்டுரைத்தான். 6

மிகைதவிர்முனிவர்சரிதையைவிரிப்பான்மின்னுளமகிழ்ந்தருகிருப்ப
நகைமுகத்தொடுமோர்சதிபதிகாதனலனெலாம்வருங்கதைநவில்வா
னகமதற்குவகையறமுகக்குறிகண்டாசையற்றவரின்வேதாந்தம்
பகருவனொருபுட்படுப்பவேட்டுவனோர்மாயையின்வலைபரப்புவபோல்.

பின்னொருதினங்கைவரைநலனேக்கிப்
பெட்புறுங்கொழுநனைப்பெறுவா
யன்னமேயெனத்தன்கண்கணீர்கலுழ
வழுதல்கூறெனவவளழவே
கன்னிமெய்தொடுதலேதமென்போல்வார்
கலங்கிடேற்குறைநினக்கிலவா
னின்னதூழுணர்வான்பற்றினெனின்கை
யாதலினெனநிகழ்த்தினனல். 8

நல்லுணர்வெழுச்சிமுதிர்ந்தமெய்ஞ்ஞான
நாதர்போனங்கைமுனடித்தே
புல்லுதற்கமையம்நோக்கிநிற்பவனைப்
புன்மைதீர்மறைமுடிவதனிற்
சொல்லுமெம்பரமனெனமதித்திமைப்பிற்
சொற்பணிசோர்வறப்புரிவா
ளல்லுறழைம்பாற்கொடியிடைத்துவர்வா
யானகதுந்துமியணங்கே. 9

[சுபத்திரை ஐயமுறல்.]

மற்றொருதினத்தினையமுஞ்சிறிது
வாய்த்தனண்மன்னர்பால்வயங்கும்
விற்றழும்படருவாகுவுங்கரண
விருத்தியுமேம்படுமழகுங்
கற்றவர்க்கொவ்வாநீர்மையின்மடவார்
கற்பெலாங்கவருகண்ணேக்கு
முற்றுணர்ந்தந்தவொண்டொடிதவன்மு
னைதுங்கிநின்றொருமொழியுரைக்கும். 10

[சுபத்திரை யதியை யாரோன வினவுதல்.]

தோற்றுவெண்டேரினேக்கியிவ்வுலகத்
தோற்றமுமொடுக்கமுந்தோன்று
வாற்றுளவொன்றையறிந்துபேரின்பத்
தழுந்தியநின்மலவடிகாள்
போற்றுபுவுலகம்வலம்வருநும்மோர்
புரியெதுபுகலுதிரெனவக்
கூற்றுறணயனக்கோதையைநோக்கிக்
குறுநகையொடுமுனிகூறும். 11

[யதி தன்னகர மிந்திரப்பிரத்த மெனல்.]

பஞ்சுவந்தடுத்துவிஞ்சியுங்கடுத்துப்
பனிமலரணிச்சத்தைப்பழித்துக்
கஞ்சமுங்கவற்றியஞ்சமுங்கவற்றக்
கனைத்தெதிர்சிலம்பொளிர்கழலாய்
மஞ்சர்கண்படுக்கும்வஞ்சியரடுக்கும்
வான்றொடுகுடுமிபொன்மாட
மிஞ்சிகண்டொதுங்குஞ்செஞ்சுடர்தயங்கு
மிந்திரப்பிரத்தமென்றனனால். 12

[சுபத்திரை அருச்சுனனீங்க மற்றவர்க்ஷேமம் விசாரித்தல்.]

அன்னசொற்கேட்டவழகினநடிக்கு
மரங்கெனவிளங்குமெய்யரிவை
நன்னலத்தருமன்மதுகைமாருதிமா
நகுலனங்கலைமுதிர்நம்பி
யென்றொருமாமியாகுமற்றவரா
யிவர்சுகம்பெறவிருந்தனரோ
மன்னரைமதியாய்மதியினைமதிப்போய்
மதியடுமதிற்புரமதினே. 13

[அருச்சுனனைமறந்த தெகிறைலெனச் சுபத்திரையை யதிகேட்டல்.]

என்றிசைக்குழலிற்குயிலினிற்கிளத்து
மிலங்கிழைதனையதிநோக்கித்
துன்றுவண்டினமுண்டுவெப்புறநறவஞ்
சொரிமலர்விரிசுரிகுழலாய்
ஒன்றுவிண்டழல்காலயகிலமுறமு
வொளிகெழுவேந்தரைவரினக்
குன்றெறிகுலிசன்குமரனைமறந்த
தென்னெனவெதிர்குயிற்றிலளால். 14

[இதுமுதல் - 2 கவிகள், தோழி யதிக்குப் பதில்கூறல்.]

கூவியகுயில்கொண்டமுவொலிதனின்வாய்
கூப்பமாடிருந்தவோர்மயிறன்
றாவியைவீசிக்கிளர்தல்போன்முனிவன்
சொற்றசொற்கெதிர்சொலாதெழுது

மோவியந்தனில்வாய்பொதிந்தவொண்டொடியி
னுளநிகழ்வையறவுணரு
மாவியொத்திடுமோர்சிலதிமெல்லெனச்சென்
றருந்தவற்றொழுதிவையறைவாள். 15

கள்ளவிழ்மலர்பெய்குழன்மின்பற்குனற்குக்
காதலியாங்கருத்ததினால்
விள்ளவெட்கினளவ்வீரன்யாத்திரையை
மேவியகேட்டுளம்விதனத்
துள்ளழுந்தினளெங்கேனுமற்றவனை
யுணர்திரேனவிறிறென்றுரைப்பத்
தெள்ளமிழ்தெழக்காண்சுாரினுண்மகிழ்ந்து
சிரமசைத்தெதிர்சிரித்தியம்பும். 16

[அருச்சுனன் யானேயென யதிகூறல்.]

கண்டனன்குடங்கைநெல்லியினவனைக்
காதலிக்காரிகைபொருட்டாற்
கொண்டனன்முனிவர்படிவமுந்நீர்சூழ்
குவலயமுழுவதுங்குலவி
விண்டொடர்கிரியினென்னல்வந்தடுப்ப
வெள்ளையன்பொடுநம்பால்விடுப்ப
வண்டினனும்மிலிருந்தனனின்று
மீதிசைத்தரிவையீங்கென்றான். 17

[சுபத்திரை பாறுதலு மருச்சுனன் நகைதலும்.]

கேட்டயாதவிநெட்டுயிர்த்தகத்து
வகைகெழப்புளகம்நகைகிளர
வாட்டமற்றிடைநின்றிடச்சிமிழ்த்திருந்த
வம்பறுத்தெழவிருநகில
மீட்டியநாணமுயரவவ்வயின்விட்
டிமைப்பின்முன்னிடைந்தொருகொடிபோ
லோட்டமிட்டனளத்ததியிவனேடி
யுபயகைவிரித்தெதிர்தகைந்தான். 18

வேறு.

[இதுமுதல் 4-கவிகள், தோழியர் தேவகிக்கு சுபத்திரையின்னிலைமைகூறுதல்.]

ஆவலிற்றகைந்தேயெதிர்நிற்குமருச்சுனன்
றீவிரந்தெரிசேடியர்செங்கைதொடேலெனு
வோவறும்பலவுண்மையுரைத்துமறித்தனர்
தேவகிப்பெயராய்வயினேகினரேசிலர். 19

செல்லுமங்கையர்தேவகிதாண்மிசைச்சென்னியைப்
புல்லிவாய்காம்பொத்தினர்நிற்கவப்பூவையும்
வல்லைகூறுமின்வந்தவென்றுள்ளமயங்கவே
மெல்லவந்தரமாகவெடுத்துவிளம்புவார். 20

முன்னெமில்வயின்முக்கவர்த்தண்டொடுமுற்றவ
னன்னைகுந்தியளித்ததனஞ்சயனுகிரம்
மின்னைமெய்தொடமேவினன்வ்வயின்மேவுயாம்
பன்னுவாய்மையினின்றனன்மால்மிகுபண்பினே. 21

வீங்குமையலினம்மொருமின்னுமயங்குமா
னீங்கலாதெமர்கண்ணிமையொத்தெதிர்நிற்றலாற்
றீங்குறுளிதுகாறவணிற்கிதுசெப்பவே
யீங்கெதிர்ந்தனமுற்றநிதென்றனரேழைமார். 22

[தேவகிபதில் தோழியர்க் கறிவித்தல்.]

அற்றகத்துணரன்னையுவந்துபினச்சமும்
பெற்றுநீரிதுபேசலிரெங்குமென்பேதைமீர்
தெற்றெனத்தனியேகுதிர்நங்கையைத்தேற்றுதி
ரிற்றையென்றனண்மாதிடமேயவரேகினர். 23

[தேவகி கண்ணனுக் கறிவித்தல்.]

உரலினின்றவ்வுறித்தயிர்முற்றுமுறிஞ்சினோ
னருகுவந்தனளச்சுதனன்னைமலர்ப்பத
மிருகைகொண்டிவணெய்தியதென்னைகொலென்னவே
யொருவரங்கறியாவகையுற்றதுணர்த்தினள். 24

[கண்ணன் அருச்சுனனிடம் வருதல்.]

ஆகுமாறவையந்தரமாகவமைப்பல்யா
னேகுநீயெனவம்மையுவப்பொடுமேகினண்
மேகமேனியெதிர்ந்தனன்கண்டுவிழைவொடும்
பாகசாதனிவந்தடிமுன்புபணிந்திட. 25

[இது முதல் - 16-கவிகள், கிருஷ்ணார்ச்சுன விநோத சம்வாதம்.]

போகிசேய்நிலைகண்டரிபுன்னகைகொண்டுயர்
தோகைபாகன்பொருப்பிற்றிருமண்டுலங்கினு
மீகுவானலனெங்கையைநிற்கெழுனென்றுமிக்
கோகையோடுதழுவின னும்பருமோர்கலான். 26

உழுவலன்பினுடற்றழுவிப்பினுமற்றவன்
முழுமனத்திடங்காணுபுமுன்னினனுமென
வழுவிலோர்விளையாடல்மதித்தனன்மண்மிசை
யெழுபிறப்பவனைப்பிரியாதெழுமெம்பிரான். 27

வேறு.

உகக்கண்ணீரைங்கணையுடற்றவுள்ளம்பனிக்குமொருவனொடு
மிகக்கண்ணிகழோரேகாந்தமேவிவிமலனிவைவிளம்பு
முகக்கண்ணிரண்டுமில்லாதோன்முன்னேயளித்தவலம்புரித்தா
ரகக்கண்ணில்லான்றனக்களிப்பானமைந்தானெங்களலப்படையோன். 28

எந்தைபுரைத்தும்பாயுரைத்தும்பானுமுனைத்துமுனையிகழ்ந்தான்
விந்தையமர்தோள்விசயவினிவிடுகமனத்தெம்மின்னையென்றான்
முந்தம்மலையினினக்கிதுதான்முடியாவோவென்றிசைத்தீண்டு
சிந்தைவிடுகவென்றிசைப்பாய்சிவசிவாயிதென்னேயோ. 29

என்றுவிசயன்றியங்கிநிற்பவிறைவன்பிழையொன்றிலவென்மே
லன்றுமுடியாவோவென்றேமகுதேயீண்டும்வேறிலவா
லென்றுநகையாதிசைப்பவத்தானென்னுமுறையாலெழுந்தோடுங்
குன்றினிறகுதடியசனிக்கோச்சேய்கொதித்திவ்வுரைகூறும். 30

பிடறியேற்றுமறிதேடிக்காணேமென்றுபிதற்றியழு
மிடையர்மயக்குங்கல்விகொண்டேயென்னைமயக்கவந்தாயே
யுடலம்புளகமெழவெனையிவ்வூரிற்கொடுவந்துண்மைகெடக்
கடையிற்கரத்தைவிரித்தனினக்கடைவோகருணைக்களஞ்சியமே. 31

என்னச்சினமும்பரிபவமுமெதிரப்பறையும்விசயனெதிர்
பின்னைக்கொருநாயகன்வறிதேபிதற்றேலிதயம்பீழைபட
மின்னைத்தெரிசித்துற்றமயல்விட்டேநுந்தம்புரிமேவ
நின்னைக்கொடுவந்தேமல்லான்மன்றற்கிசைவுநிகழ்த்தினமோ. 32

கண்டாயெங்கைதரிசனத்தைக்காணுகாமப்பரிசனத்தை
யுண்டாயவள்கையோதனத்தையுரையாமமுதசாதனத்தைக்
கொண்டாயெமதுவந்தனத்தைக்கூறுமோநீநிந்தனத்தை
விண்டாவெயிலும்பட்டினத்தைமேவக்கருமஞ்சுட்டிநத்தே. 33

குல்லைப்படலைப்பகவனிதுகூறவிசயன்குறுநகைசெய்
தெல்லைத்திமிரமெனப்பொருத்தமேற்பப்பறைவோர்தனிற்பொருந்தச்
சொல்லற்கெழுவாய்நீயெனினுந்தோற்றும்பொருளொன்றேதுணிபாங்
கல்லைக்கறிக்கநன்றாகச்சமைத்தாயெனுங்கட்டுரையிகல. 34

போவேமெனற்குவருவேமென்றலகம்புகன்றம்பொருட்ரல்போன்
மேவால்நும்மூர்க்கெனலெனை நீமின்னேடிணைந்தேகெனும்பொருளைத்
தேவாதருமென்றுரைப்பமைம்மெய்த்திருமானகைசெய்தடர்மயலால்
நாவாய்மொழிவதாயாய்நீநவில்வாய்வருவநாடாவாய். 35

யாதுகருத்தென்றறியேமற்றெமக்கொன்றியம்பாதேர்ப்படையோன்
றாதுவிடுத்துக்கண்ணிலிதன்சுதனைவரச்சொற்றனனென்றே
மாதர்சிலரந்தரங்கமாவழுத்தாநிற்குமொருவதந்தி
காதிற்புகுமாலவன்சேனைக்கடலோடெழுந்தானென்னலென்றும். 36

உலகம்புரக்குஞ்சுயோதனமன்னுறமுனெம்முனுணருமுன்
கலகம்வருமுனிடையூறுகாணுமுன்னர்கரந்தொழிவாய்
திலகநுதன்மேலார்வமினித்தீர்வாயெனச்செப்பலுமதுகேட்
டிலகுமொழிநாப்பதறவெடுத்திசைக்கும்விசயமெதிரில்லான். 37

குட்டைக்கலப்பைப்படையானைக்குருடன்மகனையறியேனோ
தொட்டுக்கணையான்விடுமளவேதோன்றமவர்தம்பேராண்மை
நட்டகுரவர்நினக்கஞ்சிவறிதிங்கிருந்தானானல்லால்
மட்டுக்குழலைவலித்தேகமற்றோர்க்கஞ்சிவலியற்றோ. 38

இன்றுநடநின்மனப்படியென்றெனக்குன்கருணைசிறிதருளிப்
பின்றைவிசயனடத்துவினைபெட்பொடுணர்தியெனப்பேசா
நின்றவொருவற்புல்லியகம்நீநொந்தயரேலெனமுன்னங்
குன்றங்கவித்துக்கோப்புரக்குங்கோமானிதனைக்கூறமால். 39

கன்னற்சிதைக்குமுறைதனினின்கருத்தோர்ந்தவப்பவிதுகாறு
மின்னநுவன்றேமிதுநிற்கயாதேநினக்காகாவெனவு
மின்னுமிரண்டுபொருள்படநிற்காகாவென்றெனுளம்பனிப்பப்
பன்னறகவோவெனவதற்கெம்பரமனைத்துப்பணித்திடுமால். 40

[அருச்சுனனுக்கு நானைமணமுடிப்பலென வுறுதிகூறிக் கண்ணன்
றனதிடஞ் செல்லல்.]

கருமாமுகிலையூர்தியாக்கானுமகவான்காதலனே
யிருநாளொன்றுவிகற்பமறவிம்மாமனையிற்சகித்துமனம்
வருநாளிரவின்முடிப்பலிதுமறைவாக்கறிதியெனவழுத்திப்
பெருமானகன்றான்மயிலிடத்தும்பேசித்தனதுபெருங்கோயில். 41

சம்பாடணைச்சருக்க முற்றும்.

(ஆக சருக்கம் - 25க்கு கவிகள்-1231.)



## (26 - ஆவது சுபத்திரை விரகச்சருக்கம்.)

இச்சருக்கத்தால் சுபத்திரை விரகதாபக்காட்சியைக் கூறப்படுகின்றது.

குந்திநந்தனன்வலிகுனித்தகையெனு
மைந்தலைநாகம்வந்தாடித்தீண்டவே
வந்தெழுவிடமெனமையலோங்கித்தன்
சிந்தைநொந்தாயிழைதியங்கினாளரோ. 1

நீக்கினள்வளையொடுநீவியத்திணை
வீக்கியவட்டுடைவாங்கிவீசினா
ளேக்கியவணிகலன்பறித்துத்தூவினாள்
போக்கினானொடுபுதியபூவெலாம். 2

கண்டனரொண்டொடிகாமக்காட்சியைத்
தொண்டைவாய்ச்சிலதியர்துளங்கித்தோமறக்
கொண்டொருமெல்லணைகொதிப்பச்சேர்த்தினா
ரண்டியவிரகவெங்கனலினாலரோ. 3

பூங்குறடுரிஞ்சுபூந்தேய்வைபூசினார்
தூங்கியகுளிர்பனித்தோயந்தூவினார்
வாங்கொருசிவிறிகான்மலியவீசினா
ராங்கிருமருங்கினுமடிமைமாதரார். 4

பூச்சியமனன்விடுபூவம்பான்மிக
மூச்செறிந்தணைமிசைமூளக்காமத்தீப்
பேச்சறக்கிடந்தமின்மீத்தழற்பெயு
மாச்சியமேயெனலாயிற்றஃதெலாம். 5

அங்குமீனவன்மகட்கலக்கண்டந்தலா
லிங்கிவட்கும்பிடரிழைத்துநிற்குமிப்
பங்குனன்முகமினிப்பார்த்தறீதெனாச்
செங்கதிர்மறைந்தெனச்சிந்துமூழ்கினான். 6

தோகைதன்மெய்யெனமாலைதோன்றின
வாகமொத்திருட்டொகையகன்றுபம்பின
போகிநந்தனன்மிசைப்புரண்டபுந்திபோன்
மாகமீதெழுந்தொளிவளர்ந்ததிங்களே.

தென்றலுநெருங்கின திங்கள்வெண்குடை
வென்றிகொளைங்கணையனங்கவேள்வர
வன்றிலுங்குயில்களுமார்ப்பவத்ததி
துன்றியகடலொலிதோகைநையவே. 8

தீவினை துய்ப்பவர்பான்முன்செய்வினை
யாவும்வந்தெனவெலாமேவவேந்திழை
தாவியவுலண்டெனத்தழலிற்றுள்ளியே
யாவிநொந்தரற்றினாளிவைசொற்றாளரோ. 9

இதயமீதெழுதியாணிருந்தநண்பநீ
யுதயமாகியுமெதிருரப்பிநின்றவிம்
மதனெனுங்கருப்புவின்மலரம்பாளியை
வதைசெயாதிருக்கினென்வில்லின்வன்மையே. 10

தாவுறப்பின்னடிதந்துநிற்றலென்
வாவெனைச்சேரெனமலர்க்கைகூப்பியே
காவிகாம்பரம்பெறுங்காதலன்னொ
மெவியசெக்கரைநோக்கிவிள்ளுமால். 11

கழிபெருங்காதல்கூர்கன்னியம்பையைத்
தழுவலாதிகழ்ந்தவுன்றந்தைதந்தைபோன்
மொழிதருமென்மிசைமோகமுற்றிலாய்
வழிவழிமுறைமைகொண்டனைகொன்மன்னனே. 12

கருவுயிர்த்திட்டதாய்கனலவோடினாள்
பிரிவினைச்செய்தனள்பிறக்கச்செய்ததாய்
குருவெனவிடம்பணிகோலக்கோரகாய்
சரணினக்கெதிர்ந்திடேற்சாவக்கூவியே. 13

மன்றலுக்குரியநன்மணமகன்றனைத்
துன்றியுந்தோய்கிலாடுயரத்தாழ்ந்தன
ளென்றெனையறிகிலாதினைபிரிந்திடா
வன்றில்காளரற்றியென்னாவிதீய்க்கலீர். 14

சங்கையின்மொழிதரினடுவென்றத்தைகா
ளுங்கடம்பிறைவனெம்மண்ணலார்தியாந்
தங்குவெங்கோவலிசாற்றுவீரெனி
லங்கசன்றனக்கிவணப்பனாகுமால். 15

ஒருவனன்றகலிலகநிறையுறிஞ்சினன்
வருநரனென்னிறைமதியைவாரினன்
உருவிலானுயிரையேகவரவுற்றனன்
கருநிறமேனியர்கள்வரோகொலாம். 16

அரவலவொளிர்வமெய்யாரமாகுமாற்
றிருநுதற்கண்ணலதீட்டுஞ்சிந்துரங்
கருநிறக்களனலநானங்காண்டியா
னரனலவடல்செயற்கனங்கமன்னனே. 17

உணர்ந்தவருறவினையுற்றிலாமையான்
மணந்தவர்க்குலப்பறுமகிழ்ச்சிநல்கியுந்
தணந்தவர்க்களப்பறுந்தளர்ச்சியேதர
விணைந்தவேள்சிறியனென்றிகழுவேண்டுமால். 18

நிறைமதியெனவரவேந்துநீணிலத்
தறிஞர்களறைவதென்னறிகிலேனனற்
பொறியுமிழ்நிலவெறிந்தெனைப்புழுக்கிய
குறைமதியாகுமிக்குமுதநண்பனே. 19

நிழல்விரித்திலங்குதனிகரிலத்திரி
விழிவருந்தன்மையினுமிவ்வெண்மதி
யழலிறைத்தென்மிசையலக்கண்செய்குவ
தழன்முகத்துதித்திடுந்தகவினுகுமால். 20

முன்னமங்கைையராற்சாபமூளவே
யுன்னருங்கலையெலாமொழிந்ததீமதி
பின்னொருதேவனுலுயரப்பெற்றநிற்
கின்னமுநன்மதியேன்வாராவரோ. 21

வீசிமகீரினின்விரித்தபோதினிற்
பூசியகலவையிற்புழுங்கிப்பொய்யுட
லாசுறவழற்படுமன்னம்போன்மெலிந்
தேசினணீங்கலாவிகுளமாரையே. 22

இன்னனபற்பலபன்னியேந்திழை
பொன்னணைமிசையொருபூவைபோன்மெனத்
தன்னினைவழிந்துமெய்சாம்பினளரோ
கன்னியர்விடிவெதிர்நோக்கிக்காக்கவே. 23

பூவலஞ்செய்தமன்பொலிபொற்பூணினய்
தீவலஞ்செய்துணைச்செங்கைபற்றுமென்
ரூவலஞ்செய்தவட்கன்பிற்சொல்வபோற்
சேவலங்கார்ப்பக்கீட்டிசைகிழிந்தவே. 24

செச்சைகொள்மெய்ப்பலதேவன்காண்குறு
திச்சைகொள்வதுவையெங்ஙனமியற்றுமா
லச்சுதன்றந்திரமறிகுவாமென
நச்சினன்வந்தெனவிரவிநண்ணினன். 25

வறுமையுஞ்செல்வமுமாறிமாறிவந்
துறுமெனுமறிஞர்சொலோங்கமாலைவாய்
மறுகியபங்கயமலர்ந்தெழுந்தன
குறுகிபமலர்ந்திடுங்குமுதராசியே. 26

வேறு.

[பலராமன்முதலோர் தீவுக்குச்செல்லுதல்.]

வந்தனன்சவிதாவிரிவான்மிசை
யிந்துநொந்தொளியிற்றுடனேதா
சிந்தைநைந்தசுபத்திரைச்சேயிழை
நந்துதன்னினைவுற்றுநலம்பெற. 27

அந்தமாநகருக்கருகாயொரு
சிந்துசூழ்ச்சிறுதீவிற்றிகழ்தரு
மிந்துவேணிவிழாவிற்றையாமென
வந்துமாமுரசெற்றினர்வள்ளுவர். 28

அங்கதன்றறியாடவரையிடைக்
கொங்கெழுங்குழற்கோதையர்கோநக
ரெங்குநல்லணிபோதவியற்றினர்
துங்கவிந்திரன்றொல்புரிதோற்கவே. 29

சூடினர்பலபூடணந்தூய்மலர்
நாடினர்பலநன்மணவர்க்கமுங்
கூடினர்பலகோதையராடவர்
ஆடினர்பலவாடல்களன்றரோ. 30

வீரர்தேர்பரிதும்பியிடைதரக்
கூரவேன்மன்னர்கோநகர்மாக்கடம்
நாரிநற்கிளைநட்பினர்நாடுற
யாருமெய்தினர்தீவெதிரென்பவே. 31

வெள்ளவேணிவிழாவணிகாண்குபு
தள்ளருங்கிளைதற்புடைசூழ்வரக்
கள்ளமாயன்கலந்துகளித்தற
வெள்ளையெண்ணலுமேவினன்றீவரோ. 32

அங்கியற்றுங்கருமங்களாற்றினர்
சங்கவண்ணனுஞ்சாமளவண்ணனும்
பொங்குபற்பலமாதர்புமான்களுந்
தங்கியன்றவணின்றனர்தாமரோ. 33

சுபத்திரைவிரகச்சருக்க முற்றும்.

(ஆக சருக்கம்-26-க்கு கவிகள் - 1264.)

---

## [27-ஆவது சுபத்திரை திருமணச் சருக்கம்.]

இச்சருக்கத்தால் அருச்சுனன் சுபத்திரைக்கு விவாகஞ் செய்தலைக் கூறுகின்றது.

[இதுமுதல் 5-கவிகள், மாலைக்காலவருணனை.]

மறைத்திம்மன்றல்செய்திடவரிமதித்தனன்போலும்
நறைத்தமென்றுணரோதியும்நரனும்வெம்மையல்
நிறைத்துநிற்கயாம்நிற்பதோலவெனநிழலைக்
குறைத்துவெங்கதிர்மறைந்தெனமறைந்தனன்குடபால். 1

மேம்புகட்டனஞ்செயன்புயமெல்லிமேவிடுமுன்
யாம்புணர்ந்திடற்கிதொருசந்தியென்றெண்ணி
வாம்பல்வாய்மலர்ந்திதம்புகன்றந்திபாமரிவை
கூம்புதாமரைக்கைகுவித்துற்றபோற்குலவும். 2

மேயமன்றலுக்கெடுப்பவரில்லெனவிழைந்து
காயமங்கைகையேந்துநீராஞ்சனங்கடுப்ப
மாயவந்தணன்வகுத்தவாகுதியெரிமானத்
தூயசெந்நிறத்தொளிகெழத்தோன்றியசெக்கர். 3

வானிறுத்தியமன்றலங்காவணம்வயங்க
நீனிறத்தவிதானமேனிரப்பிமற்றதனிற்
பானிறத்தமுத்தொடுமணிபலபரப்பியபோற்
றூனிருட்டொகைப்பரப்பினுட்டாரகைமலிந்த. 4

எங்கணாயகனொடுவருமேந்திழையுடனத்
திங்கண்மாமரபோந்தலுமாகுதித்தீமுன்
செங்கையாலினிச்சிதறுவெண்பொறிதனைச்சிவணப்
பொங்குசெக்கர்வான்மீப்பலதாரகைபொலியும். 5

[இதுமுதல் 3-கவிகள், சந்திரோதய வருணனை.]

செங்கண்மான்மறைத்தியற்றுபுசிந்தைசெய்குவதால்
நங்குலத்திலோர்குழவியுமில்லைநாமெனும்
பங்குனன்மணம்பயன்பெறப்படருதுமென்னாத்
திங்கள்வேந்தெழுந்தெனக்கடன்முரசெழத்திகழ்ந்தான். 6

நந்தலில்விளக்கின்றியோர்மணவினைநடத்த
லந்தமன்றுநம்மரபினுக்கிழுக்கொளியமைக்கச்
சிந்தியான்கரந்தியற்றலாலரியெனச்சிந்தித்
திந்துதானொருதீபமாயெழுந்தபோலிலங்கும். 7

சித்தசற்கொருமாமிதன்கடிமணஞ்சிறப்ப
வைத்தபூரணகலசம்போல்வயங்கியமதியம்
பத்தியுற்றெழுந்தொளிகெழுபாலிகைநிகர்ப்ப
வெத்திசைக்குஞ்சந்திரிகையைவீசிநின்றிலங்கும். 8

[கண்ணனை அருச்சுன னினைத்தலு மவன் வருதலும்,]

அன்னகாலைமற்கடக்கொடியசைத்தசந்தனத்தோன்
பன்னுமையல்வெம்பரவையுட்படிந்துடல்பதைத்துச்
சொன்னமாறனைநினைப்பவக்கணத்தவண்டொக்கான்
முன்னமோதியமறைகளுமுணர்கலாமுதல்வன். 9

[கண்ண னிந்திரனை நினைக்க வவன் வருதல்.]

வந்தவன்றளிர்மலிந்தகற்பகத்திறைவரத்தன்
சிந்தைசெய்யவஃதறிந்தவன்றேவியுந்தானுந்
தந்தமீரிரண்டொருகைவெண்டந்தியையூர்ந்து
சிந்துகூடுவரைப்பதியொல்லையிற்சேர்ந்தான். 10

எதிர்ந்தவச்சிரத்தண்ணலையிருபுயந்தழுவி
முதிர்ந்தகேண்மைகொண்டெம்பரனிகழ்வனமொழிந்தா
னுதிர்ந்தநோயினனுவப்பொடுவிசயன்றனுவ்வி
பணிந்துநின்றனனத்தனம்மனைமலர்ப்பதத்தின். 11

உறைந்தகான்மிசைமைந்தனையெடுத்துவணைக்கோச்
சிறந்தவன்பொடுந்தழுவினனிறைமதிசிந்தை
யறந்தவாதவம்மையுமெடுத்தணைத்தனளன்று
பிறந்தசேய்தழூஉந்தன்மையிற்பெட்புடனன்றே. 12

அன்னபோழ்தினச்சுதன்சொலாலவ்விடையனுங்
கன்னறேன்சுதைகைப்பித்தமொழிமின்கைகூப்ப
மன்னுசஞ்சரிகத்தொடைவாகுவாசவற்குப்
பன்னியங்கவட்டமுவினளாசியும்பகர்ந்தே. 13

[இந்திராணி வதூவரர்களை யலங்கரித்தல்.]

சுந்தரஞ்செறிந்துலகெலாமணியொளிசொலிப்ப
தந்தரத்தினுமருமையாந்தரத்தணிகலனை
வந்ததன்மருகிக்குமுன்வணங்குமைந்தனுக்குஞ்
சந்துமென்முலைகமழுமச்சசிதரித்தனளால். 14

[இந்திரன் மயனை நினைக்க வவன் வருதல்.]

நேயமாமயன்வரச்சசிக்கொருபதிநினைப்ப
வாயபோழ்தின்வந்தவன்பணியென்கொலென்றறையத்
தூயவிட்புலத்தில்லெனுங்கவின்கொடுதோன்ற
மாயமண்டபமொன்றிவண்வரநனிவகுப்பாய். 15

[கல்யாணமண்டபம் நிருமித்தல்.]

என்றுகோபதிபணித்தசொன்முடிவமுன்னிழைத்தான்
றன்றுமாமணித்தொகைமலிந்தாடகந்தூர்த்த
தொன்றலாதபல்வினைசெய்விதானமுற்றுளிர்வ
தென்றிசைப்பதலாலதனிலைசொல்வாரெவரே. 16

வதுவைமண்டபம்நோக்குமெம்மாலொடுமாலு
மதிவியப்பொடத்தபதியைப்புகழ்ந்தனரவனுந்
துதிவகுத்தவர்விடைகொடுபொன்னகர்தொக்கான்
விதியினன்மணச்சடங்குசெய்வான்மிகவிழைந்தார். 17

[மணச்சடங்கு செய்தல்.]

நங்கைநம்பியையாட்டிநீருடையிடைநாட்டிப்
பொங்குதேமலர்த்தொடைபலவணிபெறப்புனைந்து
சங்கரன்சிவைபுறழ்வுறக்கண்ணெச்சிறவிர்த்துத்
துங்கமாமணத்தவிசிடையிருத்தினர்துலங்க. 18

[கண்ணன் வசிட்டனை நினைக்க அவனெதிர்தல்.]

ஆயபோழ்தினுத்தரத்துமீனன்பனையமலன்
நேயமோடுறமுன்னவக்கணத்தவனேர்ந்தான்
மேயபற்பலமுனிக்குழாத்தொடுவிபுலைக்கட்
டேயகற்பினுக்குவமையாந்தோகையுந்தொடர. 19

[வசிட்ட ஞதநீ செய்தல்.]

வந்தமாமுனிதனையிருமாலுநேர்வணங்கிச்
சிந்தையோடெதிர்துதித்தருங்கடன்முறைசெய்தே
யிந்தமன்றலுக்கழல்வினையியற்றுதிரெனவே
யந்தமாதவன்மறைவிதியாகுதிவகுத்தான். 20

[தாரா தத்தஞ் செய்தல்.]

அன்னபோழ்தினைச்சுதன்மணத்தவிசெதிரணுகி
யென்னுடற்பிறப்பிவளைப்பூச்சான்றதாயீங்தேன்
மன்னிவாழ்குதிர்மண்பொருள்போன்மெனவழுத்திச்
சொன்னவிந்திரன்சுதன்பெறத்தாரைநீர்சொரிந்தான். 21

துந்துமிக்குலமுழங்கினசுரிமுகமொலித்த
வந்தரத்தவர்சொரிமலராசியுமணுக
மந்திரத்துடன்மறையவரக்கதைமாரி
சிந்தினன்றனர்வசிட்டனும்விதியெலாஞ்செய்தான். 22

பங்குனன்சுபத்திரைக்கரம்பிடித்துளப்பரிவோ
டங்கிசூழ்வலம்வந்துவெண்பொரியதினிறைத்தே
செங்கொலம்மியைச்சேயிழைமிதித்தபின்றிகழுங்
துங்கமாதருந்ததிபதமுறைமையிற்றொழுதார். 23

மன்னுமாமுனிக்கணத்தினைவாசவன்சசியைப்
பன்னுதேவகியம்மனைக்கண்ணனைப்பணிந்தே
மன்னர்மிக்குவந்தருளுநல்லாசியைப்பெற்றுச்
சொன்னதம்பதியிருவருமொருமனைதொக்கார். 24

[முனிவருமிந்திரனுந்தமதிடஞ்செல்லல்.]

விதிக்குமைந்தனுமுனிவருமாசிகள்விளம்பி
மதிக்குமால்துதிபெற்றுளமகிழ்ந்துபின்றத்தம்
பதிக்குவந்தனர்பான்மொழிச்சசியொடுபதியும்
புதுக்குமண்டபத்தோடுந்தம்பொன்னகர்புகுந்தார். 25

உந்துசாயகவில்லியுமெல்லியுமுணரத்
தந்துசின்மொழிதாழ்குழற்றூதியர்தமக்கும்
வந்துமீளவுஞ்சதியொடுந்தீவிடைவதிந்தா
னிந்தவண்டமுற்றயின்றுமிழ்மாயையெம்மிறைவன். 26

சுபத்திரைதிருமணச்சருக்க முற்றும்.

(ஆக சருக்கம்-27க்கு கவிகள் - 1290.)

## (28-ஆவது-தேவகி மகட்கிதஞ்செப்பிய சருக்கம்.)



இச்சருக்கத்தால், தேவகியுஞ் சுபத்திரையும் பிரிவுறற்குத் துயரங் கூர்தலும், பின் தேவகியம்மன் சுபத்திரைக்கு யில்லறநீதிகூறி கணவனுடனனுப்புதலும் கூறப்படுகின்றன.

[காம வின்பம் நுகர்தல்.]

விட்டுமாலினைவிடாதுமாலினைமிகவிைழவோ
டிட்டபோகமுற்றிரதிசித்தசனெனவிணைந்து
தொட்டுமெல்லணைகலவியும்புலவியுந்தோற்றி
மட்டுவார்குழலுங்கிரீடியுஞ்சுகமலிந்தார். 1

[கோழி கூவுதல்.]

கட்டுவம்பெதிர்முட்டுவெங்கனதனமயிலோ
டொட்டலர்க்குருவகைநரவொல்லைநும்பதிசெல்
முட்டநின்கருமஞ்செயஞ்செயமெனமுரட்டோட்
கொட்டியார்த்தெனவிறகடித்தொலித்தனகோழி. 2

படியதிர்ந்திடக்கூவுமப்பறவைசொற்கேட்டே
கடிதெழுந்தணிதிருத்திமெய்கலையிடைதழுவி [போல்
முடைகொள்வெண்ணெய்வாய்முகுந்தன்முன்மொழிந்திடுமொழி
விடிவமுன்னரினேகுவான்மினனெடுவீரன். 3

விரிமணிக்குழாம்விரவுசெந்தாதுகூவிரத்திற்
கருதுமைங்கதிபெறவலவன்கருத்திற்போம்
பரிதெரிந்திணைத்தொல்லையிற்பாவைமுன்கொணர்ந்தான்
றுருபதேயனைத்தேரிடைப்பிணித்தவோர்சூரன். 4

[தேவகி மகளைப் பிரியச்சகிக்காது வருந்தல்.]

படியளந்தவன்றனைத்தரும்பாவைமுன்றூழ்ந்து
பொடியள்போய்வருவேனன்னுயெனக்கணீர்பொழிய
நெடிதுவிம்மிநின்றிடுமினைநேயமோடெடுத்துக்
கடிதணைத்துக்கண்கலுழ்ந்தனள்கன்றெருவான்போல். 5

ஏசறுங்கலத்தடிசிலேச்சிதறியின்குதலை
பேசியன்றெமைமயக்கிமென்னடைபெயர்பிரியாய்
நேசமின்மைபோற்பிரியவுநேர்ந்ததேயின்று
வாசவிக்கொருமனைவியாயெம்மைமீமறந்து. 6

பாவநோக்கலாதென்மகாரறுவரும்பதைக்க
வாவிநீக்கினான்கொடியன்பின்னளித்தவச்சுதனைப்
பாவியான்வளர்த்தின்சொல்கேட்குறும்பயனற்றேன்
பூவைநீயலாலமுதச்சொல்புகட்டினாருண்டோ. 7

பையமாமணியினம்பிரித்தெடுத்துயான்பாப்பக்
கையினாற்கலைத்திடவருமுனைக்கையாற்றடுப்ப
நையவெற்புடைத்தாளெனவன்றுபோய்நவிலு
மையனுக்கொருசொற்சொலாதகலநேர்ந்ததுவே. 8

நேசமாதரைநோக்கியும்நின்பெயரொடுத்துப்
பேசுங்கிள்ளையைநோக்கியும்பிரிவறவாடு
மூசனோக்கியுமோவியநோக்கியுமுருகி
மாசுறற்கினியாயினேனெனதுகண்மணியே. 9

[இதுமுதல்-10-கவிகள், தாய் மகட்கு நீதி கூறுதல்.]

இன்னபன்னிநின்றிரங்குமாபொடுமிகவிரங்கு
மின்னுதிர்த்தகண்முத்தைமுன்றானையால்விலக்கி
யன்னைதன்மனைசதமலபெண்மகார்க்கமேழலென்
அன்னமேயெனத்தேற்றிப்பின்னம்மையீதறைவாள். 10

வன்பறத்தனிமென்சொலேவழங்கித்தன்மகுணன்
முன்பிறந்தவர்குருவெனப்பிதாவெனமுன்னிப்
பின்பிறந்தவர்பிறப்பெனமகவெனப்பேணி
யன்பொடுநிதம்நல்விருந்தெதிர்ந்துகொண்டாற்றி. 11

வறுமையெய்தினுந்தாயகத்தடிக்கடிவாராமற்
சிறியறென்னினுமாடவர்க்கொதுங்கிச்செய்கருமம்
வெறுமையில்வயினென்னினும்வேற்றகமேவா
திறினுங்கற்பறாத்தன்மையினாற்குணத்திலங்கி. 12

மஞ்சமீதினிலன்பனைவேசிபோன்மருவிக்
கொஞ்சியோதனமுயிர்த்திடுங்கோதையினூட்டி
யஞ்சித்தாசியிற்பணித்தசெய்தடிவருடிப்பின்
றஞ்சிமுன்னெழுந்திரவிமுன்கமலம்போற்றுலங்கி. 13

படர்தல்பத்தடிக்குட்படப்பார்வைபார்மிசைமென்
நடைபயின்றுநல்விழவிற்கும்நாயகனன்றி
யடைதனீத்தவனில்பொழுதணிசெயலகற்றி
மிடைதலற்றுவேற்றாயம்வம்பளத்தலும்விட்டே. 14

மாத்திரைக்கொருநினைவுகொள்மாற்றவளொடுந்தம்
நாத்தியோடுநன்களவளாய்நாயகற்கிசைந்த
கூத்திமீதினுங்கொதித்தலற்றினியவைகுயிற்றி
யேத்தியான்றவர்க்காணுமுன்னெழுந்தடியிறைஞ்சி. 15

விதித்தகொண்கனையன்றிவேள்வரினும்வெவ்விடம்போற்
கொதித்தகற்றியேவலரிடத்தினுஞ்சினங்கொள்ளா
துதித்தமாமதிபோன்றிரப்போர்க்களித்துறுதி
மதித்துநாயகற்கமைச்செனமந்திரம்வழங்கி. 16

மாமன்மாமியைத்தங்குலதெய்வமாய்வணங்கிப்
பூமினுதனிற்கொழுநனைப்போற்றியேவாழ்தல்
நேமிவைப்பினிற்பிறப்புளமாதர்கணெறிய
தாமிதற்குமாறினவரேநமனுவார். 17

என்னமேலவரிசைப்பனகடைப்பிடித்தென்றும்
நின்னைவேட்டவன்மொழிக்குமாறுரைக்குதனீத்து
மன்னுமில்லறம்நடைபெறமாசறவாழ்தி
சொன்னவோரிருகுடிக்குமோர்விளக்கதாய்த்துலங்கி. 18

என்றுபுல்லிநன்குச்சிமோந்தெனதுகண்மணியே
சென்றுநாயகனொடுமிகச்சீர்கெழுவாழ்ந்தே
நன்றுநீவாழ்பாலதென்றுசிகணவின்றாள்
என்றுந்தாயின்மிக்கன்பினரிப்புவியுளரோ. 19

[தாயின் மகிமை கூறல்.]

ஈயெறும்பணுகாவகைகாத்தெதிர்நோய்க்குப்
பாயனீத்துவெம்பசியொறுத்தைப்பரிகரித்து
வாயினுங்குபண்டமுமெடுத்தன்பொடுவழங்குந்
தாயின்மிக்கவோர்கோவிலுமில்லெனறகுமால். 20

வந்துமுன்பணிமருகனுக்காசியும்விடையுந்
தந்துவப்பொடுங்காத்தியெந்தையலையென்று
னிந்தவண்டமோடெண்ணிலவயிற்றடக்கெம்மான்
வந்துதன்வயிற்றடங்குபுதவம்புரிமங்கை. 21

[தாதிய ரிரங்கல்.]

உன்னிவேடிகைப்புறமலாலெழுதொணுவடிவத்
தன்னமேயெமக்காருயிரேகடலமிழ்தே
யின்னும்யார்க்கணிதிருத்தவிங்கிருந்தனமென்னுப்
பொன்னனார்புகன்றிருவிழிநீர்தாரப்பொருமு. 22

[அவளைச் சுபத்திரை தேற்றல்.]

ஒருபகற்பழகினுநலோருயிர்தருமென்பார்
பிரிவறப்பலபகலெனைப்பேணுநம்முறவைத்
தெரிவைமீர்மறந்துய்வென்கொறிகிரியேங்தெம்மு
னரியின்சூழ்ச்சியாலணித்துமைபடைவல்யானென்று. 23

[சுபத்திரையு மருச்சுனனுந் தேரேறுதல்.]

அன்பொடும்பலதாதியர்க்கறைந்தவர்பணிவேற்
றென்பசுங்கிளியினிதுறவளர்த்துதிரென்றோர்
மின்பயோதாத்தொடுமகமேருமேவுவபோற்
பொன்பொதிந்ததேரிற்புருடன்னொடும்புகுந்தாள். 24

தேவகிமகட்கிதஞ்சேப்பியசருக்க முற்றும்.

(ஆக சருக்கம் - 28-க்கு கவிகள் - 1314.)



## (29 - ஆவது போர்புரி சருக்கம்.)



இச்சருக்கத்தால் - அருச்சுனன் சுபத்திரையுடன் போதலை யறிந்த பலராமன் தனது சைனியங்களை யுத்தத்திற்கு ஏவுதலும், அவர்களை செயித்து விசயன் மீளுதலுங் கூறப்படுகின்றன.

[அருச்சுனன் தேரை நடாத்தல்.]

விறலமரப்பொலிகாமமரச்சிலைவெரினமாச்சாகூ
டுறமருமத்தொருகவசமணிப்புயமொளிர்வலயத்திறைவன்
பிறைநுதனித்திலநகைபவளத்திகழ்பெடைமயிலைத்தளிவைத்
தெறியொளிவச்சிரமணிகளழுத்தியவிரதநடத்தினனே. 1

[தாதியர் முறையிட்டுக் கூவுதல்.]

வேகமுறப்பரிதாவிரதத்தினைவீதிதனிற்றிகழ
நாகரிகத்திடவீரனடத்திடநாகமுலைச்சகிமார்
மாகவிறைச்சுதனுவிங்கர்க்குமெமாதுசுபத்திரையைக்
கோகடிதிற்கொடுபோகுமெனத்தனிகூவினரப்பொழுதே. 2

சிகரநெடுங்கிரிநிகிரதந்தருதிடுதிடெனுங்தொனியு
மகளிரினங்கடிதழுதுபுகன்றிடவருதொனியுஞ்செவியுட்
புகவமருந்துயிலகலவெழுந்தனபுரிவளருஞ்சனமங்
நகரிபுரந்திடுமவரொடெதிர்ந்தொருநரனைமுனிந்தனரால். 3

[நகரிகாவல ரருச்சுனனைத் தடுத்தல்.]

முனிவொடுவந்தவர் துனிவொடொதுங்குபுமுனைவிசிகம்பொழியா
வினிதுவருஞ்சுரரிறைமகனிஞ்சிலையெதிரவிருஞ்சமர
முனைபலகண்டிடுவயவரினம்பலமுனிவொடுவந்துருமி
யினிவிடுவஞ்சிலையெனவெதிரம்புகளிகலியெறிந்தனரால். 4

[பலராமன் முதலோர் தீவைவிட்டு வந்தல்.]

ஏவெதிர்விட்டவராவிசிலைதத்திவனேகவிடுக்கிலராய்
மேவிமறித்தெதிர்போர்புரியச்சிலர்மேகமுழக்கிதெனக்
கூவியதிர்த்தனர்பேரியதைச்செவிகோதகலத்தெரியத்
தீவொருவிப்பதிமேவினரப்பலதேவன்முதற்பலரும். 5

[இதுமுதல் - 4-கவிகள், தோழியை விசாரித்தலு மவர்பதில் கூறலும்.]

கலகமறிந்திடுமுசலிசினந்திருகணிலழனின்றெரிய
நிலவொளிருஞ்சடைநிமலனெனும்படிநிகரறநின்றெமினுள்
சிலதிகணம்பலவருகெனவங்கவர்திகிலுறுநெஞ்சொடுகை
கலகலெனுந்தொனிவளைதரவந்தெதிர்கழலில்விழுந்தழுதார். 6

அழுகுவதைத்தெரிகுவனடிநிச்சயமறைதிரெனக்கனறன்
விழிசிதறப்பலமொழிபதறச்சினமிகமுடுகச்சுதன்முன்
கழிதுயரத்தொடுமுலையைமறைத்திருகரமிதழிற்படர
மொழிவரனப்பெடைநடைகதலித்தொடைமுகவனசச்சகிமார். 7

காமியிடைப்படுவேடமயக்கியகாரியைத்தொடுமென்
றியாமனதிற்குறியாதுறையக்கொடியேயுமிடைக்குபிலை
நேமிபுகுத்தொருதேர்மிசைவைத்தவனீளவதைத்தெரிவேஞ்
சாமியிதைத்தெரிவீரெனவுற்றிருதாளிணையைத்தொழுதார். 8

படிவிழுமச்சகியினம்வெருவப்பலபலவுமிசைத்துரறி
யிடுவனுமைச்சிறையவனொடெனக்கணவிருவிழியிற்சிதற
வடிகளெனக்கினிவிடைபகாத்தருமமர்பொருதற்கவனும்
நெடிதகலற்குமுனெனுநிமலற்கலநிருபனிகழ்த்திடுமால். 9

வேறு.

[இதுமுதல் 3 - கவிகள், கண்ணன் கூறல்.]

ஏலங்கட்டியகுழலியைக்கவர்ந்திடயதியாங்
கோலங்கட்டியதறிந்திலைநீயுங்கொலெனுமத்
தாலங்கட்டுதேரவற்கறியேனெனச்சமைய
நீலங்கட்டினனீலமாமேனிகொணிமலன். 10

கன்னியாய்மிகக்கவின்பெறக்கருத்துணர்ந்தொழுகோர்
மின்னைநாடுவதென்கொலென்னறையமுமேவிப்
பின்னர்யானுமேமாறினன்பெட்புறும்பெருமை
மன்னுவேடமேமயக்கமற்றவன்கழல்வணங்கி. 11

எடுத்தவேடமற்றென்னையுமயக்கியவெனினும்
விடுத்திடக்கருத்திசைவிலவேல்விழியிடத்தி
னடுத்தநின்பரிவவன்மிசைவலிதெனவாய்ந்தே
தடுத்திலேனென்றான்றஞ்சமென்றவர்க்கருடமியோன். 12

ஏலமற்றதிற்பிறர்க்கிடரெட்டுணையின்றி
ஞாலமின்புறப்புகல்புகுந்தவர்க்கிதம்நாடிக்
காலமுங்கருமமுமுணர்ந்தறிஞரேகழறுஞ்
சீலமுற்றவோர்பொய்மையுமெய்ம்மைபோற்றிகழும். 13

[சாத்தகி கூறல்.]

பொருளிரண்டுறவவன்பெயரொடுநகர்புகலுங்
கரவுமற்றைநாணுனித்திலம்யாமெனக்கழறித்
தரியலர்க்கரியேறெனுஞ்சாத்தகிசலிப்ப
விரிமலர்த்தொடைக்காமபாலனிவைவிளம்பும். 14

[இதுமுதல் 5 - கவிகள், பலராமன் கூறல்.]

கடையமின்னெனக்களித்திடக்கருத்திலானிவனென்
றிடையரில்வளர்ந்தான்றடுத்திருந்திடும்வெள்ளை
மடையனென்றுமுன்னெனையவன்வைவதற்கேற்ப
வடையும்வஞ்சனைவேடம்யானுனித்தறிந்திலனே. 15

என்னையெள்குநீலாம்பரனென்பதத்தினிற்றன்
சென்னிசேர்த்துநற்பூசனைசெய்தெனக்களித்தான்
மின்னையென்றவனுரைப்பவேந்தினமெலாநகைப்ப
மன்னுநாணெனைவருத்தக்கம்வளைப்பவாயினவே. 16

கோனிரப்புவிற்காளையர்கோடிபேரிருக்க
யானிருக்கநீயிருக்கச்சாத்தகியிருக்கவுநம்
மானையஞ்சலாதொருவன்வந்தேவவ்விப்போமே
லீனமற்றிதன்மேனமக்கியாதுகொலெம்பி. 17

எல்லையற்றவேந்திருந்தபேரவையின்மீனெறிந்தே
வில்லினுக்கிவனெனப்பெறும்வீரன்வன்மையுமென்
மல்லலம்புயவன்மையுங்காட்டிமற்றவனை
யொல்லைவன்சிறைப்படுப்பலிவ்வுலகெலாமுணர. 18

என்றுபற்கறித்திருவிழிகனற்பொறியிறைப்ப
வின்றுபோர்பொரற்கியாவருமெழுமினென்றிசைத்தே
குன்றவில்லியைச்சிவனுமோர்குண்டலனெழுந்தா
னின்றமாயவனவனடிபணிந்திவைநிகழ்த்தும். 19

[இதுமுதல் 2 - கவிகள். கன்னன் கூறல்.]

ஒருகரன்றனேடுலப்பில்பல்படையொடுமிகலிப்
பொருதுவென்றனன்முசலியென்றேநவைபுகலுந்
திரைகடற்புவியிற்றையெஞ்சேவகந்தெரியத்
தருதியிச்சமரொமக்குநிற்கன்னவைதவிர. 20

காண்டியிற்றையக்கரவனேக்கடுஞ்சிறைபடுப்ப
வீண்டைவீற்றிருமெனவிசைப்படுத்தமர்க்கெழுந்தான்
றாண்டுதேர்பரிதோனிறைவயவர்கள்சூழப்
பாண்டவர்க்கொருதூதெனப்பின்வரும்பரமன். 21

[கன்னன் போர்புரிய வருதல்.]

விருதுயர்த்தியதேர்மிசைச்சாத்தகிமேவக்
கிருதபன்பனுமெண்ணிலவயவருங்கெழுமப்
பொருதவந்தபோலித்தனைலீலையும்புரியும்
மருதிடைத்தவழ்ந்தவனொருவையமேல்வந்தான். 22

[சூரியோதயம்.]

மதித்தவெம்படையெழுச்சியுமறுவறத்தனக்கன்
றுதித்தமைந்தனுக்கிளவறன்றனிமையுமுன்னி
விதித்ததேரினைவிசைபெறநடத்திமற்றவர்மேற்
கொதித்துவந்தெனவந்தனன்பகலவன்குணபால். 23

முன்னெழுந்திடுவயவரைவிண்செலமுடுக்கிப்
பொன்னெழுந்திடுந்தேரினைவிரைவொடுபோக்கு
மன்னெழுந்திடக்கண்டவான்பரிதியைவணங்கிப்
பின்னெழுந்திடக்கண்டனன்பேரொலியொன்று. 24

மண்ணெழுந்துகள்பரவச்செந்நிறங்கொள்வான்வழிபோய்ப்
பண்ணெழுப்பரித்தேருயர்வெண்படாம்பரவிப்
புண்ணெழுந்தவிண்ணுடற்புலாலுண்ணுவான்புகுந்த
வெண்ணெழிந்தவெண்பருந்துபோலிலங்குவகண்டான். 25

சூலவாந்தகமெழுமழுத்தோமரம்பிண்டி
பாலம்வேற்கதைபல்படையேந்தினோர்பரவி
நீலமேனியன்மொழிவழிநேடியேதமக்குக்
காலனுந்திறற்காளையைக்கண்டெதிர்வளைந்தார். 26

[சேனைகளைக்கண்டு சுபத்திரை பயமடைதல்.]

அலைநிகர்த்திடுமாத்திமிங்கிலநிகராம்பன்
மலைநிகர்த்திடுசெயந்தனமீனிகர்வயவர்
சலநிதித்திரளுறைக்கினளச்சுதன்றங்கை
விலவிலத்துமெய்விழுந்தனடேர்மிசைவெருண்டே. 27

[2 - கவிகள், சுபத்திரையை விசயன் தேற்றல்.]

விழுந்தவஞ்சியையெடுத்தணைத்தெதிரிலாவிசய
னுழுந்துருண்டிடும்போழ்தின்முன்னிவர்சிரமோட்டிக்
கழுந்ததாக்குவென்காண்டியென்னுண்மைநின்கண்ணன்
மொழிந்தபொற்கிரிவெருண்டிடத்திரண்டெழுமுலையாய். 28

தானைநிற்குமோதழலெதிர்சக்கிரிவனைந்த
பானைநிற்குமோகதையெதிர்பற்பலவெனினு
மானைநிற்குமோகேசரிமுன்னதுபோலச்
சேனைநிற்குமோவென்முனென்றவளுளந்தேற்றி. 29

[சுபத்திரையைச் சாரதியாக்கி அருச்சுனன் யுத்தசன்னத்தனாதல்.]

சற்றுநீவிடுதேரெனச்சாரதியாக்கிப்
பொற்றைவெஞ்சிலைகொண்டுகைகோதையும்பூட்டி
பொற்றையண்டமும்வெடிபடநாணொலியோட்டி
மற்றையண்டமுங்கலங்குபுமுழக்கினன்வளையே. 30

கெட்டொழிந்தனரவ்வொலியாற்பலர்கெடாதார்
துட்டவெங்கினியேகுவதுணிச்சுதுஞ்சிரமென்
றெட்டிநின்றெதிருருத்துவெம்படையெறிந்துடன்றூர்
வட்டவம்புலியாயினநரன்சிந்துவாரம். 31

வேறு.

[இதுமுதல் 5 - கவிகள், யுத்தக்காட்சி.]

குடைபட்டனகொடிபட்டனகுயவுத்தடநிரைகள்
நடைபட்டனகுடர்பட்டனநாகந்துரகதமும்
இடைபட்டனமுடிபட்டனவெதிர்வீரர்தம்வில்லின்
விடுபட்டனதொடைபட்டனவிசயன்விடுகணையால். 32

காலற்றனதலையற்றனகையற்றனகவுளின்
மேலற்றனதோளற்றனவிழியற்றனவிடுவிற்
கோலற்றனகதையற்றனகுணிலற்றனகொடுவெவ்
வேலற்றனவாளற்றனவில்லற்றனவீரர். 33

பரியுக்கனதிரையுக்கனவெனவேபரவோடைக்
கரியுக்கனதிமியுக்கனவெனவேகவினுறுதேர்
நிரையுக்கனவரையுக்கனவெனநேரிகல்வயவர்
தரையுக்கனர்மீனுக்கனவெனவேசலநிதிபோல். 34

உடலாடினமுடியாடினவுரமாடினவுகுவெங்
குடலாடினவடியாடினகுளமாடினவரைநேர்
மிடலாடினபுயமாடினவிழியாடினசிதையக்
கடலாடினகுருதிப்புனல்கழுகாடினகளமே. 35

கண்ணிற்புகுநுதலிற்புகுங்கவுளிற்புகும்விரியும்
புண்ணிற்புகும்வாயிற்புகும்புகும்வாகுவிற்புகுமிம்
மண்ணிற்புகும்பிலனிற்புகுமலையிற்புகுமுவரி
விண்ணிற்புகுமெண்ணிற்புகும்விசயன்சுடுசரமே. 36

வேறு.

[சேனாதிபர் பின்னிடல்.]

வந்தவெம்படையந்தகனம்பதி
மண்டவன்றுணரும்நிகடன்றிரை
சிந்துவந்தெதிருங்கனறன்விழி
சிந்தநின்றழலுங்குவசன்னிவர்
தந்தமம்படைசிந்தினர்வந்தெதிர்
தந்தபங்குனனம்படைவந்துர
முந்தமம்புயமும்படநொந்தன
ருய்ந்துபின்றினர்தஞ்சிலைசிந்தியே. 37

வேறு.

[கிருதபன்மன் யுத்தத்திற்கு வருதல்.]

அதுபொழுதுந்தினன்மேருவுஞ்சிறிதென
வகலிரதந்தனையாதிமண்டலமுறக்
கதிபலதந்தனன்கோலியஞ்சிலையெதிர்
கணைபலசிந்தினன்மாரியுஞ்சிறிதென
மதிகுலம்வந்தவரோதயன்புயமிசை
வருகதிமுந்துசுவேதவப்பரிமிசை
நுதியுலவைங்கணையேபடும்படியொரு
நொடியினுடன்றனனேவருங்கிருதனே. 38

வேறு.

[கிருதபன்மன் பின்னிடுதல்.]

நிலைபெற்றவிசயமனனெதிருற்றகணைபலவுநிமிடத்தகற்றியிகலி
யுலைபெற்றசுடுபகழியொருபத்துவிடவவனதூணைப்புயத்தையுருவித்
தொலைவுற்றுதிரமொழுகவணிமெய்க்கவசமெதிருதுரகக்கழுத்திடறின
சிலையற்றகடவுமிரதமுமற்றவலவனுடல்சிதையத்தனித்தனனரோ. 39

வேறு.

பொருதகிருதனுவெருவொடுபுறனிட
நரனுமரிவையுநகைசெயவதுபொழு
தரியினிளவலுமளவறுபடைஞரை
யெரியுமனதொடுமெதிருறமுடுகவே. 40

வேறு.

முடுகிடமேன்மேலுருத்துமேவியமூறுவலிலாவோர்முகத்துவீரர்க
ளடகெடுவாய்நீபருச்சுனுசிறிதறிவுமிலாதேயியற்றினுயினி
விடுவிடுமானேர்விழிக்குமாரியைவிடுகிலையேனுவடுக்குமாலென
தொடைபடுமாகூர்சரக்குழூஉபலதொடுநானேரேயுரப்பினனரோ. 41

வேறு.

அதிர்த்தெதிர்ந்தவரரியுலகெமனுலகடுத்துநின்றிடவிவுளிகளரிபல
மதத்தவெங்கரிபொடிபடவடுகளமடுத்திலங்கிடவுதிரமுவரியென
குதித்துவந்திடவலகைபவுரிகொடுகுறைக்கவந்தமுமெதிரெதிர்நடமிட
வுதித்தவங்கிபகழிபலவொருநொடியுகைத்துடன்றனனொருசிலைவிசயனே

வேறு.

நாரிதுன்றுநரன்கணை, மாரிதுன்றமடிந்தவர்
காரிதுன்றியகன்றகல், லூருதுன்றியுவந்தனர். 43

வேறு.

உற்றவராவியுலந்தார்பின், னுற்றவர்மானமுலந்தார்முன்
னுற்றவர்வீடுமுகந்தார்பின், னுற்றவர்யாவுமுலந்தார்முன். 44

வேறு.

கரிகளொழிந்தகலந்த, பரிகளொழிந்தபரந்த
வரிகளொழிந்தவகன்ற, குருதிமிதந்தகுழைந்த. 45

குடைகளொடிந்துகுவிந்த, கொடிகளறுந்துகுறைந்த
படைகடுணிந்துபரந்த, கடலின்மிடைந்துகலந்த. 46

வேறு.

கட்டிறமாலை, நட்டெதிருற்றார்
கட்டிறமாலை, நட்டெதிருற்றார். 47

நேருகைதாரை, பேரிகளற்ற
நேருகைதாரை, பேரிகலற்ற, 48

வேறு.

[இதுமுதல் 8 கவிகள், யுத்தக்காட்சியை சாத்தகி நோக்குதல்.]

ஊனமர்ந்திடுநரன்சரத்தொருநொடிப்பொழுதின்
வானமர்ந்திடுவயவரைத்தேர்கரிமாவைக்
கானமர்ந்திடுந்தார்ப்புயச்சாத்தகிகண்டான்
றூனமர்ந்திடுமொருதனித்தேரொடுந்தனித்தே. 40

புற்றினீசலினரன்கணைபுறப்படனோக்கும்
வெற்றிவீரர்களழிந்தமர்வென்னிடனோக்கும்
அற்றதஞ்சிரக்கவந்தநின்றுடுவநோக்கு
மொற்றைவாளியாயிரந்தலையுருட்டுதனோக்கும். 50

சோணைமாரியிற்படுங்கணைவீரர்மெய்துளைகொள்
பாணையிற்சொரிகுருதியின்பரப்பினைப்பார்க்கும்
வானும்வையமும்புகழ்ந்திடவாம்பரிநடத்தி
மீனைவென்றகண்டேர்விடல்வியப்பொடுநோக்கும். 51

நில்லுநில்லெனவயவர்களுராப்பிநேர்நிகழ்த்துஞ்
சொல்லின்முன்னவர்தலைகணைதுமித்தலைநோக்கும்
வில்லிழந்துதந்தேரிழந்திழக்கலாவீரச்
சொல்லிழந்துகாவெனத்தொழுஞ்சூரரைநோக்கும். 52

சிவந்தகண்டெழிப்புறுஞ்சினச்சிரம்படக்குறைந்த
கவந்தமந்நரன்மிசைவிடுங்கணையினைநோக்கு
முவந்துசோகினந்துணங்கைகொண்டெங்கணுமுலவக்
குவிந்துநின்றவெம்பிணப்பெருங்குன்றினைநோக்கும். 53

உற்கையொக்கும்வெங்கணற்சரமோடிவந்துகளக்
கற்கிதோலர்முருக்கினிற்கனலுவகானும்
சற்பநுங்கநின்றிடுமரைமதியெனத்தயங்கி
விற்பிடிப்பொடுந்துணிந்தகைவிளங்குதனோக்கும். 54

வீழும்வெஞ்சரங்கண்டுளம்வெருவிமெய்நடுங்கித்
தாழுவெம்பிணக்குவையினுட்டங்கிமெய்திறந்த
பாழியுட்புகும்வயவரைப்பார்க்குந்தம்வீரர்
நூழிலும்பொருமருச்சுனன்றழிஞ்சியுநோக்கும். 55

அரிந்தமெல்லுறுப்பலங்கலையணிந்துநீராடிச்
சொரிந்தசோரியிற்சம்புசஞ்சோபனஞ்சொல்லப்
பாந்தகங்கரீள்பந்தரிற்பல்பிணக்குவையாம்
விருந்தயின்றுபேயினங்கடிவிளைப்பனநோக்கும். 56

குசைகொள்கற்கியைமறவரைக்கோட்டுவெம்மாவை
யசைவில்தேரினையீர்த்துச்செல்குருகிரோற்றின்
விசையைநோக்கும்பின்றமக்கிருவிதத்தினும்விளைந்த
வசையைநோக்குமாற்றலன்புயமலையினைநோக்கும். 57

[இதுமுதல் 11 கவிகள், அருச்சுன சாத்தகி சம்வாதம்.]

கண்டுவெஞ்சினமுடுகவெண்பற்கறகறத்துக்
கொண்டுதேர்விசைபெறவிடுத்தவனெதிர்குறுகித்
துண்டவொண்மதிநுதலியைத்தொட்டநின்பாணி
கண்டமாமதுநினைக்கிலன்யானெனக்கழறும். 58

வனப்பின்மிக்கவெம்மயிலினைவலிதினின்வவ்வி
நினைப்பரும்படைவீட்டுகின்னெடுபொராதெனக்குத்
தனுப்பயிற்றினைசிறிதெனவித்துணைதாழ்ந்தே
னினிப்பொறுத்திலனேகுதிமின்னைவிட்டென்றான். 59

வென்றிவேற்படைவிதர்ப்பர்கோன்பயந்தமெல்லியலை
யன்றுகொண்டனன்வழக்கறவச்சுதனென்னின்
இன்றுயான்முறைபிறழ்வறக்கொண்டவையிழுக்கோ
கன்றிநீரிதற்கமர்செயவருதலுங்கருத்தோ. 60

உனதுநெஞ்சின்வேறெண்ணறநோக்கியொண்டொடியை
யெனதுவன்மையால்யான்வலித்தென்பவுமிவடான்
மனதுவந்துவந்தென்பவும்நீமதித்துணர்வாய்
புனிதவாடிநாடுவதென்கைப்புண்ணறிவதற்கே. 61

மீண்டுபோதலேநலனெனநரன்மிழற்றலும்நீ
யீண்டிசைப்பதோர்விதத்தியைபென்னினுமிம்மெய்
மாண்டுதீர்கினுந்தீர்வதோவசையொடுமானங்
காண்டியஃதின்மாதினைவிடேனென்றவன்கழற. 62

மிடன்மிகுத்தவெம்புலியின்வாய்ப்பட்டவோர்விடக்கை
யடையினும்மிவளினிநமக்கடைகுதலரிதாங்
கடலளித்தமுதத்தொருவன்கைப்பட்டபின்கடறான்
அடையினும்மவன்சேமஞ்செய்யருங்கலத்தன்றோ. 63

வசையெனக்கிலவோவிடின்மாதினையெனவும்
விசயன்கூறமற்றவன்கிளைமுறைவிதிநினையாப்
பசையில்வன்மனக்கரவிற்பாவையையெடுத்து
விசைபெறத்தனித்தேர்விடல்வீரருக்கழகோ. 64

அஞ்சலில்லையேலருமுனிவடிவமைந்திடலென்
இஞ்சிசூழ்துவரைப்பதியாமிலாவேலை
வஞ்சிபோலியையவ்வலென்கங்குலின்வழியென்
உஞ்சுபோவதற்கினிவகையில்லையென்றுரைத்தான். 65

எமக்கருங்கிளையென்றுநெஞ்சிரக்கமுற்றல்லா
லுமக்கிடைந்தலசெய்தநிவ்வாறெனவுரைத்தா
னிமைத்தலற்றுநாணொடுந்துயரொடுமிரும்புவிமீ
தமிழ்த்துநோக்கொடுதேர்விடுஞ்சுபத்திரையன்பன். 66

இரக்கமெம்பிசைவைத்ததுநிற்கநீயினியான்
பரக்கநிற்கிசைக்குவதென்கொலிப்பறந்தலைமுன்
வரக்கலப்பையோன்வருமுனிம்மங்கையைவிடுத்துக்
கரத்தியென்றனன்சாத்தகிபங்குனன்கழறும். 67

மலையையேமதித்துளிமதியாதவன்மதியி
னிலையின்முன்னெனையெள்குநீலாம்பரத்தும்முன்
சிலைவலித்திறங்காண்குபுசென்றுநீவரச்செப்
வலியையல்லையிம்மாணைமீட்குதற்கென்றுவகுத்தான். 68

[இதுமுதல் 8 கவிகள், சாத்தகி அருச்சுனன் யுத்தம்.]

உலையிற்காய்ச்சியவிரும்பினிற்றனஞ்செயனுரைத்த
வலியைநீயலவெனுஞ்சொல்சாத்தகிசெவிமடுப்ப
வுலைபுநாளெழுமழைப்படுமுருமெனவுரற்றிச்
சிலைகுனித்தழற்கணைபலபொழிந்தனன்சினந்து. 69

பின்னவட்கொழுநற்குமுன்பிறந்தவன்றனக்கு
முன்னவட்டான்முறையெனமுன்னியானிருப்ப
நின்னகத்தெனைமுனிகுவைநினக்கடாச்சிறிதம்
மின்னைக்காட்டுவனேச்கெனமிழற்றிவிற்குனித்து. 70

விடுத்தவேவெலாம்விலக்கியவிசயன்மிக்கொன்பான்
றொடுத்துவிட்டனனவனதுதொலைத்துப்பின்றொட்டான்
கடுத்துமுக்கணையவையிடைபடுத்தவிற்காளை
மடுத்தவைங்கணைதடுத்தனன்மாயவனிளவல். 71

இரண்டுபுங்கமங்குகைத்தனனிந்திரன்சிறுவன்
றிரண்டவெம்புயத்தமுந்துபுசினிசுதனதனை
முரண்டவிர்த்துப்பின்சகத்திரகணையெதிர்முடுக்கி
யரண்டிடப்பொருஞ்சாத்தகியருச்சுனனார்த்தான். 72

ஆர்த்தவோதையைநாணிடியேற்றினையளப்பில்
பார்த்தன்வெஞ்சரப்பரப்பினைக்கண்டுளம்பதைத்து
வேர்த்துநங்கையும்வெருவினள்விண்ணவர்திகைத்தார்
கூர்த்தவம்புகொண்டவைவிலக்கினன்சினிகுமரன். 73

விலக்குமுன்சிலபகழிவந்தொன்றிமெய்வெதுப்ப
வலக்கணுற்றவன்கடையெழுஞ்சிவனெனவழன்றே
விலக்கவல்லையேனூர்த்தநீவிலக்கெனவிடுத்தா
னிலக்கமற்றவெங்கனல்பொழிகூர்ங்கணையிமைப்பின். 74

எதிர்ந்தவாசுகம்விண்புவியாவையுமறைத்தே
யதிர்ந்துவந்தகண்டவன்றடுத்தனனெலாமிடையே
யுதிர்ந்திடும்படித்தடைபடாதோடிவந்தொருகோற்
பதிந்தநெற்றியிற்றேர்விடுங்கோதைமெய்பனிப்ப. 75

அஞ்சனீயெனத்தேவியையாற்றிநெஞ்சழன்றோர்
நஞ்சுமிழ்குவெங்கணைகரத்தேந்தினனரனவ்
வஞ்சிகண்டிதுவிடுத்துக்கொல்லேலெனமறித்துஞ்
செஞ்சரம்விடுத்தனன்சினந்தவிர்ந்தவன்சிரித்தே. 76

[சாத்தகி மூர்ச்சையாதல்.]

விட்டசாயகமுலகெலாங்கனற்பொறிவிரித்துத்
தொட்டசாத்தகிபடையெலாந்துகள்படத்துடைத்து
முட்டிமாவிடுவலவனைவில்லினைமுடித்துப்
பட்டமார்பினிலவனயர்ந்திடதமேற்படுத்தான். 77

நிலப்பறந்தலைப்பூட்டையினிறைந்துவந்தடர்ந்த
வுலப்பிருனையெட்டிரளைவில்லுமிழ்சரமத்தாற்
கலக்கித்தேர்கறங்கெனவிடுத்துதிரநெப்காட்டித்
திலப்பகைக்குலவணிகரிற்றிலகனந்ததிர்த்தான். 78

[இதுமுதல் 3-கவிகள், கிருஷ்ணார்ச்சுன யுத்தம்.]

அன்னகாலையினகல்கலையகல்கலையடாவெம்
மின்னுடேகுபுகினைவிடேன்யானெனமிழற்றி
முன்னருற்றனன்பல்படைசூழ்வரமுகுந்தன்
சன்னைசெய்தனன்போர்புரியெனத்தனஞ்செயற்கே. 79

புகுந்தமிக்கபோரினியெனயாவரும்புகல
முகுந்தனத்திரமாரியைமுன்புறப்பொழிந்தா
னுகந்துபார்த்தனுந்தடுத்தனன்கடிகையொன்றுடன்றூர்
திகந்தமுந்தமதிசைசிறுத்தியவிருதிறலோர். 80

காலனத்திரங்காமனம்பழற்கணைகதிரோன்
கோலயன்சரமரன்படைமுதலகைக்கொண்டு
மூலமந்திரந்தன்னுடுவிசைபெறமுடுக்கிச்
சாலவித்தையினிருவருஞ்சமர்செய்தார்பின்னர். 81

[கண்ணன் கபடமூர்ச்சை கொளல்.]

நொடித்தபற்குனன்பகழியானொந்தபோனுடங்கிப்
பிடித்தவில்லொடுந்தேர்மிசையயர்ந்தனன்பெரியோன்
மடித்துவாகினிவந்தனன்வாசவியொல்லை
தொடிக்கரத்தவடேர்விடச்சுரர்மலர்தூவ. 82

[கண்ணனருச்சுனனைத் தேடிவந்து காணுதல்.]

மூடுமம்பகந்திறந்துபின்முகுந்தனவ்விசய
னோடினான்விடுதேரெனவலவனாலோட்டி
நேடிவந்தனன்யோசனைமூன்றினிநேர்ந்தான்
கூடினாரவர்மூவருமோரிடங்குலவி. 83

மன்றல்செய்தெனையழைத்துவந்தமர்செயவந்தே
யென்றிருக்கணைக்கயர்ந்தபோனின்றுபின்னெதிர்ந்தாய்
நின்றனுடலைக்காண்குநர்யாவரேகிமலா
வென்றருச்சுனன்பணிந்தனன்மின்னொடுமேத்தி. 84

[கண்ணனருச்சுனனைவிட்டு மீண்டுவருதல்.]

புல்லிமன்னனையாசியுமங்கைபாற்புகன்றே
யொல்லைநம்புரிமேவுதிரெங்கிளையொருங்கே
யெல்லிரண்டினிலெதிர்துமென்றியைவனபலவுஞ்
சொல்லிமீண்டிரண்டோசனைவந்தனன்றூயோன். 85

[தூதர்கள் பலராமனிடஞ் செல்லல்.]

அன்னபோழ்திருதூதர்களடுகளத்திருந்தே
மின்னல்போல்விரைந்தோடியேவெண்ணிறத்தண்ணல்
முன்னருற்றடிமிசைவிழுந்திரங்கிமுன்னிற்ப
வென்னையுற்றவையெனநிகழ்ந்தவையவரிசைத்தார். 86

[தூதர் யுத்தத்தினிலைமை கூறல்.]

விழுந்தநாற்படையிளவலும்விமலனும்வெம்போ
ரழிந்தயர்ந்தனர்பின்னொடுமகன்றனனென்றே
மொழிந்தகாலையின்முகத்திருவடவைத்தீமுடுக
வெழுந்தனன்புவியாவையுந்துணுக்கமுற்றேங்க. 87

[பலராமன் போர்க்கோலங் கொண்டெதிர்தல்.]

உலகிடந்தவல்லுளிமருப்பினுமிகவுரனா
ரலமெடுத்தனனணிந்தனன்வஞ்சிதேரடுத்தான்
சலதிப்படையுடுவெனத்தற்புடைசூழ
நிலவெனத்தனித்திலங்கினனீலவம்பரனே. 88

இந்தவெம்படையிந்திரப்பிரத்தமட்டெழுமென்
றந்தரத்தவரறைந்திடப்பல்லியமார்ப்ப
முந்துநாற்படைவரவெழுந்தூளிகண்முடுகிச்
சிந்துவைமறைத்திடமுனைக்களத்தெதிர்சென்றான். 89

[போர்க்களத்தைக் கண்டு பலராமன் றுயருறல்.]

சிதைந்ததானைகண்டாகுலித்திரக்கமுஞ்சினமுந்
துதைந்தநெஞ்சொடுநின்றனனவனடிதொழுதா
ரதிர்ந்தபேரொலியறவழகறச்செந்நீரளற்றிற்
புதைந்ததேர்விடுஞ்சாத்தகிமுதலினோர்போந்து. 90

உடற்கறைத்தொகைமலிந்திடவுதயபானுவிற்ற
னடிக்கண்வீழ்ந்தெழுமிளவலைப்புல்லியாகுலித்துக்
கடக்கரும்வலிக்கண்ணனெங்கெனக்கருதலனை
மடக்கச்சென்றனனென்றனர்வசைபெறநின்றோர். 91

[பலராமனைக் கண்டு கண்ணன் வணங்கல்.]

அந்தவாணிகேட்டனைவருமுடன்வரவென்றே
விந்தைநாயகற்கலந்தந்தவிசயனைவெல்லச்
சிந்தைகொண்டுதன்றேரினையோசனைசெலுத்தத்
தந்தவண்ணன்முன்வந்தெதிர்தாழ்ந்தனன்றம்பி. 92

தாழ்ந்ததம்பியைபிராமநம்பியுமெதிர்தழுவி
வீழ்ந்தழிந்திடநம்படைவென்றிகொள்விசயன்
வாழ்ந்திருந்தநன்குணர்த்துவநங்கைவாராதா
லாழ்ந்தசிந்தையோயகன்றதென்னவனைநீயின்று. 93

புயவலித்திறம்புகன்றுபோந்தெனையலாற்புரிந்த
வயமிதாகும்நீயெனுஞ்சங்கவண்ணனுக்கையா
வயரயான்சிறிதவன்சரத்தத்ததியந்தக்
கயவனோடினன்யானரைக்கணத்திற்கண்விழித்தே. 94

பற்றிவெஞ்சிறையிடுவலப்பதகனையென்னுத்
தெற்றெனத்திரியோசனைசென்றெதிர்வழியா
யுற்றமாந்தரைவினவயாம்யோசனைமூன்றின்
விற்றடங்கையாற்கண்டனமென்றனர்மீண்டேன். 95

[பலராம னிந்திரப்பிரத்தத்திற் சுயர்செயவேதமேமேனல்.]

என்றுமாதவனியம்பவிரேவதிகொண்க
னின்றுயாவருமிவ்வழியிந்திரப்பிரத்தஞ்
சென்றுவெஞ்சமஞ்செயநடமின்னெனச்செப்பக்
கன்றுவெள்ளிலங்கனிக்கெறிகரியவன்கழலும். 96

[இதுமுதல் 5-கவியால், போர்த்தேதல் ஞாயமன்றெனப்
பலராமனுக்குக் கண்ணன் கூறுதல்.]

அடையுநினதருள்வாக்குக்கெதிர்வாக்கொன்றின்
றுயினுமொன்றறைவலகுதறிஞர்க்கொவ்வா
மடமொழியாயினுமருள்செய்துணர்கத்தூய
மடலவிழ்பைங்குவளையந்தாரமத்தின்மைந்தன்

முடிசிதறச்சமர்புரிதனன்றேவண்ணல்
மொழிவழிபோழுவரையுமுனிதனன்றே
தொடையறவிர்குழல்குந்திமாயிநம்முன்
றுடித்துவிழுந்தடித்தலறித்துயரநன்றே. 97

இதனையெணாதேகியமர்செயின்யாம்வேறற்
றெளிதெனநீநினையேலின்றறிந்தேமின்னுங்
கதமுறிடிம்பனைப்பகனைச்செகுத்தோன்றண்டுன்
கலப்பையெதிர்நிற்கவுமாங்கண்ணோர்பத்துச்
சதமுறுங்கோபதிசுதனென்னுடனேதாக்கத்
தகுந்தகுமற்றவர்க்குமவர்தமரோயின்ன
விதமமர்செய்திடினவரோதோற்கவேத
விதியுண்டோயாந்தோற்கும்விதிநோவோ. 98

அன்றியுமென்சின்மதியினாய்ந்சமற்றொன்
றலைறகுவலஃதாய்தனினக்கடுக்கும்நெஞ்சங்
கன்றலகன்றைவரொடுமந்தன்மைந்தர்
கலந்திருந்தாரவரிதனைக்கண்டாலோர்கால்
வென்றிபுனைவீடுமனேமுதலாமெண்ணில்
வீரரொடும்வருவர்வரின்விசயமென்ப
தென்றுவரும்யாமிதனையெண்ணாதேகி
யிடையினிழுக்கிருவிதத்துமெய்திற்றன்றே. 99

யாமிவண்வாளாவிருக்கினிழுக்கன்றேவென்
றெனைவினவினிழுக்கன்றெவ்விதங்கூறென்னின்
மாமன்மகளெனுமுறைபால்வலிதிற்கொண்டான்
வாள்விசயனிதுவுமொருவழக்காமென்னப்
பூமிபுகலும்மதியாதெமையன்றச்சம்
பூத்தேமையலின்வேடம்புகுந்தானின்னுஞ்
சாமுறைசெய்திடினவனைக்கைனியாய்நந்
தங்கைபடுஞ்சஞ்சலம்யார்தவிர்க்கவல்லார். 100

இத்தகவிற்கத்தனன்னையுளமெப்பாலென்
றியாமறியேமில்லனாகியிற்றைநாளெம்
வித்தகநங்கிளையுடனன்குசாவிநாளை
மேவுதுமிந்திரப்பிரத்தம்வெம்போர்க்கென்னச்
சித்தர்முனிவரரியக்கருரகர்யோகர்
தேவர்முதல்யாவருமேதெரிதற்கொண்ணாச்
சுத்தகுணமாமாயப்பொருளாய்வையச்
சூத்திரதாரியுமானசோதிசொன்னான். 101

[பலராமன் முதலினோர் திரும்பித் தம்மில்லஞ் சேர்தல்.]
சொன்னவைகேட்டலப்படையோன்மிருதியுண்டோ
சுருதியின்றிச்சுடரின்றித்தோன்றமோகண்
அன்னையின்றிமகவுண்டோவதுபோனின்னை
யறியாதொன்றடையாவென்றறையக்கண்ணன்
அன்னதகவடியேன்செய்குறையுண்டேனு
மடிகளன்றிச்சமித்தருளையளிப்பார்யாரே
யென்னவொன்றுங்கிளத்தலற்றச்சங்கவண்ண
னியாவருஞ்சூழ்ந்துறப்போய்த்தம்மில்லம்புக்கான். 102

வேறு

[இதுமுதல் 2-கவிகள், யாதவர்யாவரு மிந்திரப்பிரத்தத்தீற்து வருதல்.]
அன்றுபோய்மற்றைவைகலச்சுதன்றன்னைநோக்கிச்
சென்றதுசெல்கநின்றசீர்மைகடிறம்பலின்றி
யின்றுயாமைவரூர்புக்கியாவையுஞ்செய்துமீண்டு
துன்றுதுந்துவரைக்கென்னச்சுக்கிலவண்ணன்சொன்னன். 103

அற்றமுகென்னுமாயனலத்திறையத்தனன்னை
சுற்றமுங்கிளையும்வேட்டதூயபன்னியர்மற்றோருந்
தெற்றெனப்பயணபேரிதெழித்துநாற்படையுங்கூட்டி
முற்றியகடலிற்பொங்கிமுடுகினர்வழிமேற்சென்றார். 104

போர்புரிசருக்க முற்றும்.

(ஆக சருக்கம் 29 - க்கு, கவிகள் - 1418.)

---

## [30-ஆவது - மீட்சிச் சருக்கம்.]

இச்சருக்கத்தால், அருச்சுன னிந்திரப்பிரத்தஞ் சேர்தலும், பலராமன் முதலோர்வந்து சுபத்திரைக்கு சிறந்தசீதனமளித்து துவாரகைக்கு செல்லுதலும், அருச்சுனன் முதலிய ஐவரும் சுகமே அரசுபுரிந்திருத்தலும் கூறப்படுகின்றன.

[அருச்சுனன் இந்திரப்பிரத்தஞ் சேர்தல்.]
இங்கிவரிவ்வாறேகவெம்பிரான்விடைபெற்றேகும்
பங்குனனங்கையோடும்பலகிரிகழிகானீங்கிச்
சங்கையினகரம்நாடுதணந்துபின்றவராதென்றுந்
திங்கண்மும்மாரிபெய்யுமிந்திரப்பிரத்தஞ்சேர்ந்தான். 1

அங்கர்மதியங்கண்டவாழிபோன்மகிழ்ச்சிபொங்கப்
பன்னியுந்தானும்வீதிபவனிபோந்தன்னைபாதம்
முன்னவர்சரணம்போற்றிமொழிந்தநல்லாசிபெற்றுப்
பின்னவர்பணியவாசிபேசிவீற்றிருந்தான்மன்னே. 2

மங்கையுந்தன்சீர்மாமிமலர்ப்பதமுவந்துபோற்றி
யங்கிதந்திடவெழுந்தாளடியிணைபணிந்துநிற்ப
நங்குலமணியாமென்னநன்மகற்பெறுவாயென்றே
யங்கிருவோருநங்கைக்காசிதந்துவந்தாரன்றே. 3

[தருமராச னருச்சுனனை வினவுதல்.]

பரிவுடன்மாந்தர்பல்லோர்பரவுவேத்தவையினோர்நா
ளிருதிருமுன்றேயன்றியேற்றமுற்றிருந்தபான்மை
பெரிதுளமகிழயாரும்பேசுதியென்னத்தன்மன்
றிருவுளமுவந்துகேட்பத்தேவர்கோன்செம்மல்செப்பும். 4

[அருச்சுனன் தருமனுக்கு யாத்திரைவரலாறு கூறுதல்.]

கங்கைநீர்குடைந்துகீழ்பாற்கட்செவிபுலகங்கண்டோர்
மங்கையைமணந்தவாறுமைந்தனையளித்துப்பின்னர்
பொங்குபன்னதியினூடித்தென்றிசைபொலியப்போந்து
தங்கியமுனிவர்சர்ப்பசயிலத்தைச்சார்ந்தவாறும். 5

அவணிருந்தயன்மகஞ்செயகரமற்றடைவேபுற்றுச்
சிவனடம்புரிந்தவூருந்திகழ்பலதலமுங்கண்டே
யுவனைமுற்றேத்துஞ்சீர்த்தியுயர்திருவரங்கத்தெம்மா
தவனடியுவந்துபோற்றியாலவாய்சார்ந்தவாறும். 6

அங்கர்மன்னன்மின்னையனைந்தொருமகப்பேறீய்ந்த
பின்னர்வான்சேதுதோய்ந்துபிறங்குபஃறலஞ்சேவித்து
மின்னிவான்பொழியச்செந்நெல்மிகுந்தநற்கொங்குதேயந்
தன்னையுங்கண்டுமேலைச்சாகரஞ்சார்ந்தவாறும். 7

[illegible]வெகுளிதன்னாலிடங்கராமடவாருற்ற
வைவந்து[illegible]ந்துசாபமகற்றியவாறும்நீல
கந்தரன்றன்னை[illegible]திக்கந்தசன்பெறுமிலிங்கம்
[illegible]கோ[illegible]ணவளநகர்வந்தவாறும். 8

அத்தகுமிலிங்க[illegible]வனடிபணிந்தகன்றுபோந்து
[illegible]ற்றவிசமெலாம்விரித்தேபின்சு